சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

# சிவஞான பூஜா மலர்

துந்துபி ஆண்டு (1982)



பிரசுரம்


## ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா

மேலமாம்பலம், சென்னை-600 033.


சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ

சிவமயம்

# ஆங்கீரஸ சர்மாவின்

# ஆறு வேண்டுகோள்

முழு முதற் கடவுளான பரமேச்வரனின் செந்நெறியிற் சார்ந்த நாமனைவரும் செய்ய வேண்டியவைகளாவன.



1. விபூதி ருத்திராட்சம் தவறாது அணிதல் வேண்டும்.

2 சிவாலய தர்சனம், சிவ நாமம் திருவைந்தெழுத்து ஜபம் முதலியவைகளை முறையே செய்ய வேண்டும்.

3. திருமுறைகளை ஏதேனும் ஒரு முறையில் தினசரி பாராயணம் செய்யும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டும்.

4. கற்பனைக் கதைகள், நவீனங்கள் வார மாதப் பத்திரிகைகள் இவைகளை படிப்பதை படிப்படியாகக் குறைத்து சைவ ஞான நூல்கள் சிவபுராணங்கள் ஆகியவற்றைப் படிக்க நேரம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

5. பெரிய புராணம், ஸ்காந்த புராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய புராணப் பிரசங்கங்கள் எங்கு நடந்தாலும் அவைகளை ஆர்வத்துடனும் பக்தியுடனும் சிரவணம் செய்ய வேண்டும்.

6. பல அன்பர்கள் ஒன்று சேர்ந்து கூட்டு வழிபாடுகள், சமயச் சொற்பொழிவுகள், மகாநாடுகள், புராணப் பிரசங்கங்கள் ஆகியவற்றை நடத்த வேண்டும்.

இம்மாதிரியான காரியங்களில் ஈடுபடுவதைச் சிறந்த சிவ புண்ணியமாக அன்பர்கள் எண்ணி ஆர்வத்துடன் செயல்படுமாறு வேண்டுகின்றேன்.

சிவம்



பொன்னடி போற்றுதும் பொன்னடி போற்றுதும்
என்னையும் ஆண்டநின் பொன்னடி போற்றுதும்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாத பரம்பரை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளவர்களால் இந்த சிவஞான பூஜா மலர் 19-1-1983, புதன்கிழமை, மேலமாம்பலம் ஸ்ரீ சங்கர மடத்தில் வெளியிட்டருளப் பெற்றது.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சிவஞான பூஜா மலர்

துந்துபி ஆண்டு (1982)

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே.

பதிப்பாசிரியர் :


சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்,
சிவபுராணச் சக்கரவர்த்தி, சிவபுராணக் காவலர்,

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா

(சங்கரனடிமை)





பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600033.

விலை ரூ. 6-00]   19-1-1983   [தபாலில் ரூ. 6-50

உ

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர்

## சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி









திருஞான சம்பந்தர்   திருநாவுக் கரசர்   சுந்தர மூர்த்திகள்   மாணிக்க வாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

# பதிப்பாசிரியர் பணிவுரை

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே

அம்மையப்பன் திருவருள் இராயபுரம் ஸ்ரீ அங்காள பரமேச்வரி சந்நிதியில் அர்ச்சகர் சிவஸ்ரீ V. S. வாகீச்வர சிவாசாரியார் அவர்கள் மூலம் வெளிப்பட்டு, அதனைத் தொடர்ந்து மாங்காடு ஸ்ரீ காமாக்ஷியம்மன் கோவில் தலைமை அர்ச்சகர் தபஸ் காமாக்ஷி தேவி உபாசகர், தர்ம ரக்ஷாமணி சிவஸ்ரீ V. D. ஏகாம்பர சிவாசாரியார் அவர்கள் மூலம் பெருகி 1981 வது ஆண்டு சிவஞான பூஜா மலர் வெளியிடப் பட்டது பற்றிய விவரங்கள் சென்ற ஆண்டு மலரில் காணலாம். இவ்வருடம் சிவஞான பூஜா மலர் வெளியிடுவது பற்றி ஆலோசித்த பொழுது ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள் ரூ. 501-00 நன்கொடை அளித்து ஊக்கமூட்டினார்கள், இராயபுரம், மாங்காடு சிவாசாரியார்களும், மற்றும் சென்ற ஆண்டு நன்கொடை உதவியவர்களும் தொடர்ந்து இவ்வருடமும் உதவினார்கள். எனவே 1982 சிவஞான பூஜா மலர் உங்கள் கரத்தில் இதோ அலங்கரிக்கின்றது.

சென்ற ஆண்டு போலவே குருமஹா சந்நிதானங்கள் ஆசியுரையும், பேரறிஞர்கள் கட்டுரையும், வியாபார நிறுவனங்கள் தமது விளம்பரங்களையும் அளித்து ஆதரவளித்தனர். தேனீக்கள் பலமலர்களில் உள்ள தேனை எடுத்துச் சேர்த்துத் தருவது போல அறிஞர் பெருமக்கள் பலநூல்களில் உள்ள சிவபரத்துவம் என்ற தேனைத் திரட்டித் தந்துள்ளனர். ஆசியுரை அளித்தருளிய குருமஹா சந்நிதானங்கட்கு அடியேனது அனந்தமான வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். கட்டுரைகளை அன்பளிப்பாக வழங்கியருளிய அறிஞர் பெருமக்கட்கும், விளம்பரங்கள் தந்துதவிய வியாபார நிறுவனங்கட்கும், நன்கொடைகளை மிகத் தாராளமாக மனமுவந்து அளித்தருளிய ஆஸ்திகப் பெரியோர்கட்கும் அடியேனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிவம்



ஓம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம :

# ஸமர்ப்பணம்

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா(று)
அங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

—பரஞ்சோதி திருவிளையாடல் புராணம்.

சனகர், சனந்தர், சனத்குமாரர், சனாதர் ஆகிய அருமறை முனிவர் நால்வர்க்கு அன்று ஆலமர நீழலில் மோனமுத்திரை காட்டி ஞானோபதேசம் செய்ய சிவபிரான் மேற்கொண்ட குருமூர்த்தமான ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தியின் திருவடிகளில் இந்த சிவஞான பூஜா மலரை ஸமர்ப்பணம் செய்கின்றேன்.

—ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா.

# பொருளடக்கம்

## ஒரு சொற் கேளீர்!

சிவ ஞான பூஜா மலர் உங்களைத் தேடி வருகின்றது. இதன் மூலம் கிடைக்கும் தொகை மூவர் தமிழ் மாலைக்கும், ஆசிரியரது சிவபுராண ஞான பூஜைக்கும் பயன்படுத்தப் படும். எனவே இதனைப் பெறும் பெரியோர்கள் இதற்கெனத் தனியாக நன்கொடை இதுவரை அனுப்பாமலிருந்தால் இம்மலரின் விலையைத் தபால் செலவு சேர்த்து அனுப்ப வேண்டுகிறோம். விரும்பினால் விலைக்குமேல் நன்கொடை சேர்த்து அனுப்பலாம். ரூ. 10-ம் அதற்கு மேலும் கிடைக் கும் தொகைகள் மட்டும் அடுத்த மலரில் பெயர்களுடன் பிரசுரிக்கப்படும்.

—பதிப்பாசிரியர்.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள். (68-வது பீடாதிபதி)



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்.

உ

ஸ்ரீ:

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய பரம்பரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

ஸ்ரீ மடம் ஸம்ஸ்தானம்

காஞ்சீபுரம்-631 502.

## ஸ்ரீமுகம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய
ஸ்ரீமச்சங்கர பகவத்பாதப்ரதிஷ்டித
ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிப ஜகத்குரு
ஸ்ரீமச்சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாதேசானுஸாரேண
ஸ்ரீமஜ்ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதை: க்ரியதே

நாராயணஸ்ம்ருதி:

காஞ்சீபுரம் 3-11-82

ஆதிசங்கர பகவத்பாதாள் ஷண்மதஸ்தாபனம் செய்தார். அதில் சிவனை மையமாக வைத்து சிவபஞ்சாயதன பூஜை முறையும் ஏற்படுத்தி பரமசிவன் மூலமாகத்தான் ஞானம் பெற்று மோக்ஷம் கிட்டுமென்றும் வலியுறுத்தினர். சிவானந்தலஹரீ போன்ற பல நூல்களையும் எழுதி அருளியுள்ளார்.

அப்படிப்பட்ட சிவபிரானுடைய சிவபரத்துவத்தைத் திரட்டித் தொகுத்து ஒரு மலராக வெளியிடுவது கேட்டு சந்தோஷிக்கிறோம். இதுபோன்று மேன்மேலும் சிவகைங்கர்யத்தில் ஈடுபட்டு தத்துவ ஞானத்தை அடையவேண்டுமாய் ஆசிர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி;

உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்

26-வது குருமகாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளிய ஆசியுரை

தருமபுரம்
மாயூரம் (அஞ்சல்) 609001
1-12-1982



ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே.

**சிவபூஜைச் சிறப்பு**

உலக வாழ்க்கையில் மக்கள் தமக்குக் கருவி கரணங்களைத் தந்து நல்வாழ்வு வாழவைக்கும் கடவுளை வழிபடுதல் தலையான நன்றிக்கடனாகும், அறியாமையில் அழுந்தி நிற்கும் உயிர்கட்கு உடலைத்தந்து செயல்கள் புரியுமாறு அறிவையும் உணர்வையும் அருளி உயிர்களின் அறியாமை அகல உதவும் இறைவனது பெருங்கருணையை எண்ணாதவர் பிறப்பின் பயனை உணராதவர்.

இறைவழிபாட்டில் தலையானது சிவபூசை. திருமால் முதலிய தேவர்கள் பலரும் இம்மண்ணுலகில் வந்து

இறைவனைப் பூசித்து நல்வரங்கள் பலவற்றைப் பெற்றதைத் தலபுராணங்கள் பலவும் தெரிவிக்கின்றன.

"மானுடப் பிறவி தானும் வகுத்தது மனம்வாக் காயம்
ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் தனைஅர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூமர் ஒன்றையும் உணரார் அந்தோ"

என்று இரங்கிக் கூறுகின்றார் அருணந்தி சிவம். சிவபூசையில் மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களாலும் இறைவனைப் பக்தி செய்யும் வாய்ப்பைப் பெறுகிறோம். அன்பர்கள் இறை வழிபாட்டில் ஈடுபட்டுப் பிறவிப் பயனைப் பெறுவதற்கு ஓரளவேனும் முயலுதல் வேண்டும். நமது ஆதி குரு மூர்த்திகளாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஆறு கடமைகளை நமக்கு வலியுறுத்துகிறார்.

"ஆசையறுய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணுய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்?"

என்பது அவரது திருவாக்கு. அன்பர்கள் இப்பாடலில் கூறப்பெறும் கடமைகளையும், திருமுறை ஓதலில் தொடங்கிப் படிப்படியே சினந்தவிர்தல் ஐந்தெழுத் தோதல் சிவபூசை செய்தல் முதலியவற்றைக் கடைப் பிடித்து உயிர் வாழ்வார்களாக.

**வாழ்த்து**

சமய நூற்கருத்துக்களையும், சமய உண்மைகளையும் மக்கட்கு எடுத்துககூறும் அன்பர் திரு. ஆங்கீரஸ வேங்கடேச சர்மா பல ஆண்டுகளாகப் பயன் கருதாது செய்து வருபவர். அவர் மேற்கொண்டுள்ள சமயப்பணி சிறக்கவும், அவர் வெளியிடும் சிவஞான பூஜா மலர் அருள் மணம் கமழ்ந்து மக்கட்குப் பயன் விளைவிக்கவும் ஸ்ரீ செந் தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம். ★

உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்
26 வது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த**
**பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருநெல்வேலி மாவட்டம் சங்கரன்கோவிலில் ஆசிரியர்
நிகழ்த்திய பெரியபுராணச் சொற்பொழிவுக்கு வழங்கியருளிய

## ஆசிச்செய்தி.

தருமபுரம்
மாயூரம் (அஞ்சல்) *609 001*
*19-7-1982*



"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே."

சைவத்திருமுறைகளில் பன்னிரண்டாவதாக இலங்கும் பெரியபுராணம் தமிழ் மக்களுக்குக் கிடைத்துள்ள அரிய கருவூலமாகும். சைவ சமயத்தின் அருமை பெருமைகளை

அறிதற்கும் இசைத் தொண்டின் சிறப்பை உணர்ந்து உய்தற்கும் உரிய இந்நூலைத் தமிழ் மக்கள் போற்றி உணரக் கடமைப் பட்டவராவர்.

சைவ மன்றங்கள் தலையாய இந்நூலைத் தொடர் விரிவுரைகள் மூலம் மக்கள் உணரும்படிச் செய்தல் இன்றியமையாதது. சங்கரன்கோவில் ஸ்ரீ அறுபத்து மூவர் குருபூசை விழாக் குழுவினர் இவ்வரும் பணியைத் தொடர்ந்து செய்து வருவதும் நிலைநிதி அமைத்துக் கொண்டாடி வருவதும் மகிழ்ச்சிக்குரியன.

இவ்யாண்டு பெரியபுராணத் தொடர் விரிவுரையை வழங்கும் அன்பர் ஆங்கீரஸ வேங்கடேச சர்மா இப்பணிக்கு முற்றிலும் தகுதியானவர். கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், பெரியபுராணம் முதலிய புராண விரிவுரைகளை கேட்டார் மகிழும்படியும் பயனெய்தும்படியும் சொல்லும் திறனுடையவர்.

திரு. சர்மா அவர்களும், சங்கரன்கோவில் அறுபத்து மூவர் குருபூசை விழாக்குழுவினரும், அன்பர்களும் எல்லா நலங்களோடு நீடுவாழ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சிவம்

---

## இந்து எனப்படுவான் யார்?

பிற உயிரினங்கள் துன்புறும் நேரத்தில் அதனைத் துடைக்க எண்ணுவதும், அங்ஙனம் துடைக்க இயலாவிடில் அதுகண்டு துன்புறுவதும் இந்து எனப்படுவான் ஒவ்வொருவனுக்கும் உரிய பண்பு.

—தருமையாதீன ஸ்ரீலஸ்ரீ குருமஹா
சந்நிதானம் அவர்கள்.

உ

சிவசிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

# ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அருளிய ஆசியுரை

திருப்பனந்தாள் – 612 504
(தஞ்சை ஜில்லா) தேதி : 22 9-1982



ஞான நூல்தனை ஓதியும், ஓதுவித்தும், நற்பொருளைக் கேட்டும், கேட்பித்தும் ஞானபூசை இயற்றி வருகின்ற சென்னை ஆங்கிரஸ எஸ். வேங்கடேச சர்மா நம் அன்பிற் குரியவர்,

தமிழுடன் ஆங்கிலமும், சம்ஸ்கிருதமும் கலந்த அறிவுத் திறம் மிக்கவராய் கற்றோர்முன் கற்ற செலச் சொல்லி நித்தமும் அரன்நாமமே சூழும் திறமுடைய இவர் வெளியிடுகின்ற சிவஞான பூஜா மலர் வழக்கமான இலக்கிய, கலை, ஆன்மீகத்துறை அறிஞரின் படைப்புக் களுடன் பொலிவுறும் எனக் கருதுகின்றோம்.

'மூவர் தமிழின்' அருமையையும், அருள் அநுபூதிப் பெருக்கினையும் 'இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டும்' வகையில் உரையாத்து வெளியிடுகின்ற 'தமிழ் மாலைகளின்' நிதியுதவி கருதித் தோன்றும் சிவஞான பூஜா மலர் சிந்தைக் கினிய செவிக்கினியதாய் முந்துற மலர்ந்து முழுமணம் பரப்ப ஆலவாயழகன் அடியிணை பரவி வாழ்த்துகின்றோம்.

சுபம்

சிவ சிவ,

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சிவஞான பூஜா மலர்

ஞானநூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல் நன்று
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை.

## சிறப்பு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமையாதீன ஸ்ரீலஸ்ரீ குருமஹாசந்நிதானம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள், ஸ்ரீ காயத்ரீ அருள்சித்தர் ஸ்ரீலஸ்ரீ காயத்ரீ சுவாமிகள் ஆகியோரது பரிபூரண அனுக்ரஹமும் ஆதரவும் பெற்றது.

## நோக்கங்கள்

1. "ஞாலம் நின் புகழே மிகவேண்டும் தென், ஆலவாயில் உறையும் எம் ஆதியே" என்ற ஆளுடைப் பிள்ளையாரின் அருமைத் திருவாக்கின்படி சிவபெருமானின் பொருள்சேர் புகழை ஞாலமெங்கிலும் பரப்பும் இயக்கமாக இம் மலர் ஆரம்பிக்கப் பட்டுள்ளது. இது ஒரு பத்திரிகையோ அல்லது சாதாரண புத்தகமோ அல்ல.

2. "தென் தமிழும், வடகலையும், தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம் புரியும் வள்ளலையே பொருளாக' என்ற சேக்கிழார் பெருமானின் வாக்குப்படி தமிழ், வடமொழி பிறமொழிகளில் உள்ள நூல்களில் உள்ள சிவபெருமானது

பெருமைகளையும், முழுமுதல் தன்மையினையும் தொகுத்து ஆண்டு தோறும் மலர் வெளியிடப்படுகிறது.

3. இந்த மலர் மூலம் மூவர் தமிழ் மாலைப் பதிப்புக்கும் சிவஞான பூசைக்கும் பொருள் உதவி தேடுவது.

**மலர் வரலாறும் வளர்ச்சியும்**

சென்ற ஆண்டு சிவஞான பூஜா மலர் வெளியிடக் காரணமாக இருந்த நிகழ்ச்சியை அந்த மலரில் விளக்கியுள்ளோம். இராயபுரம் அங்காள பரமேச்வரி அம்மன் ஆலய அர்ச்சகர் சிவஸ்ரீ V. S. வாகீச்வர குருக்கள் ரூ. 150/ ம் அதனைத் தொடர்ந்து மாங்காடு ஸ்ரீ காமாக்ஷி அம்மன் ஆலய தலைமை அர்ச்சகர் சிவஸ்ரீ V. D. ஏகாம்பர சிவாசாரியார் அவர்கள் ரூ. 250/-ம் அளித்து ஊக்கமளித்தனர். தொடர்ந்து பல பிரமுகர்கள் கணிசமான அளவு நன்கொடைகள் வழங்கினர். மலரும் சிறப்புற மலர்ந்து சிவமணம் பரப்பியதாக அன்பர்கள் பலர் பாராட்டியுள்ளனர்.

திருவருளும், குருவருளும் துணைநிற்க இந்த வருஷமும் சிவஞான பூஜா மலர் வெளியிடத் துணிவு கொண்டோம். சென்ற ஆண்டு ஊக்கமளித்த சிவஸ்ரீ வாகீச சிவாசாரியார் அவர்களும், மாங்காடு சிவஸ்ரீ தர்மரக்ஷாமணி V. D. ஏகாம்பர சிவாசாரியார் அவர்களும் தங்களது நன்கொடைகளால் ஊக்கம் அளித்தனர். காயத்ரீ அருள் சித்தர் ஸ்ரீலஸ்ரீ காயத்ரீ சுவாமிகளும் கணிசமான நன்கொடை மூலம் தமது அருள் ஆதரவினை வழங்கியருளினார்கள். சென்ற ஆண்டு போலவே ஆஸ்திக பிரமுகர்கள் பலரும் தமது நன்கொடைகளை வழங்கி ஆதரவு அளித்தார்கள். நன்கொடை வழங்கி அருளிய அனைவர்க்கும் எமது நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டு, அவர்கள் வழங்கி அருளிய நன்கொடைகளின் விவரங்களைக் கீழே கொடுத்துள்ளோம்,

# நன்கொடையாளர்கள் பட்டியல்

1. ஸ்ரீலஸ்ரீ காயத்ரீ சுவாமிகள், சென்னை-1. ... ரூ. 501-00
2. சிவஸ்ரீ தர்மரக்ஷாமணி V.D. ஏகாம்பர சிவாசாரியார், மாங்காடு. ... ரூ. 200·00
3. சிவஸ்ரீ வாகீச்வர சிவாசாரியார், ராயபுரம், சென்னை-13. ... ரூ. 150-00
4. P.V. ஸ்ரீதரன், B.Com., F.C.A., சென்னை-17. ... ரூ. 100-00
5. ஆஸ்திகமணி A. சுப்பிரமணிய ஐயர், M.A, B.L. அட்வகேட், சென்னை-1. ... ரூ. 100-00
6. R.B. முத்துசாமி செட்டியார், தேவாரம், மதுரை ஜில்லா. ... ரூ 100-00
7. S. ராமமூர்த்தி, B.Com., A.C.A., மேலமாம்பலம், சென்னை-33. ... ரூ. 100 00
8. M.E.C. ஜயராஜ், ஆலோசகர், இந்து சமயமன்றம்ராயபுரம், சென்னை-31. ... ரூ. 100-00
9. ஸ்ரீமத் அய்யாபுவா ராமதாஸி, ஸஜ்ஜன்கட். P.O. ... ரூ. 33-00
10. அறச்சுடர் கயப்பாக்கம் முத்துலிங்கா ரெட்டியார், சென்னை-31. ... ரூ. 30-00
11. K.V. மூர்த்திநாராயண செட்டியார், பாப்பாரப்பட்டி. ... ரூ. 25-00
12. R. மாத்ருபூதம் ஐயர், B A., B L., அட்வகேட், சென்னை-33. ... ரூ. 20-00
13. S. ராமன், P.W.I./S.E.Rly, கோராபுட். ... ரூ. 25-00
14. T. விச்வநாதன், பெங்களூர்-75. ... ரூ. 25-00

15. சிவஸ்ரீ கணேச சிவாசாரியார், ஸ்ரீகச்சபேச்வர ஸ்வாமி தேவஸ்தானம் சென்னை-1. ... ரூ. 25-00
16. A. சாம்பசிவம் ஐயர், மேலமாம்பலம், சென்னை-33. ... ரூ. 25-00
17. R.C. கதிர்வேல், கலயம்புத்தூர், P.O. ... ரூ. 25-00
18. V.N. கணேசன், B.Com., மஹாலிங்கபுரம், சென்னை-34. ... ரூ. 25-00
19. ஆஸ்திகரக்ஷாமணி ஸ்ரீமான் V. சின்ன ஸ்வாமி ஐயர், சென்னை 17. ... ரூ. 50-00
20. N. சத்தியமூர்த்தி, B.Com., சிதம்பரம்... ரூ 25-00
21. G. N. பிரபாகரன், தூத்துக்குடி. ... ரூ. 25-00
22. T.R. அருணாசலம், மீனாக்ஷி ஜ்வல்லரி சென்னை-17. ... ரூ. 25-00
23. V. மனோஹரன், B.Sc., உத்தம-பாளையம் ... ரூ. 25-00
24. தெய்வநெறிச்சிலர் R. ரங்கநாதன், B.A., விருகம்பாக்கம், சென்னை-92. ... ரூ. 25-00
25. V. K. கணபதி ஐயர், லாயிட்ஸ் ரோடு, சென்னை-86. ... ரூ. 25-00
26. T. நாகரத்தினம், மதுரை. ... ரூ. 15-00
27. C.V. விச்வநாதன், கர்நாடகா பாங்க், கோயமுத்தூர். ... ரூ. 11-00
28. சைவப்பிரசங்கமணி A.T.A. ஈச்வர முதலியார், சென்னை-61. ... ரூ. 10-00
29. S.P. லக்ஷ்மணன் செட்டியார், சென்னை-17. ... ரூ. 7-00
30. L.K. முத்து, தேனாம்பேட்டை, சென்னை-18. ... ரூ. 10-00

சிவம்



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர
ஆதீனம் 26-வது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
கயிலை மாமுனிவர், காசிவாசி
ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள்



திருக்கயிலை தரிசித்த திருப்பனசை முனிவர்க்கு
திருக்கயிலை மாமுனிவர் என்றதொரு நல்விருதை
திருத்தருமை ஆதீனக் குருமஹா சந்நிதானம்
விருப்புடனே வழங்கிய அருமைத் திருக்காட்சி

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சிவ சின்னங்கள்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
68வது ஜகத்குரு மஹாசந்நிதானம்

ஸ்ரீமத்
சந்த்ரசேகரேந்த்ர
ஸரஸ்வதி
சுவாமிகளின்
அருள்வாக்கு

பரமசிவனுக்கு உரிய ஐந்து அடையாளங்களில் பஸ்மமாகிய விபூதி ஒன்று. அவனுக்கு ப்ரீதியான மற்ருெரு அடையாளம் ருத்ராக்ஷம். பில்வம் மற்ருென்று. இந்த பில்வம் மஹாலக்ஷ்மி வாசம் செய்யும் விருக்ஷம். பஸ்மம் ஸத்யஸ்வரூபமானது. அதை ஸாக்ஷாத் பரமசிவனுடைய ஸ்வரூபமே என்று சொல்லவேண்டும். பிரபஞ்சமெல்லாம் நசித்தாலும், தான் அழியாமல் இருப்பவன் பரமசிவன். உலகத்திலுள்ள பொருள் எல்லாம் எரிந்துபோனுல் பஸ்மம் ஆகிவிடுகிறது. பஸ்மத்தை எரித்தால் அது அழியாமல் பஸ்மமாகவே இருக்கும். சிவஸ்வரூபமும் அத்தகையதே.

ருத்ராக்ஷத்தைச் சிவபெருமானுடைய அடையாளமாகப் பெரியவர்கள் சொல்லுகிருர்கள். ருத்திரருடைய நேத்திரம் அது. அதைத்தமிழில் "திருக்கண்மணி" என்று சொல்லுகிருர்கள். மற்ற மரங்களுடைய விதைகளுக்கு இல்லாத ஒரு சிறப்பு ருத்ராக்ஷத்துக்கு உண்டு. மற்றப் பழங்களில் உள்ள விதைகளுக்கு உள்ளே துளே இல்லே. துளசி

மணியை அல்லது தாமரை மணியை அல்லது ஸ்படிக மணியை மாலையாக அணியவேண்டுமானால் அந்த மணிக்கும் துவாரம் செய்தே கோத்து அணியவேண்டும். இயற்கையில் துளையோடு உண்டாவது ருத்ராக்ஷம் ஒன்றுதான். ருத்ராக்ஷத்திற்கு முகங்கள் உண்டு. ஸாதாரணமாக நாரத்தம் பழத்திற்குள் ஐந்தாறு சுளைகள் இருக்கும். அதேபோல் ருத்ராக்ஷத்திலும் முகங்கள் உண்டு. பஞ்சமுகம் உடைய ருத்ராக்ஷமே அதிகம். சுப்பிரமணிய பக்தர்கள் ஆறுமுகத்திற்கு ஏற்றது ஆறமுக ருத்ராக்ஷம் என்று அணிவார்கள். ஒரே முகமுடைய ஏகமுக ருத்ராக்ஷமும் உண்டு. அது கிடைப்பது அரிது. இரண்டு முகம், மூன்று முகம், நான்கு முகம் என்று ருத்ராக்ஷங்களில் பலவகை உண்டு. ஏழு முதல் பதிமூன்று வரை ஸாதாரணமாகக் கிடைக்கும். ɔ2 முகம் உடைய ருத்ராக்ஷம் கூட அருமையாகக் கிடைக்கும். இப்படி முகங்களிலே பலவகை இருந்தாலும், எல்லா ருத்ராக்ஷங்களின் மத்தியிலும் இயற்கையாகவே துவாரம் இருக்கும். மனிதன் இதைத் தரித்து மோக்ஷஸாம்ராஜ்யத்தை அடையவேண்டும் என்பதற்காகவே இதனைப்படைத்திருக்கிறார். இந்த விதைக்கு வேறு உபயோகம் இல்லை.

பஸ்மம், ருத்ராக்ஷம், பில்வம், ஸ்படிகலிங்கம், பஞ்சாக்ஷரம் ஆகிய ஐந்தும் சைவச்சின்னங்கள். நாக்கிலே தரிப்பது பஞ்சாக்ஷர மந்திரம். பரமேசுவரனுடைய சுவாஸமே வேதம் என்று சொல்லியிருக்கிறது. வேதம் இல்லாமல் ஈச்வரனில்லை, ஈச்வரன் இல்லாமல் வேதமில்லை. வேதங்கள் நான்கு. அவற்றில் அதர்வண வேதத்தை நீக்கிவிட்டு வேதம் மூன்று "த்ரையீ வேத:" என்று சொல்வதுண்டு. ரிக், யஜுஸ், ஸாம என்று சொல்லப்படும் இம்மூன்று வேதங்களிலும் மத்தியிலுள்ள யஜுர்வேதம் பிரதானமானது. அதிலுள்ள ஏழுகாண்டங்களில் நான்காவது நடு காண்டத்தில் ஸ்ரீ ருத்ரம் இருக்கிறது. "நமோநமோ" என்று அதில் வருவதால் தெலுங்கு தேசத்தவர்கள் அதை நமகம் என்று சொல்லுவார்கள். தமிழ் நாட்டில் ருத்திரம் என்பார்கள். "பரமேசு

வரனுக்கு நம:'' என்று அடுத்தடுத்து வரும் மந்திரங்களையுடைய இந்த ஸ்ரீருத்திரத்தின் நடுவில் பஞ்சாக்ஷரம் இருக்கிறது. வேதத்திற்கு ஆபரணமாக இருப்பது ஸ்ரீருத்திரம். அதில் மத்தியமணி பஞ்சாக்ஷரம். இந்த மத்திய மணியை எடுத்து விட்டால் ஆபரணம் வியர்த்தமாகிவிடும். நெற்றிக்குத் திலகம்போல வேதத்திற்குத் திலகம்போல உள்ள இந்த பஞ்சாக்ஷரத்தில் "**சிவ**" என்று இரண்டு எழுத்துக்கள் பிரதானமானது. வேதத்திற்கு ஜீவாம்சமாக இருப்பவை இந்த "**சிவ**" என்னும் இரு அக்ஷரங்களே.

"பாவ நிவ்ருத்திக்கு ஏதாவது உங்கள் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறதா? எங்கள் தெய்வம் பாவநிவ்ருத்தி செய்யும்'' என்று அந்நிய மதஸ்தர்கள் சொல்லுகிறார்கள். 'எங்கள் தெய்வத்தினிடம் கூடப் போகவேண்டியதில்லை' எங்கள் தெய்வத்தின் நாமாவே பாவத்தைப் போக்கும்' என்று பாகவதத்திலுள்ள இந்த சுலோகம் சொல்லுகிறது.

**யத் த்வ்யக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணும்**
**ஸக்ருத்ப்ரஸங்காதகமாசு ஹந்தி தத் |**
**பவித்ரகீர்த்திம் தமலங்க்யசாஸனம்**
**பவாநஹோ த்வேஷ்டி சிவம் சிவேதர: ||**

அந்த நாமா பெரியதுகூட அல்ல. இரண்டே எழுத்தை உடையது. தங்கத்தாலும், வெள்ளியாலும் அதை எழுதி வைக்கவேண்டும் என்பது இல்லை. வாயாலே சொன்னால் பாவம் போய்விடும். யார் சொன்னாலும் அதற்குப் பலன் உண்டு. பலகாலம் சொல்லித் தவம் செய்யவேண்டும் என்பது இல்லை. பக்தியினால் ஒருமுறை சொன்னாலும் போதும். எந்தவிதமான நியமும் இல்லாமல் எப்போது சொன்னாலும உச்சாரணம் செய்யும்போதே அந்த க்ஷணமே பாவங்களெல்லாம போய்விடும். மஹாவிஷ்ணுவின் பெருமையைச் சொல்லுகிற பாகவதத்தில் சிவமஹிமை சொல்லப பட்டிருக்கிறது. ஸத்யமான ஒன்றை எங்கும் சொல்லலாம் அல்லவா?

நாக்கைச் சுத்தமாக்கிக்கொள்ள சிவநாமத்தைச் சொல்வதுபோல இருதயத்தைச் சுத்தமாக்கிக்கொள்ள ஸ்படிக ரூபமாகச் சிவபெருமானைத் தியானம் செய்யவேண்டும். மனத்தில் எதைத்தியானிக்கிறோமோ அந்த ஸ்வரூபம் ஆகிவிடுகிறோம். சுத்தஸ்படிக சங்காச ரூபமாக இருக்கிற பரமசிவனைத் தியானம் செய்தால் மனம் ஸ்படிகம்போல மலமற்றதாகிவிடும். தேஹத்தைப் பஸ்மத்தால் பரிசுத்தம் செய்து, நாக்கைச் சிவநாமாவினாலே பரிசுத்தம் செய்து, கண்டத்தில ருத்ராக்ஷம் அணிந்துகொண்டு, பில்வத்தைக் கையில் தாங்கி சிவபெருமானை ஸ்படிகஸ்வரூபமாகத் தியானித்து மனஸைப் பரிசுத்தம் செய்து அர்ச்சிக்க வேண்டும்.

சகல வஸ்துக்களும் அழிந்தாலும் கடைசியில், தான் ஒன்றுமட்டும் சத்தியமாக இருக்கிற பஸ்மத்தை நெற்றியிலும், ஸ்வபாவமாகத் துவாரங்களுடனும், முகங்களுடனும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற ருத்ராக்ஷத்தைக் கழுத்திலும், ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியின் வாசஸ்தலமாகிய பில்வத்தைச் சிரஸிலும், வேதத்தின் மத்திய மணிக்கு-நடுநாயக மணிக்கு ஒப்பாக விளங்குகிற **'சிவ'** என்னும் இரண்டு அக்ஷரத்தை நாக்கிலும், சுத்தஸ்படிகப் பிரகாச மஹாலிங்கத்தை உள்ளத்திலும் தரித்துக்கொண்டு ஜன்ம ஸாபல்யத்தை அடையவேண்டும்.

[பதிப்பாசிரியர் குறிப்பு: கலைமகள் காரியாலயம் வெளியிட்டுள்ள ஆசாரியஸ்வாமிகளின் உபன்யாசங்கள்—பாகம் 1-ல் சிவசின்னங்கள் என்ற தலைப்பில் பிரசுரமாகியிருக்கும் விஷயங்களினின்றும் தொகுக்கப்பெற்றது.



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# மஹாபிரதோஷம்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு மஹாசந்நிதானம்

## ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் அருள்வாக்கு

இன்றையதினம் மஹாபிரதோஷம். இந்த நாளில் விளக்கு வைத்த சந்தியாநேரத்திலே திரயோதசி திதி என்று இருக்குமோ அன்றைய தினம் மஹாபிரதோஷம் என்று சொல்லப்படுகிறது. இன்றைய தினமானது சனிபிர தோஷம். மிகவும் விசேஷமானது. சிவனுக்கு மிகவும் விசேஷமான நாள் ஆகும். பார்வதியும், பரமேச்வரனும் இரண்டற்ற வடிவமாக இருக்கிறார்கள். ஈசன் தான் எல்லாவற்றுக்கும் பொதுவாக இருக்கிறார். விருஷபவாக னத்தில் இருந்து காக்ஷி கொடுப்பது இன்றைய மஹாபிர தோஷத்தின் சிறப்பாகும். குடும்பத்தில் உள்ள எல்லோருக் கும் ஒரு அனுகூலம் வரவேண்டும் என்பதற்காகத்தான் ஒரே வடிவத்தில் காக்ஷி அளிப்பதாகச் சொல்லப்படுகிறது. அவர் அர்த்தநாரீச்வரராகவும், உமா மஹேச்வரராகவும் காக்ஷி அளிக்கிறார்.

சிவபுராணத்தில் இறைவனது லீலைகள் பற்றிச் சொல்ல படுகிறது. அவருக்கு காலஸம்ஹார மூர்த்தி, காமஸம்ஹார

மூர்த்தி, பசுபதிநாதர் என்ற பலவிதமான பெயர்கள் உண்டு. காமனைக் கண்ணால் எரித்தவர், காலனைக் காலால் உதைத்தவர் என்று தமிழில் பாட்டு உண்டு. தாரகாசுரன் என்று ஒரு அசுரன். அவன் தேவர்களுக்கெல்லாம் உபத்திரவம் செய்துகொண்டு இருந்தான். அவன் சிவ பார்வதியால் உண்டாக்கப்பட்ட சுப்பிரமணிய சுவாமிகள் மூலம் அழிக்கப்படுகிறான். காமனை தன் மூன்றும் கண்ணாகிய தன் நெற்றிக் கண்ணின் மூலம் எரித்தார் என்று சொல்லப் படுகிறது. அந்தக்கண் இரண்டு கண்களுக்கு மத்தியில் நெற்றி யில் இருக்கும் கண் ஆகும். நம் வாழ்க்கையிலே தியானம் பண்ணப்பண்ண நம்மிடையே உள்ள காமங்கள் எல்லாம் அழிந்துவிடும். பசுபதிநாதர் என்ற பெயர் பரமேச்வரனுக்கு உண்டு. நேபாளத்தில் பஞ்ச முகத்தோடு உள்ளார் ஸ்ரீகாள ஹஸ்தியிலும் பஞ்சமுகத்தோடு உள்ளார். பழங்காலம் தொட்டு பஞ்சமுகத்தோடு ஸ்வாமி இருக்கக் கூடியது நேபாளம் தான். மற்றவைகள் எல்லாம் இப்போதுதான் வந்தவை. இவருக்குப்பெயர் தான் பசுபதிநாதர். பசு என்றால் உயிர் இனங்கள் என்று பெயர். அப்படியுள்ள பசுக் கூட்டங்களுக்கு எல்லாம் நாதன், தலைவராக உள்ளார் என்று இதற்குப் பொருள். நம் வாழ்க்கையிலே சுகதுக்கங் கள் எல்லாம் நிறைய வருகிறது. இவைகளை எல்லாம் பரமேச்வரன் அழித்து, சமாளித்து நம்மைப் பாதுகாத்துக் கொண்டு வருகிறார். நாமும் பசுவைப் போல ஒரு உயிரினம் தான். பகவானை வழிபட்டால் எல்லாம் கிடைக்கும். லக்ஷ்மியினால் பொன்னும் பொருளும்குறைவில்லாது கிடைக் கும். சரஸ்வதியினால் அருள் நமக்கு நிறைய கிடைக்கும். பகவானை வழிபட்டால் ஜீவன்முக்தி கிடைக்கும் எனச் சொல்லப்படுகிறது. ஆதிசங்கரர் சொல்லும் போது இறைவனை வழிபடுவதன் மூலமாக நல்ல புத்திகிடைக்கும், நல்ல ஞாபகசக்தி கிடைக்கும். நல்லருள் கிடைக்கும் என்று சொல்லுகின்றார். இறைவனை வழிபடுவதன் மூலம் சிரஞ்சீவத் துவம் நமக்குக் கிடைக்கும். இறைவன் தன்னை வழிபடுபவரை

காம க்ரோதம் இல்லாதவனாக ஆக்குவான். ஞானத்தைக் கொடுப்பவன் இறைவன். அத்தகைய பரமேச்வரனுக்கு விசேஷமான நாள். நம்முடைய வாழ்க்கையிலே இன்பங்கள் ஏற்பட அந்தப் பரமேசுவரனை பக்தி பண்ணினால் தான் முடியும். எல்லா துன்பங்களையும் போக்கக்கூடியது மஹா ப்ரதோஷம். யார் ஒருவன் அந்த காலத்தில் இறைவனைக் கும்பிடுகிறானோ அவனுக்குத் தோஷமே வராது. அத்தகைய அருள் நம் எல்லோருக்கும் கிடைக்கும்.

பதிப்பாசிரியர் குறிப்பு : ஸ்ரீமத் ஜகத்குரு அவர்களின் வியாஸபூஜா சாதுர்மாச விரத சேலம் விஜய விசேஷமலரினின்றும் தொகுக்கப்பட்டது. 10-9-1977 சனிக்கிழமை மஹாபிரதோஷ தினத்தன்று வழங்கிய அருளுரை.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# நன்றுடையான் தீயதில்லான்



திருக்கயிலாய பரம்பரைத்
திருத்கருமபுரம் ஆதீனம்
26-வது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகளின்
அருள்வாக்கு.

திருஞானசம்பந்த சுவாமிகள் 1300 ஆண்டுகளுக்கு முன் இங்கே (திருச்சிராப்பள்ளி) எழுந்தருளியிருக்கும் பெருமானைத் தரிசித்துப் பாடியுள்ளார். அவர் அருளிய பதிகத்தின் ஒரு பாட்டு அனைவருக்கும் பொருத்தமான ஆசீர்வாதமாக அமைகிறது. நல்ல கருத்துக்களை நம் உள்ளத்தில் பதிய வைப்பதே ஆசீர்வாதம். உயிர்கள் உய்தி பெற்று வளர்வதற்கான நல்ல உணர்வுகளைக் கூறும் இத்தலத் தேவாரப் பதிகத்தின் முதற்பாடலில் ஞானசம்பந்கர் இரண்டு விஷயங்களை நமக்காக அருளிச்செய்துள்ளார்.

நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாக முடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன்னுள்ளங் குளிரும்மே.

இறைவன் நன்மையே நிறைந்தவன். தீமையே இல்லாத தன்மையன். மனிதர்களில் நன்மையே நிறைந்தவர்கள் எவருமிலர். தீமையே செய்யாதவர்களும் உலகில் இல்லை. பேச்சிலும் செயலிலும் தீமை காணப்பட்டால் அதனைத் தண்டிக்கச் சட்டங்கள் இருக்கின்றன. நெஞ்சால் தீமை நினைப்பாரைத் தண்டிக்க முடியாது. நமது முன்னோர்கள், சமயம் சமயம் என ஒன்று வைத்துக் கடவுள் கடவுள் என்று கூறுவதெல்லாம் நாம் இந்நெஞ்சத் தீமையை மாற்றி உய்தி பெறுதற்கேயாகும். 'நன்றுடையானைத் தீயதிலானைப்' பெருமான், நாம் கண்டு வழிபடற்கென்றே 'சிராப்பள்ளிக் குன்றுடையானை' எழுந்தருளியுள்ளான் என்கிறார் ஞானசம்பந்தர். அவன் அறமே வடிவினனாக, தீமையற்றவனாக விளங்குகின்றான் என்பதற்கு அவன் வாகனமாக இவர்ந்து வரும் காளையே சான்றாகும். அறமே வடிவமான காளை அவனுக்கு வாகனமாக அமைவதோடன்றி அவன் கொடியிலும் இடம் பெற்றுள்ளது. இவ்வுயர்ந்த தத்துவத்தை நமக்கு அறிவுறுத்தவே 'நரை வெள்ளேறு ஒன்றுடையான்' எனப் பிள்ளையார் (திருஞானசம்பந்தர்) குறித்தருளுகின்றார்.

உலகம் முழுவதும் ஆணும் பெண்ணுமாக விளங்குவதை ஊடுருவிப் பார்ப்பவர்கள் நன்கு அறிய முடியும். எல்லார் உடலிலும் வலப்பாகம் ஆண்தன்மை உடையது; வலியது. இடப்பாகம் பெண்மைக்குரியது; மென்மையானது. மின்சாரத்தில் கூட இவ்விரு திறமும் இருக்கிறது. இதனையே 'பாஸிடிவ்' என்றும் 'நெகடிவ்' என்றும் கூறுகின்றனர். தமிழில் பாயும் சக்தி, தாங்கும் சக்தி என இவற்றை விளக்குவர். இவ்விரண்டு சக்திகள் இல்லாமல் உலகம் இல்லை. சைவசித்தாந்தம் பதி - பசு - பாசம் என்ற மூன்று பொருள்களைச் சிறப்பாக விளக்குகிறது. இவற்றையே கடவுள் - உயிர் - தளை என்றும் கூறலாம். இம் மூன்று பொருள்களும் ஆண்-பெண் என்ற பாகுபாட்டோடு விளங்கி நிற்பதனை ஆழ்ந்து நோக்குபவர்கள் கண்டுகொள்ள

முடியும். கடவுள் சிவ-சக்தியாக விளங்குகிறார். உயிர்கள், ஆண் - பெண் எனப் பாகுபட்டு நிற்கின்றன. தளை எனப் படும் அறிவற்ற ஜடம், தாங்கும் சக்தி - பாயும் சக்தி என இருகூறுபட்டு விளங்குகிறது. இவ்வுண்மைகளை எல்லாம் ஆய்ந்தறிந்தே ஞானசம்பந்தர் இத்தலத்து இறைவனைப் பாடும் போது 'உமையொரு பாகம் உடையான்' என விளக்கிச் செல்கின்றார்.

அடுத்து ஞானசம்பந்தர் 'சென்றடையாத திருவுடை யான்' என இறைவனைக் குறித்தருளுகின்றார். ஆணவ முனைப்பாலோ, உடல்வலியாலோ, அறிவுத் திறத்தாலோ இறைவனைச் சென்றடைதல் என்பது முடியாது. அவன் அருள் இருந்தாலன்றி உயிர்கள் தாமே முயன்று அவன் திரு வடிகளைச் சேர்வதென்பது இயலாது. உயிர்களின் பக்குவம் அறிந்து இறைவன் அருள் செய்கின்றான். சிலவற்றைச் சிலருக்கு இறைவன் தராமைக்குக் காரணம் அவ்வுயிர்கள் பக்குவப்படாமையேயாகும். நம்முடைய குறைகளையும் குற்றங்களையும் உணரத்தக்க நிலையில் நாம் இல்லை இதனால் தான் இறைவனது அருளிப்பாட்டினை நம்மால் முற்றும் உணர்ந்துகொள்ள முடியவில்லை. இவற்றையெல்லாம் உளங் கொண்டே 'சென்றடையாத திருவுடையான்' என ஞான சம்பந்தர் குறித்தருளுகின்றார். எனவே, இத்திருப்பாடலி லிருந்து ஞானசம்பந்தர் அருளும் ஆசீர்வாதமாக நாம் கொள்ளத்தக்கது மனிதர்களுள் தீமையேயற்ற நன்றேயுடை யவர்கள் எவருமிலர் என்பது ஒன்று. பிறிதொன்று இறைவன் உயிர்களின் பக்குவமறிந்து அருள் செய்தாலல்லது உயிர்கள் தாமே அவன் அருளை அடையமுடியாது என்பது. இந்த இரண்டு செய்திகளும் நமக்குப் புரிந்துவிடுமானால், உலகியல் குழப்பங்கள் யாவும் தீர்ந்துவிடுமென்பது உறுதி.

ஒரு நல்ல மனிதரைப்பற்றி பேசுவது, நினைப்பது, விழா எடுப்பது யாவுமே மனத்திற்கு குளிர்ச்சி தருவனவாகும். தீயோர்களுக்குச் செய்வதோ நெஞ்சில் எரிச்சலை விளைவிக்

கும் என்பது உலகியற்கையாகும். இவற்றையெல்லாம் உள்ளடக்கியே 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என் உள்ளங்குளிரும்' என்றார். இறைவன் புகழைப் பேசுவதும், சிந்திப்பதும் நெஞ்சிற்குக் குளிர்ச்சி தரும் என்பதைச் சொல்லால் விளக்க முடியாது. அனுபவத்தால் தான் உணரமுடியும்.

**பதிப்பாசிரியர் குறிப்பு:** ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந்நிதானம் அவர்களின் அருளாசித் தொகுதியான **திருவருட் செய்தி** என்னும் நூலில் **நன்றுடையான் தீயதில்லான்** என்ற தலைப்பில் உள்ள கட்டுரையினின்றும் தொகுக்கப்பட்டது.

சிவம்

---

## சிவானந்த வெள்ளம்

**கலந்தீ சம்போ த்வச்சரித - ஸரித: கில்பிஷரஜோ**
**தலந்தீ தீகுல்யாஸரணிஷு பதந்தீ விஜயதாம் |**
**திசந்தீ ஸம்ஸார - ப்ரமண - பரிதாபோபசமனம்**
**வஸந்தீ மச்சேதோ ஹ்ருதபுவி சிவானந்தலஹரீ ||**

**— ஆதிசங்கரர் — சிவானந்தலஹரீ : 2.**

சம்புவே! உமது சரித்திரமாகிய நதியிலிருந்து பெருகுவதாயும், பாவமாகிற புழுதியைப் போக்குவதாயும், புத்தி என்னும் வாய்க்கால் வழிகளில் பாய்ந்து செல்வதாயும் பிறவிச் சுழலில் உண்டாகும் பெருந்துன்பத்திற்குச் சாந்தியை அளிப்பதாயும் எனது சித்தமாகிய மடுப்பிரதேசத்தில் வந்து தேங்குவதாயுமுள்ள சிவானந்த வெள்ளம் வெற்றியுடன் விளங்கட்டும்.

சிவம்

# நூல் அறிமுகம்

[கவிஸார்வ பௌமரான காளிதாஸர் இயற்றியருளிய குமாரஸம்பவ மஹாகாவ்யம்: ஸாஹிதீவல்லப, வே.ஸ்ரீ. வேங்கட ராகவாசார்யர் எழுதிய தமிழ் உரையுடன் கூடியது.

பிரசுரம் : தி. லிட்டில் ப்ளவர் கம்பெனி தியாகராயநகர், சென்னை-600 017. (1982) பக்கங்கள் : i—xxxii, 551. விலை: ரூ. 25, தபாலில் ரூ. 28-80.]

ஸம்ஸ்க்ருத இலக்கிய வானில் சுடர்விட்டு ஒளிர்ந்த விண்மீன்களுள் சிறந்தவர்களில் ஒருவரான மஹாகவி காளிதாஸரின் சிறந்த படைப்புகளில் ஒன்று அவரது குமாரஸம்பவ காப்பியமாகும். இந்தக் காப்பியத்தின் தலைப்பின் பொருள் குமரனின் தோற்றம் என்பதாகும். இக்கவியைப் பற்றிய வரலாற்றில் அவர் எக்காலத்தில் வாழ்ந்தவர் என்பதிலும் எம்மாநிலத்தைச் சார்ந்தவர் என்பதிலும் இன்னமும் கருத்து வேறுபாடு நிலவுகிறது. உவமைக்கு பெயர் பெற்ற இவரது காப்பியத்திலுள்ள சொல் நயமும், பொருள் நயமும் படிப்பவர் மனத்தில் தோற்றுவிக்கும் இன்பத்திற்கு முன் கூறிய இரண்டுமே தேவையற்றவை என்பதினால் போலும்.

இவர் எழுதியது சிவபிரானுக்கும் பார்வதிக்கும் திருமணம் நடக்கும் வரை கூறும் ஒன்று முதல் எட்டு ஸர்க்கங்களே என்றும் பின்னர் குமரன் பிறந்து தாரகனை அழித்தல் வரை கூறுவதாக உள்ளதும் இவர் இயற்றியதாகக் கூறப்படுவதுமான ஒன்பது முதல் பதினேழு ஸர்க்கங்கள்

இவர் எழுதியவை அல்ல என்றும் பொதுவான கருத்து நிலவுகிறது.

ஒன்று முதல் எட்டுவரை உள்ள ஸர்க்கங்களின் பொருள்: இமயத்தின் வருணனைக்குப் பின்னர், தன் மகள் பார்வதிக்கு வரப்போகும் கணவன் சிவனாரே என்று முனிவர் வாயிலாக அறிந்த இமவான் அம்மலையில் தங்கி தவமியற்றும் சிவனுருக்குப் பணிவிடை செய்ய தன் மகளைப் பணித்ததைக் கூறுகிறது முதல் ஸர்க்கம்.

இரண்டாம் ஸர்க்கத்தில் தாரகனால் அல்லலுற்ற வானவர் முதலானோர் நான்முகனைப் பணிவதும், பின்னர் அவர் வாயிலாக சிவனுருக்கும் பார்வதிக்கும் பிறக்கும் பாலகனே தாரகனைக் கொல்வான் என்றறிந்து இந்திரன் சிவபிரானுக்கு பார்வதியினிடம் ஈடுபாடு ஏற்படுத்த மன்மதனைப் பணித்ததும் கூறப்பட்டுள்ளன.

மன்மதன் தன் மனைவி ரதியுடனும் நண்பன் வசந்தனுடனும் சிவபிரான் தவம் செய்யுமிடத்தை அடைந்து வசந்த காலத்தைத் தோற்றுவித்து உகந்த தருணத்தில் தன் மலர்க் கணையை எய்தி சிவபிரானின் மனத்தில் சிறிது கலக்கத்தை உண்டாக்கினான். தன் மனக்கலக்கத்திற்குக் காரணம் காமனே என்றறிந்து சினந்த சிவபிரானின் நெற்றிக்கண்ணினின்றும் எழுந்த நெருப்புப் பொறி காமனைச் சாம்பலாக்கியது. இதனைக் கண்ணுற்ற ரதி உடனேயே தன் நினைவை இழந்தாள். இவையனைத்தும் மூன்றாம் ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளன.

தன் நினைவை மீண்டும் பெற்ற ரதி நடந்ததை நினைத்து பலவாறாகப் புலம்பி தன்னுயிரைவிட நினைத்த பொழுது ஏற்பட்ட ஒரு அசரீரிவாக்கு நிகழ்ந்ததற்குக் காரணம் கூறி பின்னர் மன்மதன் உயிர் பெற்றெழுவான் என்று அவளுக்கு உறுதிஅளித்து அவளைத் தேற்றியதும் நான்காம் ஸர்க்கத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

தான் நினைத்தது கை கூடாதது கண்ட பார்வதி அதைப் பெற கடுந்தவமியற்றத் துணிந்தாள். ஒரு பிரம்ம சாரி வடிவில் வந்த சிவனுர் அவளுடன் பேசி அவள் யார் என்றும் அவளது தவத்தின் நோக்கம் யாதென்றும் அறிந்து பின்னர் அவளது அழகிற்கும் சிறப்புக்கும் சிவனுர் எவ்வகை யிலும் பொருத்தமற்றவர் என்று பலவாருக வாதாட அதனுல் சினந்த அவள் அவ்விடம் விட்டு அகல நினைக்கை யில் தன் சுய வடிவில் தோன்றிய சிவனுர் அவளைத் தடுத்து நிறுத்தி அவள் தவத்தினுல் தன்னைக் கவர்ந்ததாகவும் அவள் தவத்திற்குத் தான் அடிமை என்றும் கூறுகின்ருர். இவை ஐந்தாம் ஸர்க்கித்தில் கூறப்பட்டவை.

உலக வழக்கை ஒட்டி இமவானிடம் அவன் மகளைத் தனக்குத் திருமணம் செய்விக்கக் கேட்டு ஏழு முனிவர்களை யும் தூதாக அனுப்ப, அவனும் மனம் மகிழ்ந்து ஒப்பம் கொடுத்து, முனிவர்கள் திருமணத்திற்கு நாள் குறிப் பிட்டது ஆரும் ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளது.

ஏழாம் ஸர்க்கம் அவ்விருவருக்கும் நடந்த திருமணத் தையும் எட்டாம் ஸர்க்கம் எவ்விதம் சிவபிரான் பார்வதிக்கு இருந்த அச்சத்தைப் போக்கும் வகையில் நடந்து பல்வேறு மலைப்பகுதிகளில் வாழ்ந்து இல்லறம் நடத்தினுர் என்பதையும் கூறி முடிக்கிறது.

இந்தப் பதிப்பின் சிறப்பு கடைந்தெடுத்த வெண்ணைக் கும், சுத்தம் செய்த இனிய தேனின் சுவைக்கும் ஒப்பாகும். இந்தத் தமிழுரையின் ஆசிரியர் தம நீண்டகால அனுபவத் தைப் பயன்படுத்தியும், பல்வேறு ஸம்ஸ்க்ருத உரைகளை ஒப்புநோக்கியும் இந்த சிறந்த தெளிவான தமிழுரையைப் படைத்துள்ளார். அதன் சிறப்பு முதலில் ஸம்ஸ்க்ருத மூலத்துடனும், பின்னர் பதவுரையுடனும் கருத்தும் அதன் பின்னர் தேவைக்கேற்ப மேற்கோள்கள், ஸம்ஸ்க்ருத உரை ஆசிரியர்களின் கருத்து வேற்றுமைகள் முதலானவைகளுட னும் அமைந்துள்ளதே.

ஏழாம் ஸர்க்கத்தில் சிவனுருக்கும் பார்வதிக்கும் நடைபெற்ற திருமணத்தை விவரிக்கும் கட்டத்தில் கலைமகள் பிழையற்ற ஸம்ஸ்க்ருத மொழியில் சிவபிரானை வாழ்த்தினுள் என்றும் எளிதில் பொருள் விளங்கும் பிராக்ருத மொழியில் பார்வதியைப் புகழ்ந்து பாடினுள் என்றும் செய்யுள் 90-ல் கூறிய கவி, அதற்கடுத்த செய்யுளில் அவ்விருவரும் தேவமடந்தையர் நடித்த நாடகத்தைச் சிறிது நேரம் பார்த்தனர் என்றும் கூறுகின்றுர். இந்த செய்யுளுக்கான தமிழ் உரையில் மேற்படி உரையாசிரியர் அந்த செய்யுளில் வந்துள்ள 'ஸந்தி, ரஸம்' முதலான கலைச் சொற்களை விவரிக்கும் முறையே இதற்கொரு எடுத்துக் காட்டாகும்.

இந்தப் பதிப்பில் உள்ள எட்டு ஸர்க்கங்களில் முதல் ஏழு ஸர்க்கங்களுக்குத் தமிழ் உரையும், எட்டாம் ஸர்க்கத்திற்கு மட்டும் ஸம்ஸ்க்ருத விரிவுரையும் கொடுத்துள்ளார். இந்த நூலையும், உரையையும் படித்து நாம் அனைவரும் இன்புறுவோமாக.

—Dr. N. கங்காதரன், M.A., M.Litt., Ph.D.

---

## யாரே உண்மையாக அறிந்தவர்?

**அகிஞ்சன: ஸந் ப்ரபவ: ஸ ஸம்பதாம த்ரிலோகநாத: பித்ருஸத்மகோசர:**
**ஸ பீமரூப: சிவ இத்யுதீர்யதே ந ஸந்தி யாதார்த்யவித: பிநாகிந: ||**

**— குமாரசம்பவம்: சருக்கம்—5, ச்லோ: 77.**

பரமேச்வரன் தான் செல்வமற்றவராயினும் வேண்டுபவர்க்கு வேண்டிய செல்வமளிப்பவர். சுடு காட்டில் வசிப்பினும் மூவுலகுக்கும் அவர் தலைவர். பாம்பணி முதலியவற்ருல் அச்சுறுத்தும் தோற்றம் உடையவராஞலும் சாந்த ஸ்வரூபம் உடையவர் என்ற பொருளுள்ள சிவ என்ற பெயர் பெற்றுள்ளார். அவரை உண்மையாக அறிந்தவர் யாருமில்லை.



# திருக்கயிலாய யாத்திரை



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்
கயிலைமாமுனிவர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்,

ஸ்ரீகாசிமடம் திங்கள் இதழ் ஸ்ரீகுமரகுருபரர், புரட்டாசி,
கயிலைச் சிறப்பிதழுககு வழங்கியருளியது.

பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை ஆதல் போல, உலகினுக் கருங்கலம் உயர் கயிலாயமாம். இது, காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடும் தனி முதல்வன் வீற்றிருந் தருளும் சிறப்புடையது. மூவுலகும் நான்மறையும் எண்ணில் மாதவம் வந்து எய்திய புண்ணியம் திரண்டுள்ளது போல்வது. ஊழிதோறூழி முற்றும் உயர்ந்தோங்கும் சிறப்பினது.

இத்தகைய உயர்ந்த திருக்கயிலாய மலையைக் கண்டு வழிபடப் பெற்ற புண்ணியமுடையவர்கள் நம்திருக்கயிலாய பரம்பரை தருமபுர ஆதீனத்து எழுந்தருளியிருந்து அருட் செங்கோல் ஓச்சியருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் ஆவார்கள். அவர்கள் அப்பேறு பெற்ற முதலே நமக்கும் அப்புண்ணியப்பேறு அடைய வேண்டும் என்னும் எண்ணம் திருவருளால் முகிழ்த்தது.

திருவருளால் உதித்த அவ்வெண்ணம் திருவருளாலன்றி நிறைவேறுதன்றே! கந்தர் சஷ்டியில் திருச்செந்தூர்ப் பெருமானை வழிபடும் புண்ணியம் கடந்த சில ஆண்டுகளாக நமக்குக் கிடைத்து வருகிறது. அவ்வகையில் சென்ற

ஆண்டு கந்தர் சஷ்டியில் திருச்செந்திலாண்டவன் திரு முன்னிலையில் வழிபடுங்கால், தொண்டைமண்டல ஆதீனம் சீலத்திரு குருமகாசந்நிதானம் அவர்களும் உடனிருந்தார்கள். ஈரோட்டு அன்பர் திரு. அழகப்பன் அவர்களும் உடனிருந்தார். முன்னர் அரும்பிய திருக்கயிலாய யாத்திரை செந்திலாண்டவன் திருமுன்னிலையில் மலர்வதாயிற்று. அன்றே சீலத்திரு குருமகாசந்நிதானம் அவர்களும் ஈரோட்டு அன்பரும் நாமும் திருக்கயிலாய யாத்திரை செல்ல ஆயத்தமானோம். பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் தாமும் யாத்திரையில் உடன் வர விருப்பம் கொண்டார்கள். அப்பொழுதிருந்தே வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானோம்.

இவ்வேற்பாடுகளைச் செய்யத் தொடங்கிய பொழுதே இறைவனின் அருள் பெற்றுச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தால் தென்னாட்டுத் திருத்தலங்களில் குறிப்பாகவும் சிறப்பாகவும் அமைந்த திருததலயாத்திரை ஒன்றை மேற்கொண்டோம். இராமேசுவரம், உத்தரகோசமங்கை, திருச்செந்தூர், கன்னியாகுமரி, மதுரை, பழனி ஆகிய திருத்தலங்களுககுச் சென்று வழிபாடாற்றி வந்தோம்.

குருவருளால் வைத்தபடியிருக்கமாட்டாத மாந்தர்க்குச் சித்த சலனமாம் தினம் என்பது தருமை ஆதீனம் குருமுதல்வரின் திருவாக்காகும். வடநாட்டு யாத்திரையாயினும் தென்னாட்டு யாத்திரையாயினும் குருவருள் பெறறுச் செல்வதே நம் மரபாகும். இம்முறை குருவருள் பெற்றுச் செல்வதற்கு உரிய காலம் தருமபுர ஆதீனம் குருமுதல்வரின் குருபூசை நாளாகவும் அமைந்தது. தருமை ஆதீனத்து இருபத்தாறுவது பட்டத்தில் எழுந்தருளியிருந்து அருட்செங்கோல் ஓச்சிவரும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் நம்பால மிகவும் பெருங்கருணை கொண்டவர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சொக்கநாதப் பெருமானை வழிபட்டு மாறிலா மகிழ்ச்சியில் திளைத்து

நின்று நமக்கு அருட்பிரசாதம் வழங்கும் பொழுது "இது திருக்கயிலை செல்வதற்குரிய அருட்பிரசாதம்" என அருளிச் செய்தார்கள். நாம் திருக்கயிலை செல்ல விண்ணப்பித்துக் கொள்வதற்கு முன்னமேயே கருத்தறிந்து முடிக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருள்நிலை இதுவாக இருந்தது.

குருபூசை நாளன்று தருமபுர ஆதீனத்துக்குச் சொந்த மான இருபத்தேழு தேவஸ்தானங்களிலிருந்தும் பிரசாதம் வருதலும் குருமகாசந்நிதானம் அவர்கள் ஏற்றருளுதலும் மரபாகும். அவ்வமயத்து குருமகாசந்நிதானம் அவர்கள் மட்டும் இருந்தருளி ஏற்பார்கள். இம்முறையோ நம்மை யும் உடனிருக்கப் பணித்து இருபத்தேழு தேவஸ்தானங் களின் பிரசாதங்களையும் தாம் பெற்று, நமக்கும் ஒருங்கு வழங்கியருளினர்கள். இவ்வாறு நிறைவாகக் கிடைத்த குருவருள் நமக்குத் திருக்கயிலையை வழிபட்டு வருவதற்கு மிக்க எழுச்சியையும் இன்ப மீதூர்வையும் தந்தருளியது.

வேண்டுவார் வேண்டுவதே ஈந்தருளும் பெருமானின் திருவருளால் திருக்கயிலாய யாத்திரை சென்று வருவதற்கு உரிய சூழலும் ஆயத்தங்களும் உருவாகிவந்தன 23-6-82 புதன்கிழமை புறப்படுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. நம் திருமடத்தில் நாம் நாளும் வழிபாடாற்றி வரும் சொக்க லிங்கப்பெருமானையும் செந்திற்பெருமானையும் வழிபட்டு அப்பெருமானின் திருவருளையும், அதுபொழுது தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வழங்கி யருளிய சொக்கநாதப்பெருமானின் அருள்பிரசாதத்தைக் கவசமாக ஏற்று அக்குருவருளையும் துணைகொண்டு 23- -82 புதன்கிழமை காலை ஸ்ரீகாசிமடத்திலிருந்து புறப்படலா னேம்.

ஸ்ரீகாசி விநாயகரை வழிபட்ட பின்பு உந்து வண்டி சென்னை நோக்கி விரைந்தது. மாலை 5 மணியளவில் சென்னை அடைந்தோம். புகைவண்டி நிலையத்திற்குத் தருமையாதீன

பிரசார நிலைய சுவாமிகள், திரு. கி. இராமலிங்க முதலியார் திரு. மு. அருணாசலம் பிள்ளை முதலிய அன்பர்கள் பலர் வந்திருந்து வழியனுப்பினார்கள். உடனே தில்லிக்குப் புகை வண்டிப் பயணம் தொடங்கியது. 25-6-82 வெள்ளியன்று தில்லியை அடைந்து தில்லித் தமிழ்ச் சங்கத்தில் தங்கலாயிற்று. 26-6-82 முதல் 30-6-82 வரை தில்லியில் யாத்திரைக்கான முன்னேற்பாடுகள் நடந்தன. உத்தர சுவாமி மலையில் அபிஷேக ஆராதனைகள் செய்விக்கலாயிற்று. 1-7-82 வியாழனன்று அரசாங்க அதிகாரி திரு. S. S. சிங் என்பவர் யாத்திரை செல்வோருக்கு அது பற்றிய விளக்கம் கொடுத்தார். செல்லும்வழி. வழியில் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள், தங்குமிடம், உணவு வசதி, எடுத்துச் செல்லவேண்டிய பொருள்கள், அவற்றின் அவசியம் முதலானவை பற்றி விளக்கினார்.

2-7-82 வெள்ளியன்று யாத்திரை செல்வோருக்கு மருத்துவப் பரிசோதனைகள் நடத்தப் பெற்றன. 3-7-82 சனியன்று மருத்துவப் பரிசோதனையின் முடிவுகள் தெரிவிக்கப்பட்டு யாத்திரை செய்ய அனுமதியும் கிடைத்தது. தேவையான பொருள்கள் வாங்கிச் சேகரிக்கப் பெற்றன. தில்லியிலிருந்து இந்திய எல்லையான லிப்புக் கணவாய் வரை சென்று வரும் செலவுக்காக உந்துக் கட்டணம், தங்குமிடம், உணவு, மருத்துவ வசதி முதலியவற்றுக்காக இந்திய அரசாங்கத்திடம் நபர் ஒருவருக்கு ரூ. 2500 செலுத்த வேண்டும். ஒருநபர் 420 டாலர் வரை கொண்டு செல்ல அனுமதிக்கப்படுகிறது. அமெரிக்க டாலர் சீனாவின் எல்லையில் சீன நாணயமாக மாற்றிக் கொள்ளப் பயன்படும். [1 டாலர் = 1.88 யாண், 1 யாண் = சுமார் 5 ரூபாய் யாண்என்பது சீன நாணயம்.]

3-7-82 சனிக்கிழமை காலை தொண்டை மண்டல ஆதீனம் சீலத்திரு குருமகாசந்நிதானம் அவர்களும், பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்

களும், ஈரோடு திரு அழகப்பன் அவர்களும் விமானம் மூலம் தில்லிக்கு வந்தார்கள். அன்றே அவர்களுக்கு மருத்துவப் பரிசோதனையும் முடிவும் தெரிவிக்கப்பட்டு அனுமதியும் வழங்கப் பெற்றன.

4-7-82 ஞாயிறன்று காலை 7-30 மணிக்குத் தில்லியிலிருந்து அரசாங்க அனுமதிபெற்ற பயணப் பேருந்து புறப்பட்டது. இந்தப் பேருந்தில் 27 பேர் செல்லலாம். தொண்டைமண்டல ஆதீனம் சீலத்திரு குருமகாசந்நிதானம் அவர்களும் நாமும், பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களும், நம் காரியம் பார்க்கும் R. பால சுப்பிரமணியன், S. தேவதாஸ், R. சுரேஷ் என்ற மூவரும், ஈரோடு அழகப்பன், திருமதி அழகப்பன், கிருஷ்ணன், ஈரோடு முனிசாமி, திருமதி முனிசாமி, தஞ்சாவூர் திருமதி பங்கஜம் தாஸ், பங்களூர் S. சத்தியநாராயண அய்யர், திரு ஷெட்டி, சென்னை குமார் என்போர்களும் மற்றும் வேறு மாநிலங்களைச் சார்ந்த சிலருமாக மொத்தம் 25 பேர் **"கயிலை மலையானே போற்றி போற்றி"** என்ற முழக்கத்துடன் பேருந்தில் புறப்பட்டோம். முந்திய சில தினங்களில் முதலிரண்டு யாத்திரை குழுக்கள் (First and Second Batch) சென்றன. நாம் சென்றது மூன்றுவது குழுவாகும்.

கஜிராலா என்ற இடத்தில் காலை உணவும், ருத்ரபூர் என்ற இடத்தில் நண்பகல் உணவும் வழங்கப் பெற்றன. தில்லியிலிருந்து 452 கி.மீ. பயணம் செய்த பிறகு இரவு 8 மணிக்குச் சம்பாவத் என்ற இடத்தை அடைந்தோம். இரவு அங்கே தங்கினேம். இரவில் கயிலைப் பதிகம் ஓதலும் அருளுரையாற்றலும் நடந்தன. இதேபோல் தங்கும் இடமெங்கும் இரவில் நடந்தன.

5-7-82 திங்களன்று சம்பாவத்தில் காலை உணவு வழங்கப்பெற்றது. நண்பகலுக்காக உணவு பொட்டலம் அளிக்கப் பெற்றது. காலை 7-30 மணிக்குப் பேருந்து புறப்பட்டது. பித்ராகாட் என்ற இடத்தில் நண்பகல் 12 மணிக்கு உணவுப்

பொட்டலங்கள் பிரிக்கப்பட்டன, பித்ராகாட்டிலிருந்து சிறிது தொலைவு சென்றதும் குருநானக்சாகர் என்ற அணை உள்ளது சம்பாவத்திலிருந்து 90 கி.மீ. சென்றதும் தினக்பூர் என்ற இடத்தை அடைந்தோம். இங்கிருந்து இமயமலையின் அடிவாரம் தோடங்குகிறது. மலைப் பாதையில் பேருந்து ஏறிச்சென்றது, மாலை 5-30 மணிக்கு காளிகங்கா சங்கமக் கட்டத்தை அடைந்தோம். சங்கமத்தில் நாம் மட்டும் நீராடி வழிபாடு செய்தோம். மீண்டும் பேருந்து புறப்பட்டு இரவு டார்ச்சூலா என்ற இடத்தை அடைந்தது.

டார்ச்சூலா என்ற சொல் அடுப்பைப் போல மூன்று பக்கம் மலை அடைப்புக்களையும் ஒரு பக்கம் வழியையும் உடையது என்று பொருள்படும். இந்த ஊர் இத்தகைய அமைப்புடையதால் டார்ச்சூலா என்று அழைக்கப்படுகிறது. இவ்வூர் நேபாளத்தின் எல்லை ஓரத்தில் இந்தியப் பகுதியில் இருக்கிறது. இவ்விடத்தில் கூடாரத்தில் இரவு தங்கினோம். மலை வழியில் ஊன்றி நடக்க உதவுகின்ற ஊன்றுகோல் [கம்பு] இவ்வூரில் தான் கிடைத்தது. ஒரு கம்பின் விலை ரூ 10. தில்லி முதலிய இடங்களில் இது கிடைக்கவில்லை. 6-7-82 செவ்வாய் அன்று காலைக்கும் நண்பகலுக்கும் சேர்த்து உணவுப் பொட்டலம் வழங்கப்பட்டது. டார்ச்சூலாவிலிருந்து காலை7-30க்குப் பேருந்து புறப்பட்டு 19 கி.மீ. சென்றதும் 8-30 மணிக்குத் தவாகாட் என்ற இடத்தை அடைந்தது. இவ்விடத்தோடு பேருந்து நின்று விடுகிறது. இவ்விடம் 3700 அடி உயரம். இதிலிருந்து நடை ஆரம்பமாகிறது. சாமான்களை ஏற்றக் குதிரைகள் அளிக்கப் பட்டன. நபர் ஒருவருக்கு 2 கிலோ சாமான் வரை அனுமதிக்கப்படுகிறது. அதற்கு மேல் ஒவ்வொரு கிலோவுக்கும் ரூ 15 கட்டணம் வசூலிக்கப்படுகிறது நடைப்பயணத்தின்போது உதவிக்கும் காவலுக்குமாக இராணுவத்தார் ஆறு பேர் வருகின்றார்கள். இவர்களில் ஒருவர் ஒயர்லஸ் ஆப்பரேட்டர்; மற்றொருவர் மருத்துவர், இந்த ஏற்பாடுகளை எல்லாம் "தவாகாட்"டில்

உள்ள குமான் மண்டல் விகாஸ் நிகம் என்ற நிறுவனம் செய்து கொடுக்கிறது.

தவாகாட்டில் காலை 10 மணிக்கு நடைப் பயணம் தொடங்கியது. சாமான்கள் குதிரை மேல் ஏற்றிச் செல்ல பட்டன. வழியில் இரண்டு சிகரங்கள் ஏறி இறங்கினோம். 17 கி.மீ. நடந்தபின் மாலை 5-30 மணிக்கு சிர்க்கா என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 8000 அடி. இங்கே ஓய்வு விடுதி உள்ளது. வசதிக்காக கூடாரமும் உள்ளது. இங்கே அன்று இரவு திருப்பதிகம் ஓதப்பெற்றது.

7-7-82 புதனன்று சிர்க்காவில் காலைக்கும் நண்பகலுக்கும் சிற்றுண்டிப் பொட்டலம் வழங்கப்பட்டது. காலை 7.30க்கு நடை பயணம் தொடங்கினோம். மிக உயரமான மலை ஏற்றம் ஏற்றத்தின் முடிவான இடம் ரங்ளிங்டாப் என்று அழைக்கப் படுகிறது. உயரம் 9840 அடி. அதன் பிறகு ஒரே இறக்கம். இவ்விடத்தில் பயணம் இனிமையாக இருக்கிறது. 17 கி. மீ. நடந்தபின் ஜிப்தி என்ற இடத்தை மாலை 6.30 மணிக்கு அடைந்தோம். இங்கே ஓய்வு விடுதியும் கூடாரமும் உள்ளன. சுற்றுப்புறத்தில் அப்பிள், பிளம்ஸ் முதலிய மரங்கள் இருக்கின்றன. யாத்ரீகரில் சிலர் பழங்களைப் பறிக்க முயன்றனர். அப்போது காவற்காரன் அப்பழங்கள் பிஞ்சு என்று கூறினான். அதைக்கேளாமல் சிலர் பறித்துத் தின்றனர். பிளம்ஸ் கடும் புளிப்பாக இருந்தது என்று பேசிக் கொண்டனர். ஓய்வு விடுதி, இராணுவத்தார் உடையைப்போல் பசுமை கலந்த சிமெண்ட் நிறம் பூசப்பட்டிருந்தது. இந்த யாத்திரையின் வழியில் உள்ள எல்லா விடுதிகளும் இதே நிறத்தில் இருந்ததால், இந்த நிறமுள்ள கட்டடத்தைத் தொலைவில் கண்டவுடன் "அதோ விடுதி" என்று சொல்லி உற்சாகமாக விரைந்து நடக்க ஏதுவாக இருந்தது. 8-7-82 வியாழன் அன்று காலை, நண்பகல் உணவுப் பொட்டலங்களைப் பெற்றுக் கொண்டு ஜிப்தியிலிருந்து காலை 6 மணிக்கு புறப் பட்டோம். வழி ஏற்றமும் இறக்கமுமாக இருந்தது. 8 கி.மீ.

நடந்து மாலை 3 மணிக்கு மால்பா என்ற இடத்தை அடைந்து அன்றிரவு தங்கினோம். இங்கே ஓய்வு விடுதியும் கூடாரமும் உள்ளன. நேற்று 17 கி.மீ. நடந்த நாங்கள், இன்று 8 கி.மீ. தான் நடக்க முடிந்தது. இதுவழியின் கடுமையை உணர்த்தும். 9-7-82 வெள்ளியன்று காலை உணவு முடித்துக் கொண்டு புறப்பட்டோம். வழி மிகவும் ஏற்றமாக இருந்தது. 8. கி. மீ. சென்றதும் பகல் 2 மணிக்குப் புத்தி என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 9100அடி. இரவு இங்கே தங்கினோம்.

10-7-82 சனிக்கிழமையன்று காலை 6 மணிக்குப் புத்தியிலிருந்து புறப்பட்டு 14 கி.மீ. நடந்து மாலை 3 மணிக்கு குஞ்ஜி என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 10,330 அடி. வழியில் ஏற்றமும் இறக்கமும் மிகுதியாக உள்ளன. அவ்வழி அடிக்கடி மண்சரிவுகள் ஏற்படக்கூடிய அபாயகரமானதாகவும் உள்ளது. புத்திக்கும் குஞ்சிக்கும் இடையே கர்ப்பியாங் என்ற கிராமம் உள்ளது. இங்கே அஞ்சல் நிலையம் இருக்கிறது. இதற்கு அப்பால் உள்ள இடங்களில் அஞ்சல் நிலையம் கிடையாது. குஞ்சியில் சர்ப்பக்கோவில் உள்ளது. அங்கே, உயிருள்ள சர்ப்பங்கள் வழிபடப்படுகின்றன. இவ்வூரில் கோதுமை, சோளம், பூண்டு, உருளைக்கிழங்கு முதலியன பயிரிடப்படுகின்றன. 11-7-82 ஞாயிறன்று காலை புறப்பட்டு 9 கி.மீ. நடந்து காலாபாணி என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 11,800 அடி. இவ்விடம் இந்திய இராணுவ தளத்தின் கடைசி எல்லை. இங்கே காளிகோயில் ஒன்று உள்ளது. காளிகங்கை இங்கே உற்பத்தியாகிறது என்று சொல்லப்படுகிறது. இதற்கு ஏற்ப இக்கோயிலில் காளியின் காலடிக்குக் கீழே நீரோடை ஒன்று ஓடுகிறது. நாம் மட்டும் இங்கே நீராடினோம். காலாபாணி என்ற சொல் கருப்புத் தண்ணீர் என்று பொருள்படும். இங்கு ஓடும் காளிகங்காவின் நீர் தூரத்துப் பார்வைக்குக் கருப்பு நிறமாகத் தோன்றுகிறது. கையில் நீரை அள்ளினால் நிறம் எதுவும் இல்லாமல் சாதாரணமாகக் காணப்படுகிறது.

காலாபாணி என்ற இடத்தில் கூடாரத்தில் இரவு தங்கினேம். கூடாரத்துக்கு அண்மையில் 500 அடி உயரத்தில் ஒரு மலைக்குகை தெரிகிறது. அக்குகையில் வியாசர் தவம் செய்தார் என்றும், அதற்கு வியாசர்குகை எனப் பெயர் வழங்குகிறது என்றும் அங்குள்ளவர்கள் சொல்லுகிறார்கள். மற்றும் கூடாரத்துக்கு ஒரு மைல் தொலைவில் வெந்நீர் ஊற்று ஒன்று இருக்கிறது. சிலர் அங்கே சென்று நீராடி வந்தனர்.

12-7-82 திங்களன்று காலை காலாபாணியிலிருந்து புறப்பட்டோம். நடக்கும்போது பெருமூச்சு வாங்குகிறது. இரைக்கிறது. தங்கித்தங்கி நடக்க வேண்டி இருக்கிறது. சிறிது இடர்ப்பாட்டுடன் 8 கி மீ. நடந்து நாபிடாங் என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 13,000 அடி. இரவு அங்கே தங்கினேம். திருப்பதிகம் ஓதல், அருளுரையாடல் ஆகியவை நடந்தன.

13-7-82 செவ்வாயன்று நாபிடாங்கிலிருந்து காலை 6 மணிக்குப் புறப்பட்டு 10-30 மணிக்கு லிபுலேக் என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 16890 அடி. காலாபாணியிலிருந்து இவ்விடம் வரை இந்திய திபேத்திய எல்லைப் போலீசார் [I.T B Po'ice] துணை வந்தனர். லிபுலேக் என்ற இடம் இந்திய சீன எல்லைக் கோட்டில் உள்ளது. இதற்கு அப்பால் சீன எல்லை.

லிபுலேக்கைத் தாண்டினல் 4 கி.மீ. தொலைவுக்குக் கடுமையான இறக்கம் பனி பாறையாக வழிநெடுக உறைந்துபோய் வழி வழுக்குகிறது. நடப்பது மிகவும் கடினம். முன்னே சாய்ந்தால் குப்புற வீழ்ந்து பனியில் சருக்க நேரும். பின்னே சாய்ந்தால் மல்லாந்து வீழ்ந்து பனியில் சருக்கிட நேரும் இந்த வழியில் நம்முடன் வந்தவர்களில் பலர் விழுந்தும் உருண்டும் சிறிதளவு வருந்த நேர்ந்தது. கூலியாட்கள் இவ்விடத்தில் சுமை முட்டைகளைத் தூக்கிக்கொண்டு நடப்பதில்லை. மூட்டைகளைப்

பனியின் சருக்கலில் உருட்டி விடுகிறார்கள். அவைகளைக் கீழே இறங்கி வந்த பிறகு எடுத்துக் கொள்கிறார்கள். சாமான் மூட்டைகளை இப்படி உருட்டி விட்டதால் மூட்டைக்குள் இருந்த பெட்டிகள் சில உடைந்து போயின. கைப்பிடிகள் ஒடிந்து விட்டன. பாட்டில்கள் சிதறுண்டன.

இவ்விதம் 4 கி.மீ. பனிச்சருக்கலில் இறங்கிய பிறகு அனைவரும் குதிரை மீது ஏறிக்கொண்டோம். குதிரைப் பயணமாக 21 கி.மீ கடந்து தக்ளகோட் என்ற இடத்தை அடைந்தோம். தக்ளகோட் என்ற இடம் சீன எல்லைக்குள் இருக்கிறது. இங்கே சீன இராணுவ முகாம் உள்ளது. அவ்விடத்தில் யாத்திரை செய்வோர்களுக்குச் சுங்கப் பரிசீலனை செய்த பின்னரே தங்குமிடம் அளிக்கப்படுகிறது. இரவு 7 மணிக்கு (சீனநேரம் 9-30 க்கு) நம்முடன் வந்தவர்கள் 25 பேருக்கும் பரிசோதனை [செக்கிங்] நடைபெற்றது. இரவு அங்கே தங்கினோம்.

தக்ளகோட்டிலிருந்து கயிலைமலையின் அடிவாரத்தில் உள்ள டார்சேன் கேம்ப்வரை டிரக்கில் சென்று வர ஒரு நபர்க்கு சீன அரசாங்கத்துக்கு ரூ 1000 கட்டணம் செலுத்த வேண்டும். காலை உணவுக்கு ரூ 10ம், பகல் உணவுக்கு ரூ 20ம் இரவு உணவுக்கு ரூ 20ம், செலுத்த வேண்டும். ரொட்டியும், உருளைக்கிழங்கும், பச்சைக் காய்கறிகளும், கீரைரசமும், வேர்க்கடலை வறுவலும் உணவாகத் தருகிறார்கள். படுக்கை, டெண்ட் வசதியும் அளிக்கிறார்கள் நமக்கும் நம்மவர்களுக்கும் தனியாக நம் காரியம் பார்ப்போரைக் கொண்டு உணவு தயாரித்துக் கொண்டோம்.

14-7-82 புதனன்று தக்ளகோட்டில் சீன ராணுவ முகாமில் யாத்திரைக் கட்டணத்தை டாலராகச் செலுத்தினோம். சீன எல்லைக்குள் பயன்படுத்தற்காக அமெரிக்க டாலரைக் கொடுத்துச் சீனநாணயமான யாண் பெற்றுக்கொண்டோம் சீன ராணுவமுகாமில் ஆங்கிலம் தெரிந்தவர் ஒருவர் மட்டுமே இருக்கிறார், இதனால் மொழிப்பிரச்சனை ஏற்பட்டு

ஒருவர் கருத்தை மற்றவர் அறிவதில் இன்னல் உண்டாகிறது இங்கே குளியலறை கழிவறை வசதிகள் இல்லை. நம்நாட்டவர்க்கு இதனால் இடர்ப்பாடும் மன அருவருப்பும் ஏற்படுகிறது.

புதன்கிழமை இரவு சீனர்கள் யாத்திரீகர்களுக்குத்திரை படம் (பிலிம்) காட்டினார்கள். அவை சீனநாட்டின் இயற்கை அமைப்பு, ஆக்கவேலை முதலியன பற்றி அமைந்திருந்தன. படத்தின் ஒலி சீன மொழியாக இருந்தது. எனவே படத்தை மட்டும் கண்டு செய்திகளை ஊகித்தறிய வேண்டியிருந்தது. 15-7-82 வியாழனன்று நமக்கு மௌனவிரதம்; மேலும் அன்றைக்கு ஜன்மநட்சத்திரமான பரணி. காலை 5 மணிக்கு [சீனநேரம் 7-30க்கு] சீன டிரக் ஒன்று வந்தது. யாத்திரைக்குழுவில் உள்ள 25 பேர்கள் இரண்டு குழுவாகப் பிரிக்கப்பெற்றனர். நாமும்நம்மவர்களும் ஒருபிரிவாகவும், வேறுமாநிலத்தவர் வேறொரு பிரிவாகவும் அமைய நேர்ந்தது. வேறு மாநிலத்தவர் நாணயம் ஒன்றைச் சுண்டிப் பூவா தலையா போட்டுப்பார்த்து நம்மையும் நம்மவர்களையும் முதலில்போக அனுமதித்தனர் இந்த முதல் வாய்ப்பானது கயிலாயநாதன் நமக்கு முதலில் காட்சிதரக் கொடுத்த பெருங்கருணையே என்று சொல்ல வேண்டும். நம்முடன் வந்த வேறு மாநிலத்தினரின் மதுவருந்தல் புகைத்தல் போன்ற செயல்களால் நமக்குச் சிறு அருவருப்பு இருந்து வந்தது இங்ஙனம் இருபிரிவாகப் பிரியச்செய்து நமக்குத் தெய்வீக நெறியில் தனித்துத் தரிசனம் தரும் பொருட்டுக் கயிலாயநாதன் அருள் பாலித்தான்.

சீனடிராக்கில் மூட்டைமுடிச்சுகளுடன் 22 பேர் ஏறிக்கொண்டனர். அதற்குமேல் ஏறமுடியாது. ஆகவே மற்ற மூவர்க்காக ஜீப் ஒன்று அமைத்துக்கொண்டு அதில் நாம் சென்றோம். டிரக்கும் ஜீப்பும் மலைப்பாதையில் விரைந்தன. பாதை செம்மையில்லாமல் கல்லும் கரடுமாக இருந்தது. இதில் 40 கிலோ மீட்டருக்கு மேல்பட்ட வேகத்தில் டிரக்கும்

ஜீப்பும் ஓடின. அத்துணைவேகத்தில் சென்ருல்தான் ஓட முடியுமாம். வேகம் குறைந்தால் கற்களில் தடைபட்டு நின்று விடுமாம். டிரக்கில் ஏற்றிய சாமான்களின் நெருக்கடியால் யாத்திரீகர்கள் வருந்தினர். சைனர் ஏற்றிய சில சாமான்களின் கொடிய நாற்றமும் தோற்றமும் பெரிதும் அருவருப்பை ஊட்டின. டிரக்கின் வேகத்தால் ஆட்டமும் குலுக்கலும் தாளமுடியாமல் பலர் ஒருவருடன் ஒருவர் மோதிக்கொண்டனர். சிலர் காயமுற்றனர். இந்த டிரக்கில் பிரயாணம் செய்தவர்க்கு இனிமேல் யமவாதனையே இல்லை என்று தான் சொல்லத் தோன்றுகிறது. இத்துணை வேதனையையும் "கயிலையைக் காணப்போகிருேம்" என்ற நினைப்பில் அவர்கள் மறந்துவந்தனர்.

இவ்வண்ணம் 60 கி.மீ. சென்றதும் திரிகூடமலையும் ராக்ஷஸ தடாகமும் வந்தன. அங்கே இறங்கினேம். ராக்ஷஸ தடாகக் கரையிலிருந்து [50 கி மீ. தொலைவுக்கு அப்பால்] கயிலைச் சிகரத்தின் தரிசனம் முதன்முதலாக நமக்குக் கிடைத்தது. அன்று நாம் மௌனமாகையால் அருகிலிருந்தவர்களைக் கைதட்டி அழைத்துக் கயிலையைச் சுட்டிக் காட்டினேம். கயிலைச் சிகரத்தைத் தரிசித்து அடியற்றமரம் போல் நிலத்தில் வீழ்ந்து வணங்கினர். கயிலைக் காட்சியைக் கண்டவுடன் நம்மை நாம் மறந்தோம். உள்ளம் குளிர்ந்தது. உரோமம் சிலிர்த்தது. கண்ணும் பொழி மழை பெய்தது. கையும் தாமே புனை அஞ்சலியதாய் உயர்ந்தன. மெய்யும் தரைமிசை விழுமுன்பு எழுந்தது. அவ்வனுபவத்தை மேலும் உரையால் கூற இயலாது. 'இங்ஙன் இருந்ததென்று எவ்வண்ணம் சொல்லுகேன், அங்ஙன் இருந்ததென்று உந்திபற, அறியும் அறிவதன்று உந்திபற' என்ற அருள் அனுபவத்தையே கூற இயலுகிறது.

மீண்டும் டிரக்கும் ஜீப்பும் புறப்பட்டன. 20 கி. மீ. சென்றதும் காலை 10 00க்கு [சி. நே. 12-30 மணிக்கு] மானஸ சரோவரத்தில் உள்ள செய்தி கேம்பை அடைந்தோம்,

மானஸசரோவரத்தில் நீராடி மகிழ்ந்தோம், வழிபாடு செய்தோம்.

மீண்டும் டிரக்கும் ஜீப்பும் புறப்பட்டன. 30 கி.மீ சென்றதும் காலை 11-30 மணிக்குக் கைலையின் அடிவாரத்தில் உள்ள டார்ச்சென் கேம்பை அடைந்தோம். இது கயிலையின் தெற்குப்புறத்தில் உள்ளது. இங்கே கயிலையின் தெற்குமுக தரிசனம் மிகவும் நன்றாகக் கிடைத்தது. மப்புமந்தாரம் எதுவும் இன்றி மிகத்தெளிவாகக் கயிலைநாதன் காட்சி அளித்தான்.

16-7-82 வெள்ளியன்று காலை 6 மணிக்குக் கயிலையின் தெற்குமுக தரிசனம் செய்து கொண்டோம். அந்த மகிழ்ச்சியோடு நாமும் நம்மவர் பதின்மரும் டார்ச்சேன் கேம்பிலிருந்து கயிலைப்பரிக்கிரமம் செய்யத் தொடங்கினோம். பரிக்கிரமம் என்பது வலம் வருதலாகும். கயிலைப் பரிக்கிரமம் செய்ய 48 கி. மீ. நடக்க வேண்டும். இதனை இரண்டு நாளில் முடிக்க வேண்டும். இதற்கிடையில் ஓரிடத்தில் தங்க வேண்டும்.

திபேத்தில் வாழும் மக்கள் திருக்கயிலைமலையைப் பன்முறை பரிக்கிரமம் செய்கிறார்கள். தொடங்கும் இடத்தில் கீழே வீழ்ந்து நமஸ்காரம் செய்கிறார்கள். கையும் காலும் பட்ட இடங்களில் கோடிட்டுக் கொள்கிறார்கள். பிறகு எழுந்து, கால்வைத்த கோட்டிலிருந்து கைவைத்த கோடு வரை அடிமேல் அடிவைத்து நடக்கிறார்கள் கைவைத்த கோடு வந்ததும் அக்கோட்டில் கால்வைத்து நமஸ்காரம் செய்கிறார்கள். கைவைத்த இடத்தில் முன்போலவே கோடிட்டுக் கொண்டு எழுந்து நடக்கிறார்கள். இப்படியே பரிக்கிரமம் செய்து முடிக்க அவர்களுக்குப் பல நாளாகும். இந்த நாட்களுக்காக அவர்கள் ஆகாரம் கொண்டு செல்வதில்லை. வழியில் யாராவது உணவுகொடுத்தால் உண்கிறார்கள். இல்லையேல் பட்டினியாகவே வலம் வருகிறார்கள்.

நாமும் நம் குழுவைச்சார்ந்த 10 பேரும் சாதாரண முறையில் நடந்து பரிக்கிரமத்தைத் தொடங்கினோம்: தெற்குப் பகுதிக்கு வந்தோம். இங்கே கயிலைமலை 590 அடி உயரத்துக்குச் செங்குத்தாக மதில்போல் அமைந்திருக்கிறது. நம் நாட்டுத் திருக்கோயில் அமைப்புக்கள், ஓரளவு சிற்ப அமைப்பு யாவும் கயிலை மலையின் சுவர்ப்பகுதியில் இயற்கையாக அமைந்துள்ளன.

இராசசிம்மபல்லவன் காஞ்சிபுரத்தில் கைலாச நாதர் கோயிலைக் கட்டும்போது கயிலை சென்று அங்குள்ள அமைப்புக்களைக் கண்டு அமைத்தான் என்று சொல்லப்படுகிறது. கயிலையின் மேற்குமுகத்தின் தரிசனம் செய்துகொண்டு, வடமேற்கில் அமைந்திருந்த டேராபுக் என்ற கேம்பில் அன்று இரவு தங்கினோம். அன்றிரவு சிறிது மழைத்தூரல் இருந்தது. கடும் குளிராகவும் இருந்தது. இரவில் கயிலாயப் பதிகங்கள் ஓதினோம். 17-7-82 சனிக்கிழமை அதிகாலை கூடாரத்திலிருந்து வெளியில் வந்தபோது ஆங்காங்கே குழிகளில் தேங்கிய தண்ணீரின் மேல் பனிப்பாளங்கள் கண்ணாடிபோல படிந்திருந்ததைத் கண்டோம். பின்பு வடபகுதியில் பரிக்கிரமத்தைத் தொடர்ந்தோம்.

வடகிழக்குப்பகுதியில் மிகப்பெரிய ஏற்றம் வருகிறது. இந்த இடம் தோல்மாபாஸ் என்று கூறப்படுகிறது. இங்கே வடகிழக்கு முகதெரிசனம் செய்தோம். தோல்மாபாஸின் இறக்கத்தில் கௌரி குண்டம் என்ற தடாகம் இருக்கிறது. இங்கே செல்வதற்குச் சரியான பாதை இல்லை இருப்பினும் நாம்கீழே இறங்கிச்சென்று கௌரி தடாகத்தில் நீராடினோம். பிறகுமேலே ஏறிப் பரிக்கிரமத்தைத் தொடர்ந்தோம். சிறிது தொலைவு சென்றதும் ஒரு சிறிய குகையைக் கண்டோம். குகைக்குள் தண்ணீர் தேங்கி இருந்தது அப்போது அவ்விடம் பரிக்கிரமம் செய்து கொண்டு வந்த லாமா ஒருவர் அத்தீர்த்தத்தைக் "கயிலைத்தீர்த்தம்" என்று சொல்லி தெளித்துக் கொள்ளும்படி சைகை காட்டினார்.

கிழக்குப் பகுதியில் பரிக்கிரமம் செய்யும் போது கிழக்கு முகத் தரிசனம் செய்தோம். பிறகு இரவு 7 மணிக்குத் தெற்குப் பகுதியில் உள்ள டார்ச்சேன் கேம்பிற்கு நாம் வந்து சேர்ந்தோம். நம்முடன் வந்தவர்கள் பின்தங்கி நடந்த படியால் ஒவ்வொருவராக இரவு 12 மணிவரை கேம்பிற்கு வந்தார்கள்.

18-7-82 ஞாயிறன்று காலை டார்ச்சேன் கேம்பிலிருந்து நரோபுஞ்ச் என்ற சிகரத்திற்கு ஏறிச்சென்றோம். அன்றைக் குப்பிரதோஷம். நரோபுஞ்சிலிருந்து கயிலை தரிசனம் மிகமிக நன்றாகக்கிடைத்தது. அவ்விடம் 11 சாளக்கிராமக்கற்களைப் பிரதிஷ்டைசெய்து நாம் கற்பூரதீபாராதனை செய்தோம். கற்பூரம் அருகில் இருந்த ஒரு செடிமேல் தற்செயலாகப் பட்டபோது அந்தப் பச்சைச் செடி பற்றி எரிந்தது. அப்போது உமாபதி சிவாசாரியார் முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்தது நினைவுக்கு வந்தது. இது நமக்கு பெரிய வியப் பாக இருந்தது. பிறகு விசாரித்தபோது அத்தகைய செடி பச்சையாகவே எரியும் இயல்புடையது என்பது தெரிய வந்தது. வழிபாடு முடிந்தபின்பு நாரோபுஞ்சிலிருந்து டார்ச்சேன் கேம்பிற்குத் திரும்பி இரவு அங்கே தங்கினோம்.

19-7-82 திங்களன்று காலை வானம் மப்பும் மந்தாரமு மாக இருந்தது. இதனால் டார்ச்சேன் கேம்பிலிருந்து கயிலைக் காட்சி கிடைக்கவில்லை. அதனால் மனத்தில் சிறிது தயக்கம் ஏற்பட்டது. திருநாவுக்கரசரிடம் திருவையாற்றில் வருக என்று கூறி இறைவன் மறைந்தாற் போல நமக்கும் விண் ணிலே மறைந்து அருள்புரிபவனாக ஆகிவிட்டான் போலும்! பிறகு டார்ச்சேன் கேம்பிலிருந்து கிளம்பி டிரக்கிலும் ஜீப்பி லும பயணம் செய்து பகல் 1 மணிககு மானஸசரோவரததில் உள்ள செய்த்திகேம்புக்கு வந்துசேர்ந்தோம். மானஸசரோ வரத்தில் மனங்குளிர நீராடினோம். அன்று இரவு செய்த் தியில் தங்கினோம்.

20-7-82 செவ்வாயன்று ஆடி அமாவாசை. அதிகாலையில் மானஸசரோவத்தல் அனைவரும் நீராடினோம். மானஸசரோ

வரம் பெரிய ஏரி. 88 கி.மீ. சுற்றளவு உடையது. சுமார் 250 அடி ஆழமுடையது. இது கயிலைமலைக்குத் தென்புறத் தில் 30 கி.மீ. தொலைவில் இருக்கிறது. கயிலைமலை சிவ பெருமானின் திருவுருவாகவும் மானஸசரோவரம் உமா தேவியின் திருவுருவாகவும் கருதி வழிபடப் பெறுகிறது. தூரப் பார்வைக்குத் தண்ணீர் உமையாள் போலப் பசுமை யாகத் தெரிகிறது. கையில் அள்ளினால் நிறம் ஏதும் இன்றிப் பளிங்கு போல் இருக்கிறது. தண்ணீரில் பனிப் பாறைகள் மிதக்கின்றன. தண்ணீரின் அடியில் பசுமை, பொன்மை வெண்மை, நீலம் முதலிய பல்வேறு வண்ணக் கற்கள் கிடைக் கின்றன. நீராடும்போது நம்முடன் வந்தவர்களில் சிலர் சிறு பிள்ளைகளைப் போல அக்கற்களில் சிலவற்றை எடுத்து வந்தார்கள். கயிலை மலையைப் பரிக்கிரமம் செய்வதுபோ மானஸசரோவரத்தையும் பரிக்கிரமம் செய்வது வழக்கம்.

அன்று இரவு மானஸசரோவரத்தில் உள்ள செய்த்தி கேம்பில் தங்கினோம். மாலை 6 முதல் 9 மணி வரை சத் விஷயங்களை பற்றிச் சிந்தனை செய்தோம். திருநாவுக் கரசு சுவாமிகள் கயிலாயக் காட்சி கண்ட நாளாகையால் அவர்தம் வரலாறு குறித்துக் காஞ்சி ஆதீனகர்த்தர் அவர்க ளும் பேரூர் சுவாமிகளும் விரிவாகப் பேசினார்கள்.

21-7-82 புதனன்றும்மானஸசரோவரத்தில் நீராடினோம். இரவு அங்கே தங்கினோம். 22-7-82 வியாழனன்று பகல் 2 மணிக்குச் செய்த்திகேம்பிலிருந்து டிரக் புறப்பட்டது. நாம் ஜீப்பில் சென்றோம். மாலை 6 மணிக்குத் தக்ளகோட் வந்து சேர்ந்தது. இரவு அங்கே தங்கினோம்.

23-7-82 வெள்ளியன்று தக்ளகோட்டில் சீனமுகாமில் சுங்கப் பரிசோதனை நடைபெற்றது. பகல் 2 மணிக்குச் சாமான் மூட்டைகள் குதிரை மேல் ஏற்றப்பட்டு அவை முன்னதாக அனுப்பப் பெற்றன. இரவு 2 மணிக்கு நாமும் மற்றவர்களும் குதிரையில் பயணம் தொடங்கினோம். கடுமை யான இருளில் குதிரைகள் பழக்கத்தால் ஒருவாறு வழி

தெரிந்து நடந்தன. இருளும் வழியின் அச்சமும் மனத்தை உருத்தின. கயிலைநாதன் திருவருள் தான் துணை வந்து காத்தது என்று சொல்ல வேண்டும். குதிரையிலிருந்து சிலர் வழுக்கி விழுந்ததும் உண்டு. ஒருவாறு சமாளித்து மீண்டும் குதிரையில் ஏறிப் பயணம் தொடர்ந்தனர்.

24-7-82 சனியன்று காலை 10.30க்கு இந்திய எல்லையான லிப்புபாஸ் என்ற இடத்தை அடைந்தோம். அங்கே சிறிது மழைத்தூறல் இருந்தது. நான்காவது குழுவினர் இந்தப் பகுதியில் எதிர்கொண்டு ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிய வண்ணம் ஆனந்தக்கண்ணீர் பெருக்கெடுக்க "கயிலை மலையானுக்கு ஜே! கயிலை மலையானுக்கு ஜே!" என்ற பக்திக் கோஷங்கள் எழுப்பினர். பகல் 1 மணிக்கு நாபிடாங் என்ற இடத்தை அடைந்து பகல் உணவு அருந்தினோம். அங்கிருந்து கிளம்பி மாலை 5 மணிக்கு காலாபாணியை அடைந்து இரவு அங்கே தங்கினோம்.

25-7-82 ஞாயிறன்று காலை 9 மணிக்குப் புறப்பட்டு பகல் 2 மணிக்குக் குஞ்ஜி என்ற இடத்தை அடைந்தோம். இங்கே தண்ணீர் கிடைப்பது அரிதாயிருந்தது. குஞ்ஜிக்கு 40 கி. மீ. தொலைவில் சிறுகயிலாயம் (மினி கைலாஸ்) இருக்கிறது. இங்கே ஆண்டு தோறும் மேளா என்ற விழா நடைபெறும் என்று கூறுகிறார்கள். அன்றிரவு குஞ்ஜியில் தங்கினோம். 26-7-82 திங்களன்று காலை 8 மணிக்குப் புறப்பட்டு மாலை 4 மணிக்குப் புத்தி என்ற இடத்தை அடைந்து இரவு அங்கே தங்கினோம்.

27-7-82 செவ்வாயன்று காலை 8 மணிக்குக்கிளம்பி 9 கி. மீ. நடந்து பகல் 1 மணிக்கு மால்பா என்ற இடத்தை அடைந்தோம். வழிமிகவும் இறக்கமாக இருந்தது. இரவு மால்பாவில் தங்கினோம். யாத்திரையில் ஒவ்வொரு இடத்திலும் ஈயின் தொல்லை உண்டு. மால்பாவில் ஈயின் தொல்லை மிகவும் அதிகமாக இருந்தது.

28-7-82 புதனன்று காலை மால்பாவில் புறப்பட்டு 9 கி.மீ. நடந்து ஜிப்தி என்ற இடத்தை அடைந்தோம். வழிஏற்றமாகவும் மண்சரிவு நேரும் அபாயமுடையதாகவும் இருந்தது. ஜிப்தியில் அன்றிரவு தங்கினோம். இங்கே இந்திய இராணுவ வீரர்கள் பலர் தமிழ் நாட்டவராக இருந்தார்கள். அவர்கள் நம்மவர்களுடன் தமிழில் பேசுகிறார்கள். இதுவரை தமிழ் பேசுவோரைக் காணாதிருந்த ஆதங்கம் இங்கே விலகியது. மனத்திற்கு உற்சாகமும் ஏற்பட்டது.

29-7-82 வியாழனன்று காலை ஜிப்தியில் புறப்பட்டுச் சிர்க்கா வந்து சேர்ந்து பகல் உணவு அருந்தினோம். சிர்க்காவிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ள நாராயண ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தோம். ஆசிரமத்தார் நம்முடன் வந்தவர்களுக்குத் தென்னிந்திய உணவாகச் சிறந்த விருந்து அளித்தார்கள். ஆசிரமத்திற்கு நாம் நன்கொடை வழங்கினோம். வந்தவர்களில் சிலரும் ஆசிரம வளர்ச்சிக்காக நன்கொடை வழங்கினார்கள். அன்றிரவு ஆசிரமத்தில் தங்கி இருந்தோம்.

30-7-82 வெள்ளியன்று காலை 7 மணிக்குப் புறப்பட்டோம். பகல் 1 மணிக்குத் தவாகாட் வந்துசேர்ந்தோம். இத்துடன் நடைப் பயணம் முடிந்து விடுகிறது. பேருந்து ஆயத்தமாக இருந்தது. சாமான்கள் நிறையிடப்பட்டுப் பேருந்தில் ஏற்றப்பட்டன. அனைவரும் பேருந்தில் ஏறினோம். பேருந்து புறப்பட்டது. டார்ச்சுலா வந்ததும் பகல் உணவு அருந்தினோம். மீண்டும் மாலை 4 மணிக்குப் பேருந்து புறப்பட்டது. பெட்ராகாட் என்ற இடத்தை அடைந்து இரவு அங்கே தங்கினோம். 31-7-82 சனியன்று காலை பெட்ராகாட்டிலிருந்து பேருந்து கிளம்பியது. வழியில் சம்பாவதில் காலை உணவும் ருத்திரபூரில் பகல் உணவும் அருந்தினோம். இரவு 10-15க்குத் தில்லி வந்து சேர்ந்தோம். தில்லித் தமிழ்ச்சங்கத்தில் தங்கினோம். 1-8-82 ஞாயிறன்று தில்லித் தமிழ்ச்சங்கத்தார் பெரியதொரு வரவேற்பளித்

தார்கள். நாமும், காஞ்சிபுரம் சந்நிதானம் அவர்களும் பேரூர் அடிகளார் அவர்களும் யாத்திரையைப் பற்றி விரிவுரையாற்றினோம்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசன்னிதானம் அவர்கள் கயிலாய யாத்திரை நிறைவு செய்து தில்லிக்கு எழுந்தருளியபோது தமிழ்ச் சங்கக் கட்டடம் நிறைவு பெறாத நிலையிலிருந்தது. அதற்கு அவர்கள் ரூ. 1000 நன்கொடை அளித்தார்கள். அந்தக் கட்டடத்திலேயே நாம் தங்கினோம். தற்போது ஆடிடோரியம் கட்டவிருப்பதறிந்து நாமும் ரூ. 1008 நன்கொடை அளித்தோம். அன்றியும் தில்லித் தமிழ்ச் சங்கத்தார் கேட்டுக்கொண்டபடி ஆண்டு தோறும் தமிழ்ச் சங்கத்தில் சைவச் சொற்பொழிவாற்ற அறக்கட்டளை அமைப்பதாகச் சொற்பொழிவின் போது உறுதியளித்தோம். அன்று இரவு உத்தரசுவாமிமலையில் அபிஷேக ஆராதனைகளை நாம் நடத்தி வைத்தோம்.

பகல் 1-45 மணிக்குத் தில்லியிலிருந்து காசிக்கு ரயில் பயணம் தொடங்கியது. 3-8-82 செவ்வாயன்று காலை 6-45 மணிககுக் காசியை அடைந்தோம். அன்று ஆடிப்பதினெட்டாம் பெருக்கு. அனைவரும கங்கை நீராடினோம. கேதார நாதர் விசுவநாதர் தரிசனம் செய்தோம. காஞ்சீபுரம் குருமகாசந்நிதானம் அவர்களும், பேரூர் தவத்திரு அடிகளார் அவர்களும் நம்முடன் நமது திருமடத்தில எழுந்தருளி இருந்தார்கள். 4-8-82 புதனன்று காசி விசுவநாதருக்கும் 5-8-82 வியாழனன்று அன்னபூரணிக்கும விசேஷ ஆராதனைகள் நடத்தப்பெறறன. 6-8-82 வெள்ளியன்று நம் மடாலயத்தில் சாதுக்களுககுப் பண்டாராவும் கேதாரீச்வரருககு அபிஷேக ஆராதனையும் 7-8-82 சனியன்று சங்கடா தேவிக்கு ஆராதனையும் 8-8-82 ஞாயிறன்று 200 பேருக்குப் பிராம்மணபோஜனமும் நடத்தப்பெற்றன. 9-8-82 திங்களன்று கேதாரீச்வரர்க்கு விசேஷ ஆராதனையும் கால பைரவருக்கு விசேஷ ஆராதனையும் செய்விக்கலாயிற்று.

10-8-82 செவ்வாயன்று காலை 5-15க்குக் காசியிலிருந்து சென்னைக்குப் புறப்பட்டோம்.

11-8-82 புதனன்று இரவு 10 மணிக்குச் சென்னைப் புகை வண்டி நிலையம் சேர்ந்தோம். அப்போது திருநள்ளாறு கட்டளைத் தம்பிரான், Dr. B நடராஜன், திரு கி. இராமலிங்க முதலியார், திரு. பக்தவத்சல முதலியார், திரு. ஆறுமுக முதலியார், திரு. க. சுப்பிரமணிய அய்யர், சிதம்பரம் திரு. பாலசுப்பிரமணிய செட்டியார், திருச்சி திரு வெங்கடாசலம் செட்டியார், திரு. மூக்கப் பிள்ளை, திரு. தாமோதரம் முதலியார், மற்றும் சைவ மெய் அன்பர்கள் சைவ சித்தாந்தப் பேரவையினர் முதலானோர் பெருந் திரளாக வந்திருந்து பேரன்புடன் நம்மை வரவேற்றார்கள்.

பிறகு தருமை ஆதீனம் பிரசார நிலையத்திற்குச் சென்றோம். திருநள்ளாறு கட்டளைத்தம்பிரான் தருமை ஆதீனச் சார்பில் வரவேற்று நமக்கும் காஞ்சி சுவாமிகளுக்கும் பொன்னாடை போர்த்தினார்கள். சென்னை பக்தவத்சல முதலியார் அவர்கள் நமக்கும் காஞ்சி சுவாமிகள் அவர்களுக்கும் பொன்னாடை போர்த்தினார். திரு. க. சுப்பிரமணிய ஐயர் ஆறுமுக முதலியார் ஆகிய இருவரும் வரவேற்பு வாசித்தளித்தனர். நூற்றுக்கணக்கான அன்பர்களுக்குக் கயிலைப் பிரசாதம் வழங்கப் பெற்றது,

12-8-82 வியாழனன்று காஞ்சிபுரம் சந்நிதானம் அவர்களும் நாமும் காஞ்சிபுரம் சென்றோம். அங்கே மடாலயத்தில் பெரிய வரவேற்பு நடந்தது. பிறகு ஏகாம்பரநாதர் கோயில், கயிலாயநாதர் கோவில் முதலிய பல கோயில்களிலும் வழிபாடு செய்யலாயிற்று. சென்னை திரும்பினோம்.

13-8-82 வெள்ளியன்று சென்னைக் கபாலீச்வரர் கோயில், மாங்காட்டுக் கோயில், திருவேற்காடு கருமாரியம்மன் கோயில்களில் வழிபாடு நடத்தலாயிற்று. 14-8-82 சனியன்று தருமையாதீன பிரசாரநிலயத்தில் சென்னை அன்பர்கள் பலரும் கூடிப் பெரியதொரு வரவேற்பளித்தார்கள்.

15-8-82 ஞாயிறன்று விடியல் 4 மணிக்குச் சென்னையில் புறப்பட்டு காலை 10 மணிக்கு பனசையை அடைந்தோம். ஸ்ரீ காசிமடத்துச் சிப்பந்திகளும், நம் கல்லூரிப் பேராசிரியர்களும், உள்ளூர் வெளியூர்ப் பிரமுகர்களும், பொதுமக்களும் பெருந்திரளாகக் கூடிப் பெரிய வரவேற்பளித்துத் தத்தம் வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டார்கள். நம்மைக் காண வந்தவர்களின் ஆர்வம் கரைபுரண்டோடியது. அவர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நண்பகலில் அன்பர்கள் அனைவருக்கும் நம் மடாலயத்தில் விருந்தளிக்கப்பெற்றது.

எல்லோருக்கும் கயிலாய நாதனின் திருவருள் உண்டாவதாகுக.

—சிவ சிவ

சிவம்

உ
சிவமயம்

# திருக்கயிலைப் புனிதப்பயணம் பற்றிய சில விசேடக் குறிப்புகள்



கயிலைமாமுனிவர், காசிவாசி

ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமி

தம்பிரான் சுவாமிகள்

இம்மலருக்காகப் பிரத்தியேகமாக

வழங்கியருளியது.

யாத்திரை என்பது அனைத்து நிலையிலுள்ள மானிடர்க்கும் இன்றியமையாத ஒரு நிகழ்ச்சியாக வலியுறுத்தப் பெறுகிறது. துறவு நிலையிலுள்ளார்க்கும் இது பொருந்திய ஒன்றாகக் கூறப்படுவதும் இதனாலேயாகும். இருந்தவிடத்திலிருந்து இறைமையைக் காணுதல் ஒல்லுவதே; ஆயினும் பல்வேறு வகைப்பட்ட இயற்கைச் சூழலில், வடிவத்தில், அமைப்பில் கண்டு தொழுகையில் கனிவுறுகின்ற உள்ளத்தின் குழைவைக் காணமுடிகின்றது.

யாத்திரை மேற்கொள்கையில் ஒருமித்த குழுவுணர்வு ஏற்படுகின்றது; அங்கு மத, இன, நிற வேறுபாடுகளுக்கிடமில்லை 'அனைவரும் சமம்' எனும் உணர்வு மேலோங்குகிறது. சகித்துக் கொண்டு ஒத்துப்போகும் உணர்வில்லாரும் ஒருங்கமைந்து விடுவதைப் பயணத்தில் காண்கின்றோம்.

பயணம் மேற்கொள்கையில், இறையன்பு, திருவருட் பாடல்கள் ஓதல் போன்ற பக்தி மேலீடன்றிப் பிற

எண்ணங்கள் தலைகாட்டுவதில்லை. அசனுல் ஏகாக்கிரக சிந்தனை வயப்படுகிறோம். குறிப்பாக பிற யாத்திரைகளின் வேருக இப்பயணத்தில் எந்நேரமும் இறைமை யுணர்விலேயே தோய்கின்றோம்.

பயணம் செய்கையில் கடுமையான உடலுழைப்பு தேவைப்படுவதால் ஆரோக்கியமான உடல் அமைய வழி யாகிறது. உடல் நலம் சிறிதும் பாதிக்கப்படுவதில்லை. இயற்கையிலேயே மாற்றுச் சக்திகள் கலந்துள்ளதால் நோய் அண்மி வராது.

வழிபாட்டு நெறியில் உருவம், அருவம், அருவுருவம் எனும் மூன்று நிலைகள் உண்டு; விநாயகர், முருகன் முதலா னவை உருவத்திருமேனிகள், லிங்கம் அருவுருவத்திருமேனி. அகத்தில் கண்கொண்டு பார்க்கும் ஆனந்தத்தில் எய்துவதே அருவக்காட்சி. அது அனைவருக்கும் கிட்டாது: இயற்கையாக அமைந்துள்ள கிரியில், பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில் வாய்த்த வடிவை அகத்தில் கண்டு அளப் பரும் ஆனந்தம் எய்துகின்றோம். மற்றத் திசைகளில், தொடர்பான மலைச்சிகரங்கள் இருக்க, தெற்கு முகத்தில் மட்டும் சன்னதி போன்ற அமைப்பும், படிக்கட்டுகள் ஒத்த அடுக்குகளும், அதன் எதிரில் மானஸசரோவர் தீர்த்தமும் உன்ளமை இறைவன் கயிலையங்கிரியிலிருந்து தென்னுடு போந்து திருவருள் நல்கியமை நிறுவுவதாக அமைகிறது. கிரியின் தோற்றத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்து, எண்ணிய திருக்காட்சிகள் எதிரில் தோன்ற இன்பமெய்து கிரும். கிரியும், இடப்பக்கம் உள்ள கௌரிகுண்டமும் அம்மையப்பர் திருக்கோலத்தை எதிர்கொணர்கின்றன. ஆனந்த மேலீட்டில் திளைக்கின்றோம்.

—சிவசிவ

காவாய் கனகத்திரளே போற்றி
கயிலை மலையானே போறறி! போற்றி!!

சிவம்




திருக்கயிலை




திருக்காக்ஷிகள்

திருக்கயிலைச் சிகரம் தோன்றிடக் கண்டு தொழுது மகிழும் திருக்கூட்டம்



திருப்பனசைத் தவமுனிவர் விருப்பமுடன் கும்பிட்ட
திருக்கயிலைத் திருமலையின் தெற்குமுகக் காட்சி

திருமலைச் சிறப்பு

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை.

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணும் மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது.

—சேக்கிழார் : பெரியபுராணம்

வரங்க டந்தரு ளெனமுது வானவர் முனிவோர்
கரங்க டந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
உரங்க டந்துரை உணர்வெலாங் கடந்தரு மறையின்
சிரங்க டந்தவன் இருப்பது திருக்கயிலாயம்.

பரஞ்சோதி முனிவர் : திருவிளையாடல் புராணம்



திருப்பனசைத் தவமுனிவர்க்கு திருக்கயிலை தந்திட்ட
மற்றொரு அற்புதக் காட்சி—வடகிழக்கு முகம.



மானஸசரோவர்—பெரியஏரி
மானஸ சரோவரத்தில் திளைத்து நீராடி
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தநம் சுவாமிகள்.

உ

ஓம் ஸ்ரீ காயத்ர்யை நம:



ஸ்ரீ காயத்திரி அருள் சித்தர்

# ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள் நடத்திய

# ஸ்ரீ சண்டீ மஹாயக்ஞம்

வேதமுழக்கோடு வேள்வி மணங்கமழ்ந்த வேலூர் ஆலயம் உண்டு, ஆனால் ஆண்டவன் இல்லை என நெடுங்காலமாகக் கூறிவந்த நிலைமாறி அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகியான அன்னை அகிலாண்டேச்வரி ஸமேத ஸ்ரீ ஜலகண்டேச்வரர் எழுந்தருளி அருள் பாலித்து வரும் வேலூர் நகரத்தில், கலியுகச் சித்தரும் ஸ்ரீ காயத்திரி தேவியின் அருள்பெற்றவருமான ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகளவர்கள் நாட்டு மக்களின் நன்மை கருதிக் கீழ்க் காணும் எட்டு வேள்விகளையும் ஏற்றமிகு வகையில் இயற்றுவித்தார்கள். (1) ஸ்ரீ கணபதி ஹோமம் (2) ஸ்ரீ ஆவஹந்தி ஹோமம் (3) நவக்கிரஹ ஹோமம் (4) ஸ்ரீ மிருத்தியுஞ்சய ஹோமம் (5) ஸ்ரீ ஸுதர்சன ஹோமம் (6) ஸ்ரீஸூக்த ஹோமம் (7) ஸ்ரீ காயத்திரி ஹோமம் (8) ஸ்ரீ சண்டீ மஹாயக்ஞம்.

மேற்படி எட்டு வேள்விகளும் இவ்வருடம் ஐப்பசித் திங்கள் 24, 25, 26 (நவம்பர் 10, 11, 12) ஆகிய மூன்று நாட்கள் வேலூரைச் சார்ந்த கிருஷ்ண நகரில் உள்ள திருமுருக கிருபானந்த வாரியார். திருமணத் திருக்கூடத்தில் வேதம்



நாட்டின் நன்மைக்காக எட்டுவகை
வேள்விகள் செய்த
ஸ்ரீ காயத்திரி அருள் சித்தர்
ஸ்ரீல ஸ்ரீ காயத்திரி சுவாமிகள்

நான்கிலும் வல்ல விற்பன்னர்களையும், ஸ்ரீ வித்யா உபாசகர் களையும் கொண்டு வெகு விமரிசையாக நிகழ்த்தப்பட்டன.



ஸ்ரீ சண்டீ மஹாயக்ஞ ஆரம்பத்தில்
சங்கல்பம் செய்துவைக்கும் காக்ஷி.

வேதவிற்பன்னர்கள் பன்னிருவருக்குத் தலைமை தாங்கி சிதம்பரம் பிரம்மஸ்ரீ நடராஜ சாஸ்திரிகள் அற்புதமாக வேள்விகளைச் செய்து முடித்தார்கள். முதல் நான்கு ஹோமங்கள் முடிவடைந்த முதல்நாள் மாலையில் மங்கள மங்கையர் நூற்றுக்கு மேற்பட்டவர்கள் குங்குமம் கொண்டு கோலத்திருவிளக்கிற்குப் பூசனை செய்த காக்ஷி கண் கொள்ளாக் காக்ஷி எனலாம். இடை இரு ஹோமங்கள் நடைபெற்ற இரண்டாம் நாள் மாலையில் செல்வியர் சித்திரா, அனுசூயா, சிரஞ்சீவி நரசிம்மன் சின்னஞ்சிறு மூவர் நளினமிகு நடனக்கலை விருந்தளித்தனர். முடிவில் இரு ஹோமங்கள் முடிந்த மூன்றாம் நாளில் ஜாதிமத பேதமின்றி ஒன்பது கன்னிப் பெண்களுக்குக் கன்னிகா பூஜையும், பதினைந்து ஸுமங்கலிகளுக்கு ஸுவாஸினி பூஜையும்

ஸ்ரீ சுவாமிகள் அவர்கள் சிறப்புற நடத்தி முடித்தார்கள். மேற்படி பூசிக்கப்பட்ட சன்னிப் பெண்களுக்கும் ஸுமங்கலி களுக்கும் புத்தாடைகளும், அரிசி, வெல்லம், தேங்காய், பழம், வெற்றிலே பாக்கு, மஞ்சள், குங்குமம், பூ, சீப்பு, கண்ணுடி முதலான மங்களப் பொருள்களும் வழங்கப்பட்ட காக்ஷி மக்களே வியப்புறச் செய்தது.

வேள்விகள் நடைபெற்ற இந்த மூன்று நாட்களிலும் ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்ற நான்கு வகை வேதங்களினின்றும் சில பகுதிகள் ஓதிக் காட்டப்பட்டன. கவி வாணர்களும். பன்மொழிப் புலவர்களும் சொல்மாரி பொழிந்து மக்கள் மனங்குளிரச் செய்தார்கள். எல்லாத் தானங்களிலும் ஏற்றமிகு தானமான அரும்பசி போக்கும் அன்னதானத்துக்கு மூன்று நாட்களிலும் முக்கியத்துவம் அளித்தார்கள் ஸ்ரீ சுவாமிகள். பசி, பசி என்று வந்தவர் களுக்கெல்லாம் புசி, புசி என்று கூறி அள்ளி அள்ளிச் சோறு வழங்கினுர்கள். உடல் ஊனமுற்றோர் கண் பார்வையிழந் தோர், ஆதரவற்ற அனுதைகள் தங்கி வாழும் இல்லத்துக்கு அவர்கள் அகங்குளிர்ந்து, முகம் மலர்ந்து உண்டு மகிழும் வகையில் உணவு வகைகளேயனுப்பி உவகையுறச் செய்தார் கள் நம் சுவாமிகள். இங்ஙனம நற்பணிகள் பற்பல பாங்குற நடைபெற ஸ்ரீ காயததிரி சுவாமிகளுக்கு உறுதுணையாகத் திகழ்ந்த தனவணிகரும், தர்மசிந்தனையாளருமான திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் தன்னலங்கருதாப் பணி போற்றுதற்குரியதேயாம்.

வேத முழக்கோடு வேள்வி சிறக்கட்டும்.
நாடு செழித்திட நல்லறம் வளரட்டும்.
நல்லவர் செய்கையால் நற்பணி பெருகட்டும்.
வான்மழை பொழிந்து வையகம் செழிக்கட்டும்.

மங்களம்

உ
சிவமயம்

# கம்பன் காட்டிய கண்ணுதற் கடவுள்—2

வித்துவான் பெ. கு வரதராசன், எம்.ஏ., பி.ஓ.எல்., பி.டி.,

கம்பன் சிவபெருமானை இராமாயணத்தின் வாயிலாக இவ்வுலக மக்களுக்கு அறிமுகப்படுத்தி வைப்பதற்கு முன்பே தேவர்கள் சிவபெருமானை நமக்கு அறிமுகப்படுத்தி வைக்கின்றார்கள். அவர்கள் சிவபெருமானை நமக்கு அறிமுகப்படுத்தி வைக்கும் முறையில் இரண்டு செய்திகள் வெளிப்படுகின்றன. ஒன்று, சிவபெருமான் தனது அடியார்கள் வேண்டிப்பெற்ற வரத்தினை மீண்டும் அழிக்க விரும்புவதில்லை, மற்றொன்று அறத்திற்குத் துணையாக அரண் செய்யத் தயங்குவதில்லை.

தேவர்கள் அரக்கர்களது கொடுமையால் அளவிலாத அல்லலுற்றனர். அவ்வல்லல்களிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள ஒரே வழி அரக்கர்களை அழிப்பது, அல்லது சிவபெருமானருளால் அவர்கள் பெற்றிருக்கும் தவத்தின் ஆற்றலை ஒழிப்பது. தேவர்கள் ஒன்று கூடினர்; தங்கள் முடிவினை யாரிடம் கூறி நன்மை பெறுவது என்று ஆராய்ந்தனர். அனைவரும் ஒரே முடிவிற்கு வந்தனர், சிவபெருமானை அடைந்தனர். தங்கள் துயரத்தையும் முடிவினையும் சிவபெருமானிடம் கூறினார்கள். தேவர்களது முறையீட்டினைச் செவி மடுத்த சிவபெருமான், "உங்கள் குறையினைப் போக்கும் நிலையில் நான் இல்லை. ஆனாலும், குறையினைப் போக்கும் முறையினைக் கூறுகின்றேன். உங்களுக்குத் துணையாக நான் எங்கும் வருகின்றேன்" என்று கூறி எழுந்தார்.

சுடுதொழி லரக்கராற் றொலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் யாமினி
அடுகில னெனமறுத் தவரொ டேகினன்.

தேவர்கள் காட்டிய சிவபெருமானின் உயர்ந்த பண்பு களைக் கம்பன் கண்டு வியக்கின்றான். பகீரதன் என்று ஒரு மன்னன். அவன் வரலாற்றினை தயரதனது குலப் பெருமை யைக் கூறி வரும்போது கம்பன் குறிப்பிடுகின்றான். பகீரதன், கபில மா முனிவரது கோபத்தால் இறந்துபோன தனது குலத்து முன்னோர்கள் நற்கதிபெற வேண்டுமென ஆசைப்படுகின்றான், அவ்வாசையினை நிறைவேற்றிக் கொள்ள தனது குலகுருவாகிய வசிட்டனிடம் சென்றான். வசிட்டமுனிவர் பகீரதனுடைய விருப்பத்தை நிறை வேற்றிக் கொள்ள 'பிரமதேவனை நோக்கித் தவமிருந்து வரம் பெறுவாயாக' என்றான். பகீரதன் பிரமதேவனை நோக்கி பத்தாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தான். பிரம தேவன் பகீரதனுக்குக் காட்சி தந்து, முனிவரது கோபத் தினால் அகாலமிருத்து அடைந்த நின் மூதாதையர்கள் நரகம் நீங்கி ஈடேறுதற்குரிய உபாயம் ஆகாயகங்கை நீரிலே அவர்களது எலும்பு படிதல் வேண்டும். ஆகவே ஆகாய கங்கையை பூவுலகிற்குக் கொண்டுவர சிவனைக் குறித்துத் தவம் செய்வாயாக'' என பிரமதேவன் பகீரதனுக்குக் கட்டளையிட்டான்.

மாக நன்னதி புவியிடை வருகின்மற் றவள்தன்
வேக மாற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதால்
தோகை பாகனை நோக்கிநீ அருந்தவம் தொடங்கென்று
ஏகினனுல கனைத்துமெவ் வுயிர்களு மீத்தான்.

உனக்காகவும், உன் குலத்திலுதித்தவர்கள் நலத்திற் காகவும் நான் கங்கையின் பிரவாகத்தைத் தாங்கிக் கொள்ளு கின்றேன் என்றான். சிவபெருமானுடைய அருள்

திறத்தினைக் கேட்டு மகிழ்ந்த பகீரதன் கங்கையை நோக்கித் தவமிருந்தான். கங்கையும் பகீரதன் முன் தோன்றி, "என் பிரவாகத்தைத் தாங்கும் ஆற்றல் சிவபெருமானுக்கு உண்டோ என்பதை மீண்டும் கேட்டறிந்து வா" எனக் கூறினள். பகீரதன் மீண்டும் சிவபெருமானை நினைத்து தவம் செய்தான். சிவபெருமான், "கங்கையின் பிரவாகம் எவ்வளவு வேகமாக இருந்தாலும் அதனைத் தாங்கிக் கொள்ளுவேன். நீ அஞ்சுதல் வேண்டாம்' என்று பகீரதனுக்குக் கூறினன். பகீரதன் மீண்டும் கங்கையை நோக்கித் தவமிருந்தான்.

மங்கை பாகனை நோக்கிமுன் மொழிந்தன வருடம்
தங்கு மாதவம் புரிதலுந் தழனிறக் கடவுள்
அங்கு வந்துநின் கருத்தினை முடித்துமென் றகன்றன்
கங்கையைத் தொழ காலமை யாயிரங் கழித்தான்.

முடிவில் கங்கையின் பிரவாகம் பூமியில் வீழ்ந்தது. அதனைச் சிதறாமல் சிவபெருமான் தன் முடி மீது ஏற்று அருளினன். பகீரதன் பிரமதேவனைக் குறித்து பத்தாயிரம் ஆண்டுகளும், கங்கையைக் குறித்து ஐயாயிரம் ஆண்டுகளும், மீண்டும் சிவனைக் குறித்து இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளும் கங்கையைக் குறித்து இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளும் தவம் செய்தான். ஆக இப்படிக் கடுந்தவமியற்றி இவ்வுலகிற்குக் கங்கையைக் கொணர்ந்தான் பகீரதன்.

சிவபெருமானுடைய சடாமுடியிலே கங்கை தங்கிவிடின் தான் மேற்கொண்ட தவத்திற்கும், இவ்வுலகிற்கும் பயன் இல்லையே என வருந்தினன் பகீரதன். இதனையறிந்த சிவபெருமான் சிறிதே கங்கையை வெளியில் விட்டனன்.

புன்னு னித்தரு பனியென வரநதி புனிதன்
சென்னி யிற்கரந் தொளிதர வணங்கினன் திகைத்து

மன்ன னிற்றலும் வருந்தனஞ் சடையள் வானதியின்று
என்னவிட்டன னெருசிறி தவனிபோந் திழிந்தாள்.

பகீரதன் கங்கை நீரைத் தன் முன்னோர்களது எலும்பின் மீது விட்டு அவர்களுக்கு நரகத்திலிருந்து வீட்டுலகையளித் தான் என்பது இதனுல் வெளியாகும் உண்மை. அப்பகீர தனது வரலாற்றுல் நாம் அறிய வேண்டிய நீதி ''நாம் எண்ணிய நற்காரியங்கள் எவையாயினும், அவை நிறை வேற அயராதுழைத்தல் வேண்டும்'' என்பதாம். அவ்வாறு பிறர் நலத்திற்காக உழைக்க முன்வரின் ஆண்டவனும் துணை நிற்பான் என்பதை 'குடிசெய்வல் என்னும் ஒரு வற்குத் தெய்வம் மடிதற்றுத் தான்முந் துறும்' என வள்ளு வரும் சுட்டிக் காட்டுதலே நாம் நினைவு கூர்தல் வேண்டும். சிவபெருமான் தன்னடியார்களுக்காகவும், அடியார்களின் மூதாதையர்களுக்காகவும் அருள வல்லவன். அவர்களுக்காக எத்துயரைபும் ஏற்றுக்கொள்ள முன் வருபவன் என்பதை யும் கம்பன் உணர்த்தும் திறனை நாம் அறிதல் வேண்டும்.

கம்பன், தானறிந்த தமிழையும் அம்மொழிமீது தான் கொண்டுள்ள பற்றினையும் எவ்வளவு அழகாக, கருத்துச் செறிவோடு கதைப்போக்கினூடே வைத்துக் கூறுகிருன் என்பதனைப் பார்ப்போம்.

சுதீக்கணன் என்னும் முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு இராமன் தன் தம்பி இலக்குவனனுடன் அகத்திய ருடைய ஆசிரமத்திற்கு வந்தான். அகத்தியருடைய சிறப்புக்களைக் கம்பன் தன் கூற்ருக நமக்கு அறிவிக்கின்ருன்.

''நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க் கடவுள் தந்ததமிழ் தந்தான்.''

'தழற்புரை சுடர்க் கடவுள் தந்ததமிழ்' என்ற ஈற்றடி யில் ஒரு வரலாற்றினையும் அமைத்துக் காட்டுகின்ருன் கம்பன்.

அவ்வரலாறு அகத்தியன் சிவபெருமானைக் காணும் பொருட்டு கயிலையையடைந்தான். அங்கு ஒரு மண்டபத்தில் சிவபெருமானும் அகத்தியனும் உரையாடிக் கொண்டிருந்தனர். அப்போது அம்மண்டபம் முழுவதும் திவ்ய பரிமளம் ஒன்று வீசியது. அகத்தியன் பரமசிவனை நோக்கி, "சுவாமி! இந்த நறுமணம் ஏது?'' என்று கேட்டான். பரமசிவன் அகத்தியனை அம்மண்டபத்தின் ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று, குவியலாகப் போட்டிருந்த சில ஏட்டுப் பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்ட மாத்திரத்தில் 'மதுரம்' என்ற பொருள் கொள்ளும் 'தமிழ்' என்ற பெயரைச் சொல்ல, உடனே பரமசிவன் அம்மொழிக்கு ஆதார விதிகள் இவ்வேட்டுப் பிரதிகளில் உள்ளனவென்று எடுத்துக் கொடுத்து உபதேசிக்க, உடனே தென்பகுதியில் உள்ள பொதிய மலைக்குப்போய்த் தனித்திருந்து அவ்விதிகளைக் கொண்டு பேரகத்தியம், சிற்றகத்தியம் என்னும் இலக்கண நூல்களை இயற்றி இவற்றைத் தம் மாணுக்கர்களாகிய தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்க்குக் கற்பித்தருளி தமிழ் மொழியைத் தழைத்தோங்கச் செய்தான் என்பதாம்.

இராவணன் சீதைபால் கொண்ட காம மயக்கத்தால் வருந்திக்கொண்டிருந்தான். அவ்வருத்தம் அவனை மிகவும் துன்பத்தில் ஆழ்த்தியது. அவனைச் சூழ்ந்திருந்த பொருள்களும் அவனை மகிழும்படிச் செய்யவில்லை, மாருக வாட்டின. இயற்கைக் காட்சிகளும் நிகழ்ச்சிகளும் கூட அவனை வருத்தின. இவ்வாறு இராவணனை வருத்திய இயற்கைப் பொருள்களில் நிலவும் ஒன்று. நிலவு தன் தண்ணிய கிரணங்களால் தன்னை மகிழ வைக்காமல் சுட்டெரிக்கின்றதே என இராவணன் அதனை நிந்திக்கின்ருன்.

'ஏ நிலவே! நீ மிகக் கொடுமையுடையவன். உன்னிடத்தில் நல்ல குணமில்லை. நீ விடத்தினும் கொடுமை மிக்கவன் இல்லையென்ருல் சிவபெருமான் உன்னைத்தன் சடா முடியில்

எடுத்து வைத்துக் கொள்வானே? திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சுபோல நீயும் அங்குதான் தோன்றினுய். அமுதை வீணுக்கும் நஞ்சினை உண்ட சிவன் உன்னையும் நஞ்செனக் கருதி உண்ணமாட்டாமையால் சடாமுடியில் வைத்துக் கொண்டான்', என்று சந்திரனைச் சாடினுன். இங்கு நாம் ஒரு நயத்தினைக் காண வேண்டும். காம மயக்கத்தில் வேதனையுறும் இராவணன் கூட சிவபெருமான் நிலாவினைச் சடாமுடியில் ஏற்றிக் கொண்டமையைக் குறித்து அதற்கு ஒரு காரணமும் காட்டுகின்ருன். இராவணன் வாக்கில் கம்பர் காட்டிய திறம் போற்றுதற் குரியது. தன் குறிப்பினை ஏற்றி வெளிப்படுத்திய பாடல் இதோ,

தாதுண் சடிலத்தலை வைத்தது தண்ட ரங்கம்
மோதுங் கடலிற் கிடைமுந்து பிறந்த போதே
ஓதுங் கடுவைத்தன் மிடற்றி னொளித்த தக்கோன்
ஈதுங் கடுவாமென வெண்ணிய வெண்ண மன்றே.

அநுமன் இலங்கைக்குள் நுழைந்தான். இலங்கா தேவியைச் சந்தித்தான். அவளும் அநுமனைக் கண்டது முதல் தன்னருகே வரும் வரை அவனைப் பற்றிச் சிந்தித் தாள். அநுமனது செயல்களையும் உற்று நோக்கினுள். உருவ அமைப்பினையும் அநுமனைத்தான் கண்டதுமுதல் அவன் செய்து வந்த செயல்களையும் எண்ணிப் பார்த்தாள். அவளால் அநுமனைப் பற்றிய எந்த முடிவுக்கும் வரமுடிய வில்லை. அநுமன் தன்னை நோக்கி வரும்போது இலங்கா தேவி கல்லென அசையாது நின்று விட்டாள். பிறகு சிந்தித் தாள்.

'எதிரே நிற்கின்ற இவன் வஞ்சம் கொண்டவன். வானரன் அல்லன். இயமனையும் கண்டு அஞ்சாத என்னை அச்சுறுத்தி விட்டான். நான் கல்லென அசையாது நிற்கின் றேன். இவன் கடல் நஞ்சங் கொண்ட கண்ணுதற் கடவுளே; இவனது சிரிப்போ மிக்க அச்சத்தைத்தருகிறது'

என்று கூறினாள். இலங்காதேவி, எல்லோரினும் விஞ்சிய ஆற்றலுடைய கடவுள் சிவபெருமானொருவனே என்றும், அவனுக்கு மட்டுமே தான் அஞ்சுவதாகவும் குறிப்பிட்டது கம்பன் சிவபெருமானுக்குத் தந்த ஏற்றமே யாகும்.

வஞ்சங் கொண்டான் வானர மல்லன் வருகாலன்
துஞ்சுங் கண்டாலென்னை யிவன்சூழ் திரையாழி
நஞ்சங் கொண்ட கண்ணுதலைப்போ னகுகின்றான்
நெஞ்சங் கண்டே கல்லென நின்றே நினைவுற்றாள்.

இப்பாடலில் கம்பன் ஒரு நயத்தினைக் காட்டு கின்றான். 'சிரிப்பன்றோ நேரார்ஊர் அட்ட நிலை' சிவபெருமான் சிரித்தான், பகைவருடைய முப்புரங்களும் அழிந்தன. இலங்காபுரியும் அநுமனுல் சுட்டெரிக்கப்படப் போகிறது. முடிவில் அழியவும் போகிறது என்ற குறிப்பினைக் கம்பன் நஞ்சங் கொண்ட கண்ணுதலைப்போல் நகுகின்றான் என்ற தொடரால் வெளிப்படுத்தும் திறத்தினைப் பாராட்டி வியவாதிருக்க முடியுமோ!

அசோகவனத்தில் சீதாபிராட்டியார் இராமனை திசை நோக்கித் தொழுதவளாய் அவனது வரவினை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். இராமபிரானது வருகையின்றித் தனக்கு நல்வாழ்வில்லை என்று எண்ணியவளாய்த் துயர்க் கடலில் மூழ்கிக் கிடந்தாள். பிராட்டியைக் காண அடிக்கடி இராவணன் அசோகவனத்திற்குச் சென்றான். மனந் திரியாத பிராட்டியினிடத்துத் தன் கருத்தினை வலியுறுத்திக் கூறித் தன் விருப்பத்திற்கு இணங்கித் தன்னை வாழ்விக்க வேண்டினன். அரக்கியர்கள் சூழ்ந்திருக்க, அந்நியஇடத்தில் தன் கணவனை என்று காணப்போகிறோமோ என்ற வேதனையுடன் இருந்தாள் பிராட்டியார்.

பிராட்டியாருக்கு இராவணன் வந்து உரையாடிச் செல்வது அதிக வேதனையைத் தந்தது. தன் நிலைமையையும் பொருட்படுத்தாது ஏதாவது சொல்லி அவனை நல்வழிப்

படுத்தவேண்டுமென்ற எண்ணமுண்டாயிற்று. "இந்த இலங்காபுரியினை ஆளும் பேறு பெற்றுள்ளாய், சிவபெருமான் உனக்குத் தந்த செல்வத்தை நீ துய்க்க வேண்டும். சிவபெருமானிடத்திருந்து நிறைந்த வரங்களைப் பெற்று உள்ளாய். ஒப்பற்ற செல்வத்தையும் வரங்களையும் இழந்து, தவறான வழியில் செல்லுகிறாய், தருமத்தைப் பாதுகாக்க வேண்டாமா?" என வற்புறுத்திக் கூறுகின்றாள்.

இப்பெருஞ் செல்வ நின்க
    ணீந்தபே ரீசன் யாண்டும்
அப்பெருஞ் செல்வந் துய்ப்பா
    னின்றுமா தவத்தி னன்றே
ஒப்பருந் திருவு நீங்கி
    யுறவொடு முலக்க வுன்னித்
தப்புதி யறத்தை யேழாய்
    தருமத்தைக் காமி யாயோ.

இது, கம்பன் சிவபெருமானின் நினைவுகளைப் பிராட்டி வாயிலாகக் கூறுமிடம்.

இராமபிரான் கூற்றாகச் சிவபெருமானின் சிறப்பினைக் கம்பன் காட்டுமிடங்கூறி இக்கட்டுரையினை நிறைவு செய்வோம்.

இந்திரசித்து நாகபாசக்கணையுடன் வந்துள்ளான். இந்திரசித்தைப் பற்றியும் அவன் வைத்திருக்கும் நாகபாசக் கணையினைப் பற்றியும் விபீடணன் இராமபிரானிடங் கூறினான். இந்திரசித்துவை ஏற்று அவனுக்கு அருள் புரிய வேண்டுமென விபீடணன் இராமனிடங் கூறினான். இராமபிரான், "அவன் நாகபாசக் கணையினை ஏவாதிருக்க வேண்டும். நம்மிடம் வந்து வேண்டிக் கொள்வானாயின், அவனை நீ விரும்பியவாறு ஏற்றுக் கொள்வோம். அவ்வாறு அவன் வாராதிருப்பின், திரிபுரங்கள் மூன்றையும் ஒரே அம்பினால் சிவபெருமான் சுட்டெரித்தது போல ஒரு நொடியில் அவனைச் சுட்டெரிப்போம்" என்று கூறினார்.

வரங்கொடுத் தினையபாசம்
வழங்கினன் தானே நேர்வந்து
இரங்கிடத் தக்க துண்டே
விகழ்கில னில்லை யென்னின்
உரங்கெடுத் துலக மூன்று
மொருவனே ரம்பிற் சுட்ட
புரங்களிற் றீய்த்துக் காண்பென்
பொடியொடு கடிகைப் போழ்தின்.

சிவபெருமான் திரிபுரத்தை எரிப்பதற்காக ஏவிய கணை திருமாலென்பதையும், இங்குத் திருமாலே இந்திரசித்தைச் சுட்டெரிக்க முற்பட்டதையும் நோக்கக் கம்பனின் கவித் திறமும் வெளிப்படும்.

கன்னித் தமிழ் வாழ்க! கண்ணுதற் பெருமானைக் காட்டிய கம்பன் புகழ் வாழ்க !!

[ஆசிரியர் குறிப்பு: இக்கட்டுரையின் முதற்பகுதி சிவ ஞான பூஜா மலர்—1981-ல் வெளியிடப்பட்டது. இதே தலைப்பில் மேலும் சில கட்டுரைகள் வரும் ஆண்டு மலர்களில் தொடர்ந்து வெளியிடப்படும்.]

சிவம்.

---

உ

சிவமயம்

# நினைவரும் காட்சி

சைவமாமணி வித்துவான் பொன். முருகையன்
திருப்பனந்தாள்

'இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே'

என்பது அருள்வாக்கு. இன்ன நிறம், உருவுடையவன் இறைவன் என்று வரையறுக்க முடியாவிட்டாலும் இறைவன் திருவடியில் பற்றுக்கொண்டு நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் அவன் திருவருள் கலப்பில் ஆழ்கின்ற அன்பர்கள் தங்கள் மனம் கொண்ட வடிவத்தை, உருவை, நிறத்தை எண்ணித் தம் திருவாக்கினால் உரைத்து அவ்வுருவை இறைவனாய் பாவித்துப் பரவிப் போற்றியுள்ளனர். குரு, லிங்க சங்கம வழிபாட்டு நெறியென்பது இவற்றுள் ஒன்றே. இறைவன் ஒருவன். அவன் எண்ணில் ஆற்றல் உடையவன். காலங்கடந்து அநாதியானவன் என்னும் மெய்ப்பொருளில் யாருக்கும் இரண்டு கருத்துக்கள் கிடையாது. இறைவனைக் கண்டு தொழுத நோக்கில் சில அமைப்புக்கள் உண்டு. இறைவனை, உலக முதல்வனை, தனி முதன்மையோனாக வழிபடுதலும் அவனை அம்மையப்பனாய்—மாதொரு பாதியனாய் வழிபடுதலும வழிவழி வந்த மரபு நெறியே. எவ்வாறு வணங்கினும் இறைவன் அருள்புரிவன். எனினும் அம்மையோடப்பனாய், ஏழை பங்காளனாய் இன்புடன் வீற்றிருக்கின்ற எம்பெருமானைக் கண்டு காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதியது அருளாளர்களின் பத்திமை உள்ளம்.

அது கனிந்த போதெல்லாம் உவந்துவந்து ஓராயிரம் கவி பாடினர். அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தை ஞான நூல்கள் பலபடப் போற்றிப் பாடும்.

சங்க நூலான புறநானூற்றின் கடவுள் வாழ்த்து அம்மையப்பர் திருக்கோலத்தை,

'பெண்ணுரு ஒரு திறன் ஆகின்று அவ்வுரு
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்'

என்றும்,

ஐங்குறு நூற்றுக் கடவுள் வாழ்த்து அவ்வொருவனின் திருவடி நீழலில் மூன்றுலகும் முகிழ்த்தன என்றும் கூறும்.

'நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழல்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே'

ஞானசம்பந்தப் பிள்ளையார் தமது வாக்கில்

'ஒருடம்பினை ஈருருவாகவே உன் பொருட்டில்
மீருருவாகவே' (3—114—10)

எனவைத்துப் போற்றுவர்.

கல்லினோடு பூட்டி அமணகையர் கடலிடை உய்க்க அரன் நாமம் நவிற்றி உய்ந்த அப்பரடிகளும்,

'வார்தரு பூங்குழ லாளை மருவி யுடன் வைத்தவனும்'
(4—4—7)

எனவும்,

ஆண் பெண் என்ற இரு பால் உருவமும் கலந்து பசுபதி யாக நின்றருள்கின்ற பரமனை,

'பாகம் பெண் ணண்பாக மாய்நின்ற பசுபதியை
(4—7—10)

எனவும் கண்டு களித்துப் பரவுவர்.

பெற்றம் ஊர்ந்த பெம்மானை பெறுதற்கரிய தோழனுகப் பெற்ற நாவலூர் நம்பிகளும்,

பஞ்சுண்டவல் குற்பணை மென்முலையா
ளொடு நீரும்ஒன் ருய்இருத் தல்லொழியீர்'

(7—2—4)

'பண்ணுர் மொழி யாளையொர் பங்குடையீர்'

(7—2—6)

'ஆணெடுபெண் ணுமுரு வாகிநின்ருய்' (7—3—9)

என்று அம்மையோடப்பனுகி நிற்கும் அம்பலவாணனை அன்போடுருகி அகங்குழைந்து அளவிலாத பாடல்கள் கொண்டேத்துவார்.

நரியைப் பரியாக்கி நன்மதுரை நகரில் நரை மூதாட்டி வந்தி தந்த பிட்டுண்டு தலையன்பில் கட்டுண்டு நின்ற கோமகனின் அருள் பெற்ற வாதவூர் தேசிகர் தனக்கு அம்மையும் அப்பனும் இல்லாத எம்பெருமான் உலகினர்க்கு அம்மையப்பராய் எழுந்தருளித் திருக்கோலம் காட்டுகின்ற பொலிவினை வாயாரப்பாடி மகிழ்வர். திருமேனியில் அம்மைக்கும் அப்பனுக்கும் உரிய திருவருள் திருவணிகளை முறைப்படக் கண்டு போற்றியது அவ்வன்புள்ளம். அதனேடு அவ்வாறு மாதொரு கூறனுக இருக்கின்ற திருக்கோலம் 'தொன்மைக் கோலம்' என்றும் மகிழ்ந்துரைக்கும்.

'தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி'

(8—10—15)

என்னும் திருப்பாடல் இவ்வழகை வெளிப்படுத்தும்.

இவ்வாறு அம்மையுடன் அப்பனுகிக் காட்சி தரக் காரணமும் உண்டு என்கிருர் வாக்கின் மன்னர். அதற்கு என்ன காரணம்? அருளே! உலக உயிர்களை உய்யக் கொண்டருளலே முதன்மைக் காரணம் என்பார்,

'அரிதரு கண்ணியாளை யொரு பாகம'க
அருள் காரணத்தில் வருவார்' (4—8—3)

எனச் செப்புவர்.

'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' என வாசகச் செழு மறை மொழியும். மேற்கூறிய எல்லாம் அவனை இரண்டு பாகம் உடையான் என்கின்றன. எனில் இது எவ்வாறு சாத்தியமாகும் எனும் வினு எழுவது இயற்கையே! உலக உயிர்களில் தோய்வின்றித் தானே நிற்கும் தனிநிலையில் 'சிவம்' என வழங்கப்படும். அதுவே உலகெலாம் ஆகி வேருய் உடனுமாய் நின்று உயிர்களுக்கு அருள் செய்ய அவனேடு பின்னமின்றி, உயிர்கள் தன்னிலைமை சார நிற்பது சத்தி. எனவே ஒன்ருன முழுமுதற் பொருளையே இவ்வாறு சத்தியும் சிவமுமாக இரு தன்மையுடையதாக எண்ணி வழிபடுதல் மரபு. சைவ சித்தாந்த சாத்திரமும்,

'அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்'
(திருக்களிற்று—1)

என்றும்,

'எத்திறம் நின்ருன் ஈசன் அத்திறம்
அவளும் நிற்பள்' (சித்தி—165)

என்றும்

'அருளது சத்தியாகும் அரன் தனக்கு' (சித்தி)

என்றும் சாற்றும்.

தனிமனிதனுக இருக்கின்ற ஒரு நபரை 'ஒருவன்' என்று கூறுகின்ருேம். அதே நபர் பெண்பாலாக இருப்பின் அவளை 'ஒருத்தி' எனச் சொல்லுவோம். ஒரே உடலில் ஆண்பால் ஒரு பகுதியும், பெண்பால் ஒருபகுதியும் உள்ளன. எவ்வாறு அழைப்பது? ஒருவன் என அழைப்பின் பெண் பாலும் உடைமையின் அது முற்றக் கூறியதாகாது. ஒருத்தி எனின் 'ஆண்' பாகமும் உடைமையின் அதுவும் வழுவே.

பின் என்னதான் செய்வது? எவ்வாறு பெயரிட்டழைப்பது? இரண்டுக்குமே பொதுவாக 'ஒருவர்' எனப் பொதுச் சொல் லால் அழைக்கலாமே! அந்தச் சொல் மட்டும் இல்லையேல் என்பாடு திண்டாட்டம்தான் என்பதாக இறைவனின் அர்த்தநாரீசுரத் திருக்கோலம் பற்றிய நினைவுக் கோவை களை நிறைவு செய்கின்றார் தெய்விகக்கவிஞர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்.

ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன்று ளுலவ்
உருவையிஃ தொருத்தன் என்கோ வொருத்தி என்கோ
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொல்இல தெனின் யான்மற் றென்சொல்கேனே
(சிதம்பர செய்யுட் கோவை-54)

இவ்வாறு பொதுச் சொல்லால் அழைத்த போதிலும் நேயத்தை வெளிப்படுக்கின்ற உறவு முறையை எவ்வாறு காட்டுவது? உயிர்களுக்கு—உயிர் அளித்த தந்தை, தாயை விடப் பிறிதொரு உறவும் பெரிதில்லை. உலகுக்கே உயிர் கொடுத்த இறைவனையும் இறைவியையும் எவ்வாறு அழைப் பது? 'அம்மையே' எனின் பரமன் இல்லையாகும். 'அப்பனே' எனின் 'அகிலநாயகி' இல்லையென்றாகும். அப்போது இரு வரும் உள்ள ஒரு கூட்டுருவத்தை நான் எவ்வாறு அழைப்பேன்? எப்படி எடுத்துரைப்பேன் என்றுவருந்திய ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் அதற்கும் ஓர் வழி காண்கின்றார். என் தந்தை, என்தாய் எனும் சொற்கள் இரண்டும் விளி யேற்கையில் 'எந்தாய்' என நீளும் எனவே 'எந்தாய்' என அழைப்பேன். அவ்வாறு அழைப்பின் இரண்டு கூறும் (என் தந்தை, என்தாய்) அடங்கிவிடுமே என நயப்புற மொழிவர்:

'செவ்வாய்க் கருங்கண்பைந் தோகைக்கும்
வெண்மதிச் சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு வொன்றே யுளதவ்
வுருவினை மற்றெவ்வாச்

சியமென் றெடுத்திசைப் பேமின்
னருட் புலியூர்ப்
பைவாய்ப் பொறியரவு அல்குல் எந்தாயென்று
பாடுதுமே'* (சி. செ. கோ-73)

இதில் சிலேடையாக அரவு போன்ற அல்குலையுடைய எம் தாயே எனவும், அரவையணிந்த அல்குலையுடைய எம் தந்தையே எனவும் இருபொருள் கொள்ளலாம்.

இப்படிப்பட்ட நிலைகளில் ஆண் பெண் சேர்ந்த ஒரு கூட்டுருவமாக — அம்மையப்பனாக — இறைவனின் திருக் கோலத்தைக் கண்டு மகிழ்ந்து பல அருளாளர்கள் பாடி உள்ளனர். இருப்பினும் அவர்களுள் பட்டினத்துப் பிள்ளை யார் அம்மையப்பனாகிய அர்த்தநாரீசுவரத் திருவுருவத்தில் திருவடி முதற்கொண்டு திருமுடி வரை உள்ள திருக்கோலப் பொலிவினை அடுத்தடுத்து அழகுற மொழிந்துள்ளமை கருத்தைக் கவர்வதாகும்.

திருவடி — அப்பன்

இறைவன் திருவடி தெய்விகம் பெற்ற செந்தாமரை மலரின் செவ்வியினையுடையதாய் மலர்ந்துள்ளது. வாடாத நாண் மலரின் இதழ் எனச் சிவந்த நிறம் பெற்றுள்ளது. சிலம்பும், கழலும் அலம்பப் புனையப் பெற்றுள்ளது. பாலற் காகச் சினந்து காலனின் ஆற்றலை மாற்றியது. அகந்தை யால் இறைவனைப் போற்றாது ஆற்றல் தோன்ற திருமால் ஏனமாகி அகழ அவற்குத் தோற்றாது நிமிர்ந்து நின்ற நெடிய தோற்றமுடையது. அன்பால் நினைவார்கள் பச்சிலை கொண்டு பூசித்தாலும் முன்வந்து அருளி அவர்களுக்கு முத்திப் பேற்றை நல்குவது என்பார்.

---

* ஸ்ரீ குமரகுருபர சுவாமி பிரபந்தங்கள்
(டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு 1939-ம் ஆண்டுப் பதிப்பு— பக்கம் 524)

தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து
வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து
சிலம்பும் கழலும் அலம்பப் புனைந்து
கூற்றின் ஆற்றல் மாற்றிப் போற்றாது
வலம்புரி நெடுமால் ஏனமாகி நிலம்புக்
காற்றலின் அகழத் தோற்றாது நிமிர்ந்து
பத்தி அடியவர் பச்சிலை இடினும்
மூத்தி கொடுத்து முன்னின் றருளித்
திகழ்ந்துள தொருபால் திருவடி
(திருவிடை. மும்மணிக்கோவை (1—9)

அம்மை—திருவடி

அம்மையின் திருவடி செம்மை நிறங் கொண்டது. மென்மையானது. தேவமகளிர் சின்ன மெல்லிய மலர்களைக் கொண்டு போற்றி வழிபட அம்மலர்கள் தீண்டுவதால் சிவப்புற்றது. பஞ்சும் அனிச்சமும் தோற்க அவற்றினும் நொய்ம்மையுடையது என்று கூறுவார் பட்டினத்தடிகள்.

'…………………… அகம் சேந்து
மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி
நெய்யில் தோய்த்த செவ்வித் தாகி
நூபுரம் கிடப்பினும் நொந்து தேவர்
மடவரல் மகளிர் வணங்குபு வீழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து
பஞ்சியும் அனிச்சமும் எஞ்ச எஞ்சாத்
திருவொடும் பொலியும் ஒருபால் திருவடி.

திரு இடை:—

சிவம்

சிவமாகி நிற்கின்ற செம்பொருளின் திரு இடை, வேங்கையின் தோலைக் கட்டியுள்ளது. அதன்மேல் பாம்புக் கச்சை ஆர்த்துள்ளது. அழகுறத் திகழ்கின்றது எனக் கவினுறக் கவி யாப்பார் அடிகள்.

நீலப் புள்ளி வாளுகிர் வேங்கைத்
தோலின் கலிங்கம் மேல்விடுத் தசைத்து
நச்செயிற் றரவக் கச்சையாப் புறுத்துப்
பொலிந்துள தொருபால் திருவிடை (திரு. மும். கோ)

**சத்தி**

உமையன்னையின் ஒளிவீசுகின்ற சிவந்த ஆடை அணிந்து அதன்மேல் ஒலிக்கின்ற மணிகள் பதித்த மேகலை கட்டிய திரு இடையை

"........................ இலங்கொளி
அரத்த ஆடை விரித்து மீதுநீஇ
இரங்குமணி மேகலை ஒருங்குடன் சாத்திய
மருங்கிற் ருகும் ஒருபால் திருவிடை"

என்பர் பட்டினத்தடிகள்.

**திருமார்பகம்—எம்பெருமான்**

சிவந்த கண்ணையுடைய பாம்பும், பசிய கண்கொண்ட ஆமையும் பன்றியின் கொம்பும், எலும்பு மாலையும், முப்புரி நூலும் புனைந்து நீறணிந்து பொலியும் திருமார்பகம் வெண்மையான நீறு அணிந்த ஒரு பவள மலையைப் போல் காட்சி தருவதாகக் காட்டுவர் பட்டினத்தடிகள்.

செங்கண் அரவும் பைங்கண் ஆமையும்
கேழற் கோடும் வீழ்திரள் அக்கும்
நுடங்கு நூலும் இடங்கொண்டு புனைந்து
தவளநீ றணிந்ததோர் பவளவெற் பென்ன
ஒளியுடன் திகழும் ஒரு பால் ஆகம்

**எம்பெருமாட்டி**

அம்மையின் திருமார்பகம் கச்சும் முத்துமாலையும் அழகுறப் புனைந்து, செஞ்சாந்துக் குழம்பு அணிந்து, குங்குமக் குழம்பும் எழுதப் பெற்று பொன்தாமரையின் முற்ருத அரும்பு போன்று அழகுற அமைந்துள்ளது என்பார் பட்டினத்து அடிகள்.

'வாரும் வடமும் ஏர்பெறப் புனைந்து
செஞ்சாந் தணிந்து குங்குமம் எழுதிப்
பொற்று மரையின் முற்று முகிழென
உலகேழ் ஈன்றும் நிலையில் தளரா
முலையுடன் பொலியும் ஒருபால் **ஆகம்**

**திருக்கரம்**

மூன்று இலைவடிமுள்ள வேலும், மழுப்படையும், தமருகப் பறையும் ஆகிய இவற்றோடு பாம்பினையும் எங்கெங்கும் அணிந்துள்ள இறைவனின் திருக்கரத்தை

'அயில்வாய் அரவம் வயின்வயின் அணிந்து
மூவிலை வேலும் பூவாய் மழுவும்
தமருகப் பறையும் அமர்தரத் தாங்கிச்
சிறந்துள தொருபால் **திருக்கரம்**

எனச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இறைவியின் திருக்கரமோ, செறிவான சூடகம் எனும் அணியையணிந்து கழங்கும் மென்மையான பந்தும் கிளியும் தாங்கி நிற்கின்றது எனப்பாடுவர்

........................ செறிந்த
சூடகம் விளங்கிய ஆடகக் கழங்குடன்
நொம்மென் பந்தும் கம்மென் கிள்ளையும்
தரித்தே திகழும் ஒருபால் **திருக்கரம்**

**திருநெடுநாட்டம்**

சிவபெருமானின் திருநாட்டம் சூரியனும் அக்னியும் கலந்து உண்டான வெம்மையுடன் விளங்குவதாகவும், மான் கண்ணின் செவ்வியும், வெண்மையான பாலிற்கிடந்த நீல மணி போன்ற ஒளியும், குளத்து நீரில் உள்ள குவளைப் போதின் குளிர்ச்சியும், நிறமும் அடியார்களின் வெப்பு நோய்க்கிரங்கி இறைவனின் திருநாட்டம் உலகம் ஏழினை யும் காப்பதாகவும் அழகுற மொழிவார் அடிகள்.

1. இரவியும் எரியும் விரவிய வெம்மையின்
ஒருபால் விளங்கும் திருநெடு நாட்டம்

2. நவ்வி மானின் செவ்வித் தாகிப்
பாலில் கிடந்த நீலம் போன்று
குண்டுநீர்க் குவளையில் குளிர்ந்து நிறம்பயின்று
எம்மனோர்க் கடுத்த வெம்மைநோய்க் கிரங்கி
உலகேழ் புரக்கும் ஒருபால்நாட்டம்

திருமுடிப்பொலிவு

நொச்சி, ஊமத்தை, கொன்றை, தும்பை ஆகிய அழகுறும் மலர்களும், கங்கை நதியும், பசிய தலைமாலையும், பாம்பும், குழவித்திங்களும் ஆகிய இவற்றோடு நெருப்பில் திரித்தாற் போன்ற அழகிய சடையுடன், நான்முகன் ஆகிய அன்னப்பறவை காணாத படிக்குக் கருத்தைக் கடந்து உள்ளது இறையோன் திருமுடியெனப் பொற்புற மொழிவர்.

நொச்சிப் பூவும் பச்சை மத்தமும்
கொன்றைப் போதும் மென்றுணர்த் தும்பையும்
கங்கை யாறும் பைங்கண் தலையும்
அரவும் மதியமும் விரவித் தொடுத்துச்
சூடா மாலை சூடிப் பீடுகெழு
நெருப்பில் திரித்தனைய உருக்கிளர் சடிலமொடு
நான்முகங் கரந்த பால்நிற அன்னம்
காணா வண்ணம் கருத்தையும் கடந்து
சேண்இகந் துளதே ஒருபால் திருமுடி

தேவமகளிர் கற்பகப் பூந்தளிரைப் பறித்துத் தொடுத்த தெய்வ மாலையை நீலக்குழல் மேல் அணிந்த சிறப்பினை யுடையது இறைவியின் திருமுடி. அம்மாலையில் வண்டும் தேனும் கிண்டும் என்னும் கருத்தமைய,

'.............................. பேணிய
கடவுள் கற்பின் மடவரல் மகளிர்
கற்பக வனத்துப் பொற்பூ வாங்கிக்
கைவைத்துப் புனைந்த தெய்வ மாலை
நீலக் குழல்மிசை வளைஇமேல் நிவந்து
வண்டும் தேனும் கிண்டுபு திளைப்பத்
திருவொடு பொலியும் ஒருபால் திருமுடி'

இப்படிப்பட்ட திருக்கோலப் பொலிவினைக் காணுதல் அனைவர்க்கும் வாய்ப்பதன்று. இதன் சீர்மையை எண்ணிட முடியாதது. நினைத்துப் பார்க்கவும் அருமையானது. இவ்விரு உருவும் ஒன்றாகி உலகேழும் ஈன்றதாகக் கவி படைப்பார் பட்டினத்துப் பிள்ளையார்.

இனைய வண்ணத்து நினைவரும் காட்சி

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சுத்தாத்துவித சித்தாந்த சைவம்

சித்தாந்த போதகாசிரியர்
த. சி. ச. இராமச்சங்கு பாண்டியன், B. A.,
20, தந்தி ஆபீஸ் சாலை, தூத்துக்குடி-628001

திருச்சிற்றம்பலம்

ஈருய்முத லொன்றுயிரு பெண்ணுண்குண மூன்றுய்
மாருமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
ஆருர்சுவை யேழோசையோ டெட்டுத்திசை தாணுய்
வேருயுட னுனிடம் வீழிம்மிழ லையே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் 1-ம் திருமுறை

உலக வாழ்வில் மக்களின் குறிக்கோள்கள் பல்வேறு வகையாகக் காணக் கிடக்கின்றன எனினும் நம் முன்னோர்கள் வீடுபேறடைதலையே தலையாய குறிக்கோள் என வகுத்தனர். அக்குறிக்கோளை அடையச் செலுத்தும் நெறியே சமயம் எனப்படும்.

எனினும் மக்களின் உணரும் ஆற்றல்கள் வெவ்வேறு வகையாய் விளங்கும். இவ்வகை ஆற்றல்களின் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்பச் சமயங்களும் பலவாயின. எனவே உண்மைச் சமயம் ஏது என்னும் ஐயமேற்படுவது இயல்பே. எல்லாக் கோட்பாடுகளையும் தன்னுள் அடக்கிச் சாதனம் பயன் இவைகளால் மேம்பட்டு விளங்குவது யாதோ அஃதுண்மைச் சமயமாகும். எனவே அதுபற்றி ஆய்தலும்

துணிதலும் வேண்டப்படுவதே. அவ்வாறு ஆய்ந்து துணிந்தோர் மேற்கொண்டது சுத்தாத்துவித சித்தாந்த சைவமாகும்.

சைவமாவது சிவசம்பந்தமுடையது என்று பொருள்படும். சிவ என்னுஞ் சொல்லடியாகப் பிறந்த தத்தித பதம், பெயரடியிற் பிறந்த பெயர் தத்திதமாகும்.

சிவ என்னுஞ் சொல்லில் சிகாரமானது கிடத்தல் என்னும் பொருள்படும். அதுவே சீ என நின்று மெலிவித்தல் கூருவித்தல் என்னும் பொருள்படும் வகரம் வலியையும் இடத்தையும் குறிக்கும். அன்றியும் சிவம் என்னுஞ் சொல் மங்கலம் என்னும் பொருள் தரும். மேலும் எழுத்து நிலைமாற்றத்தால் வசி என்னும் பதம் காந்தி என்னும் பொருள் தரும். எனவே அச்சொல் கீழ்க்கண்ட பொருள்களை உடைத்தாயிருக்கும். அவையாவன:—

1) சாதுக்கள் மனம் தம்பாற் கிடத்தற்கு இடமாவர், 2) மாசங்கார காலத்து உலகமெல்லாந் தம்பாற் ஒடுங்க இடமாவர்; 3) சாதுக்கள் மனத்திலே தங்கி இருப்பவர், 4) பாச சத்தியை மெலிவித்துச் சிற்சத்தியை கூருவிப்பவர். 5) பரமானந்த ரூபியாய் நிர்விகாரியாய் இருப்பவர்; 6) சுகத்தோடு கூடியவர்; 7) சுகத்தைக் கொடுப்பவர்; 8) காந்தியை உடையவர்; 9) அநாதியே முற்றறிவு முற்றுத் தொழிலாகிய சிவத்துவமுடையவர்; 10) சிவத்துவம் என்னும் அதிசுத்தமுடையவர் என்பனவாம்.

அச்சொல் அவ்வாறு பொருள்படுதலால், சிவபெருமான், தியாதா, பரப்பிரம்மம், பரமன், முன்னோன், தாணு, நம்பன், தேவன், மாதேவன் நித்தன், தற்பரன், நந்தி, நிராலம்பன், ஞானமூர்த்தி, நாராயணன், அச்சுதன், இறையோன், சங்கரன், பராபரன், அரன், பிஞ்ஞ ன், நக்கன், நிராமயன், உக்கிரன், பீமன், பசுபதி, சதாசிவன்,

ஏகன், நிருமலன், அமலன், பிரான், அநந்தன், ஆதி, சுயம்பு, சம்பு, திரியம்பகன், பர்க்கன், சாமி, ஈசானன், மகேச்சுரன், காலகாலன், உருத்திரன், பகவன், எண்குணன், வரதன், வாமதேவன், சோமசுந்தரன், வேதியன், மறைமுதலி, விரூபாக்கன் முதலான அளவிலாத் திருப்பெயர்களைக் கொண்டருளினன்.

எனவே சிவனென்னுந் திருப்பெயரே மேற்கூறியவாறு பொருள்பட்டு அத்தலைவனின் உரு, குணம், குறி, செயல் முதலானவைகளைக் கருதுமாறு விசிட்டமாய் நிற்றலின் மற்றைச் சொற்கள் போலாகாது தன்னை நினைத்தல் கேட்டல் செய்தவழி உண்மையை விளக்கிச் சிவசாயுச்சியத் திற்குங் கொண்டு செல்ல வல்லதாய்ப் பதியைக் குறித்து நிற்கும் திருப்பெயருமாயிற்று.

இதுகாறுங் கூறியவாற்றால் மேலே கூறப்பெற்ற தன்மைகளோடு கூடிய பரம்பொருளோடு சம்பந்தம் உடையது சைவம் எனப்படும். அவ்வாறான சம்பந்தமுடை யோரே சைவர் எனப்படுவர். ஆயின் சிவ பரம்பொருள் ஔபச்சிலேடிக (எள்ளினுள் நெய் போன்ற) வியாபகமாய் நிற்றலின் சிவசம்பந்தம் எஞ்ஞான்றும் உள்ளதேயாம். எனவே எல்லோருக்கும் பொதுவாய் நிற்பதன்றிச் சைவர் என ஒரு சாராருக்கு உரிமை உடையதாதல் செல்லாதாய் முடியுமே என ஐயம் எழலாம்.

ஆன்மாக்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையன. சார்ந்ததன் வண்ணமாம் இயல்பின. சகச மலத்தோடு அநாதியே கூடி அறியாமையில் அழுந்தி நிற்பன. எனவே இறைவன் கலந்து நிற்பினும் அதனை உணரும் ஆற்றலை இழந்தன. பிறவிக் குருடன் ஆதித்தன் சந்நிதியின் நிற்பி னும் ஆதித்தனை அறிய இயலாத் தன்மையன் ஆவன். அது போல ஆன்மாக்கள் அச்சம்பந்தத்தை அறிய இயலா வாயின. எனவே பொது என்பது பொருந்தாது. அச்சம்பந் தத்தை அநுபவமாக உணர்வோரே அச்சம்பந்தத்திற்கு

உரியராவர். அச்சம்பந்தத்தை உணர்ந்து சிவஞானத்தை அடைய வழிகோலுவதாகிய கிரியை தீக்கை எனப்படும். மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பது என்பதே தீக்கை என்னும் சொற்பொருளாகும். ஆகலின் அவ்வாறு தீக்கை பெற்று அச்சம்பந்தத்தை அநுபூதியாக உணரத் தலைப்படுவோரே சைவர் எனப்படுவர் என்பதே பொருந்துமாறு விளங்கும். எனவே சிவ பரம்பொருளோடு அச்சம்பந்தத்தை அடையுமாறு செய்வதே சைவம் எனப்படும் என்பது தெளிவாகும்.

ஆயினும் சைவம் என்ற பெயருடைய சமயங்கள் பலவாகும். அவற்றின் கோட்பாடுகளும் வெவ்வேறுகும். எனவே அவற்றினின்றும் வேறுபடுத்துவது சித்தாந்தம் என்னும் அடையாகும். சித்தாந்தம் என்பது சித்தம்+ அந்தம் என்ற இரு சொற்களின் கூட்டமாகும். முடிந்த முடிவு என்பது அதன் பொருளாகும். காரணப் பெயராகலின் எல்லாக் கொள்கைகட்கும் பொதுவாய் நிற்கும் தன்மைத்து. ஆயினும் அதுசிவபெருமானுல் அருளப்பெற்ற காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களுக்கும் பிரசித்தமான உரிமை உடையதாகும். அஃதெவ்வாறெனில் பங்கஜம் என்றசொல் காரண இடுகுறியாய்த் தாமரையைக் குறிப்பது போலாகும். பங்கஜம் என்பது சேற்றில் தோன்றுவது என்னும் பொருள்பட்டுக் காரணப் பெயராய்ச் சேற்றில் தோன்றுகின்ற எல்லாப் பொருளுக்கும் பொதுமையாய் நிற்கவேண்டும். ஆயின் அச்சொல் சேற்றில் தோன்றுகின்ற எல்லாப் பொருள்களையும் குறிக்காது தாமரையையே குறித்து நிற்கும். காரணப் பெயராயினும் இடுகுறிப் பெயர் போன்று தாமரையையே குறித்து நிற்றலின் காரண இடுகுறியாகும். அதுபோலச் சித்தாந்தம் என்பதும் பற்பல சமயங்களின் முடிவுகளைக் குறிக்கக்கூடியதாயினும் காரண இடுகுறியாய் முடிந்த முடிபாகிய சிவாகமங்களையே குறித்து நிற்கும்.

அங்ஙனமாயின் மற்றைச் சைவரும் ஆகமங்களையே பிரமாணமாகக் கொண்டவராகலின் ஒரு சாரரே தமக்குரிமை கொள்ளல் சாலுமோ என்னும் ஐயம் எழும். அஃதுண்மையாயினும் அவருள் ஒரு சாரார் ஆகமத்துள் விதித்தவைகட்கு மாறுபாடானவைகளைப் போதிக்கும் பாசுபதம் முதலிய நூல்களைச் சிறப்பு பிரமாணமாகக் கொள்கின்றனர். எனவே அவர்கள் சைவாகமங்களைப் பரமப் பிரமாணமாகக் கொள்ளார். மற்றையோர் ஆகமங்களைப் பிரமாணமாகக் கொள்ளினும் தத்தங் கொள்கைக் கேற்பக் காணப்படும் பகுதிகள் மாத்திரைக்கே பிரமாணங் கொண்டு நுண்மைப் பொருளுணர்த்தும் பகுதிகளைக் கைவிடுகின்றனர். எனவே அவர்கள் ஆகமங்களை முழுமையாகப் பிரமாணம் எனக் கொண்டிலர். அதுபற்றி வேறுபடுத்துவது வேண்டப்படுவதாயிற்று.

மற்றைச் சமயங்களினும் உயர்நிலையைக் காட்டச் சுத்தாத்துவிதம் என்ற அடை கொடுக்கப்பட்டது. அன்றியும் மேலே சிவசம்பந்தமுடையோரே சைவர் என்றவழிப் பெறப்பட்ட சம்பந்தம் யாதோ வென்னும் ஐயமறுத்தலையும் உடனாய்க் கொண்டு விளங்கும்.

அத்துவிதம் என்ற சொல்லானது ந+துவிதம் என்ற இரண்டு சொற்களின் கூட்டமாகும். துவிதம் என்பது இரண்டென்பதை விதந்து சொல்வது என்பதாகும். ஆயின் நகாரத்திற்கு ஆறு பொருள்கள் உண்டு.

1. இன்மை: (அபாவம்) எடுத்துக்காட்டு: அச்ருங்க: மனுஷ்ய: இதன் பொருள் கொம்பில்லாதவன் மனிதன் என்பதாம். மனிதனுக்கு யாண்டும் கொம்பின்மையின் இன்மைப் பொருளாகும்.

2. அன்மை: (தத்ஸாத்ருச்யம்) அஃதாவது ஒருபுடை ஒற்றுமையும் ஒருபுடை வேற்றுமையும் உடையது. எ—டு அநச்வம், குதிரை போன்றதாகியும் குதிரையினின்றும்

வேறுபாடுடையது கோவேறு கழுதை. எனவே அன்மைப் பொருள் பற்றி வருவது

3. வேறு: (ததந்யத்வம்): எ—டு: அநாகாச: பூ:—இதன் பொருள் பூமி ஆகாயத்தினும் வேறு. ஒப்புமை இல்லாமையின் அன்மைப் பொருளினின்றும் வேறுகக் கொள்ளப் பட்டது.

4. குறைவு (ததல்பதா) எ—டு: அநுதரா கந்யா. இதன் பொருள் வயிறுசிறுத்த கன்னி என்பதாம். வயிற்றின் இன்மையைக் காட்டாது சிறுத்திருப்பதைக் காட்டுவதால் குறைவாகும்.

5, பெருமையோ அதிகமோ இன்மை: (அப்ரசஸ்த்யம்) எ—டு: அமரா: தேவா: இதன் பொருள் தேவர் மரணமில்லாதவர் என்பதாகும். மனிதர் போன்று கடுந்துயரும் இடையிடையே நேர்வதாகிய சாக்காடும் அதிகம் இல்லாதவராகலின் ஒப்புமைக்கண் இல்லாமை போலத் தோன்றும்.

6. மறுதலை: (விரோத:) எ—டு அபுண்யம். இதன் பொருள் புண்ணியத்தின் எதிர்மறையாகிய பாவம்.

மேலே கண்ட ஆறு பொருள்களுள்ளும் முக்கியமானவை மூன்று. அவையாவன இன்மை, அன்மை, மறுதலை என்பனவாம்.

இவற்றுள் இன்மைப் பொருள் பற்றி மாயாவாதி முதலியோர் இரண்டின்மை என்று பொருள் கொள்வர். இரண்டின்மை ஒரு பொருளின் மாத்திரையினன்றி இரண்டு முதலியவாய் எண்ணப்படும் பொருள்களின் இல்லாமையின் அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருள் ஒன்றென்பதாகும் என்பர். ஒரு பொருளாயினும் குணகுணி என வேற்றுமை தோன்ற நிற்பிற் **கேவலம்** ஒன்ருதலின்மையின் அத்துவிதம் என்ற சொல் உபசாரமாய் முடியும். எனவே அத்துவிதம் என்பது தன்னின்வேருய் ஒரு பொருளுமின்றித் தானுங் குணமுடைப் பொருளென விசேடிக்கப்

படுதலின்றி நிருவிசேடமாய் நிற்கும் பரப்பிரமப் பொருள் ஒன்று என்பர். எனவே அவர் கேவலாத்துவிதிகள் என வழங்கப்படுவர். கேவலம் என்பது மாத்திரைப் (merely) பொருட்டு.

இராமாநுசர் சிவாத்துவித சைவர் முதலியோரும் அவ்வாறே இன்மைப் பொருள்பற்றி ஒன்றெனப் பொருள் கொள்வர். ஆயினும் பரப்பிரம்மப் பொருளுக்குச் சத்தி சங்கற்பம் முதலிய குணங்கள் உபநிடதங்களிற் கூறப்பட்டு உள்ளன. அக்குணங்களைச் செயற்கை எனக் கூறுதல் பொருந்தாது. செயற்கை என்பது வேற்றுப்பொருள்களின் சம்பந்தத்தால் வருமாகலின் ஒன்றென்பதோடு முரணும். அன்றியும் பசுபாசங்கள் உண்டென்பதும் உபநிடதங்களிற் கூறப்படுகின்றன. எனவே அவற்றோடு முரணிக் கேவலாத்து விதமெனக் கோடல் பொருந்தாது. எனவே தன்னுடைமை புடைய பசு பாசங்களாலும் தன் குணங்களாகிய சத்தி சங்கற்ப முதலியவற்றானும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்ற பரப்பிரம்மம் இரண்டில்லை ஒன்றென்பதே அத்து விதம் என்ற சொற்குப் பொருள் என்பர். இவ்வாறு அவர் விசிட்டாத்துவிதங் கோடலின் விசிட்டாத்துவிதிகள் என வழங்கப்படுவர்.

பேத வாதிகள் மறுதலைப் பொருள் பற்றி இரண்டன் மறுதலையாகிய ஒன்றெனப் பொருள் கொள்வர். அங்ஙனங் கொள்ளவே அவ்வொன்றன் மறுதலையாகிய இரண்டாவதும் உண்டென்றற்கு இழுக்கின்மையின் அத்துவிதமென்பதும் துவிதமென்னும் பொருளைப் பயக்கும் என்பர்.

எனவே இவர்களெல்லோரும் அத்துவித மென்ற சொற்குப் பொருள் ஒன்றென்பதேயாம் எனக் கொண்டு தத்தம் மதங்களோடு முரணுமைப் பொருட்டுக் கேவல மென்றும் விசிட்டமென்றும் மறுதலை யென்றும் அடை கூட்டி இடர்ப்பட்டுப் பொருள் கொள்வர். அவருள் மாயா வாதிகள் கூறும் கேவலமும் பேதவாதிகள் கூறும்

மறுதலையும் சுருதிகளோடு முரணுகின்றன. ஏனையோர் கூறும் விசிட்டமென்பது பொருந்துமாயினும் அத்துவித மென்ற சொல்லுக்குப் பொருள் ஒன்றெனக் கோடல் பொருந் தாது. ஒன்றென்பது பொருளாயின் ஒன்றெனவே விளங்கக் கூறலமையும். எனவே அத்துவிதம் எனவும் உய்த்துணர வைக்கும் பொருட்டுக் கூறப்பட்டது என்பது பொருந்தாது.

அன்றியும் "ஏகமேவாத்விதீயம்" என்னுமிடத்து ஒரே பொருளுள்ள இரு சொற்களையும் சேர்த்துக் கூறல் வெற் றெனத் தொடுத்தலாய் முடியும். கூறியது கூறலுமாம்.

மேலும் மாயாவாதிகள் கூறுமாறு பொருள் ஒன்றே யாயின், அப்பொருள் தன்னைத்தானே ஒரு பொருளெனக் கருதுதல் மிகை என்னும் குற்றமாகும்.

அன்றியும் ஏகமென்று சுட்டுவதுண்மையின், அவ்வாறு சுட்டிக் கூறும் பொருளும் அவ்வாறு சுட்டப்படும் பொருளும் என இரண்டு பொருள் பெறப்படுதலின் ஒன்றே எனச் சாதித்தல் பொருந்தாது.

இன்னும் எண்ணுப் பெயர்மேல் வந்த நகாரம் அன்மைப் பொருள் மாத்திரையே உணர்த்திப் பொதுமையின் நிற்கும். ஏனைச் சொற்களின்மேல் வந்த நகாரம் இன்மை மறுதலைப் பொருள்களையும் உணர்த்தி நிற்றல் போல எண்ணுப் பெயர்மேல் வந்த நகாரம் இன்மை மறுதலைப் பொருள்களையும் உணர்த்தி நிற்றல் வழக்கில் இல்லை.

எடுத்துக் காட்டாக ஏகம் என்ற சொல் நகாரத்தோடு கூடி அநேகம் என நிற்கும், அநேகம் என்ற சொல் ஏகத் தின் இன்மையையோ மறுதலையையோ குறிக்காது. எனவே அது ஏகமல்லாததாய் ஏகத்தைத் தன்பாற் கொண்டிருக்கும் பல என்னும் பொருள்பட நிற்கும், ஒற்றுமை ஏகத்தைத் தன்பாற் கொண்டிருத்தல். வேற்றுமை பலவாயிருத்தல். எண்ணுப் பெயர்மேல் வந்த நகாரம் இன்மை மறுதலை முதலிய பொருண்மேல் நிற்றற்கு உதாரணம் இல்லை.

அத்துவிதம் என்ற சொல்லேயே கொள்வாம் என்றால் அது தன்னைப் பற்றுதல் என்னுங் குற்றமாகும். எனவே எண்ணுப் பெயர்மேல் வந்த நகாரம் அன்மைப் பொருள் மாத்திரையே உணர்த்திப் பொதுமையின் நிற்கும் என்பது பெறப்படும்.

எனவே அத்துவிதம் என்ற சொல் இரண்டன்று என வேற்றுமைப் படாமையைக் குறித்து நிற்கும். வேற்றுமைப் படாமையாவது இது சிவப்பகுதி இஃது ஆன்மப் பகுதி எனப் பிரித்தறிய வாராத நிலை. எனவே ஒற்றிற்று நிற்றல் பெறப்படும். தன்மையால் இரண்டாதல் வேற்றுமை. கலப்பால் ஒன்றுதல் ஒற்றுமை. "பிறிவரு மத்துவிதம்" என்பர் உமாபதி சிவாசாரிய சுவாமிகள். இதனால் இரு பொருள்களும் கலப்பால் ஒன்றாயும் தன்மையால் வேறாயும் உயிர்க்குயிராய்ச் செலுத்தலின் உடனுதலும் பெறப்படும். இவ்வாறு அத்துவிதம் என்ற சொல் அன்மைப் பொருள் பற்றி மூன்றற்கும் பொதுமையாய் நிற்கும்.

அதுபற்றித் "தத்துவமசி" முதலிய மகா வாக்கியங்களைக் கேட்டவழி அதுவென்பது ஒரு பொருள் நீ என்பது ஒரு பொருளாகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளா மாறு யாங்ஙனம் என்னும் ஐயம் நீக்குதற்கு எழுந்ததாகக் கொள்ளப்படும். எனவே அது இதுவாதற்கு ஏதுவாய் அவ்விரண்டற்குமுளதாகிய சம்பந்த விசேடம் உணர்த்துதலே அத்துவிதம் என்னுஞ் சொல்லாற் பெறப்படும்.

இவ்வத்துவிதம் ஏனையோர் கூறும் அத்துவிதம் போலக் கேவலமென்றுதல் விசிட்டமென்றுதல் மறுதலையென்று தல் யாதானுமொன்றால் விசேடிக்கப்பட்டு நின்று பொருள் உணர்த்தாது சுத்தமாய் நின்றே பொருளுணர்த்துதலிற் சுத்தாத்துவிதம் என வழங்கப்படும். ஈண்டுச் சுத்தமென்றது யாதானுமொன்றால் விசேடிக்கப்படாது நிற்றலை. அது விசிட்ட சத்தை, சுத்த சத்தை என்னும் வாய்ப்பாட்டானும் அறியப்படும். ஏனையோர் கூறும் அத்துவிதம் கேவல

முதலியவற்ருன் விசேடிக்கப்படாத வழி அவர் கூறும் பொருள் தருதற்கு ஏலாமையின் அவையெல்லாஞ் சுத்தாத்துவிதமாகாமையும் அறியப்படும்.

அங்ஙனமாயின் அத்துவிதமென்ற சொல்லாற் பெறப் படுஞ் சம்பந்தம் ஐக்கியமோ தாதான்மியமோ சமவாயமோ சையோகமோ சொரூபமோ என்னுங் கடா நிகழும்.

ஆற்று நீரும் கடல் நீரும் தம்மிற் சேர்ந்தாற் போலவும், குடாகாயமும் மகாகாயமும் தம்மிற் சேர்ந் ாற் போலவும் ஐக்கியமெனின் அங்ஙனஞ் சேர்ந்த வழி ஒரு பொருளே யாகலின் ஒன்றெனவே அமையும். அத்துவிதமென உய்த் துணர வைத்தல் வேண்டா.

குணகுணிகட்குத் தம்மின் உளதாகிய சம்பந்தம் போலும் தாதான்மியம் எனின், ஆன்மா முதல்வனைப் போலக் குணிப்பொருளாய் நிற்பதன்றி முதல்வனுக்குக் குணமாகாமையின் அவ்வாறு இயைதல் கூடாது. தாதான் மியத்தின் வேருய்ச் சமவாயம் என்பது ஒன்றின்மையின் அதுவும் பொருந்தாது.

விரலும் விரலும் சேர்ந்து நின்ருற் போலச் சையோக மெனின், அவ்வியாப்பிய விருத்தியாகிய சையோகம் வியாபகப் பொருள்களுக்குக் கூடாது.

யாதானுமோர் இயைபு பற்றிக் கூறப்படுஞ் சொரூப மெனின், அது மகாவாக்கியப் பொருளை வலியுறுத்துதற் கெழுந்த அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளாக முடியாது. அன்றியும் சொரூப சம்பந்த மாத்திரையான் சிவாநந்தத்தை அநுபவித்தலும் இயலாது. இவற்றின் வேருய் இன்னதென்றறிய வாராத அநிர்வசனமெனின் அங்ஙனங் கூறுதல் வழுவாய் முடியும்.

ஆயின் ஒரு பொருளே அவயவ அவயவிகளாயாதல் குணகுணிகளாயாதல் வேற்றுமைப்பட்டு இரண்டாய்

நிற்றற் கேதுவாகிய சம்பந்தமும், இருபொருளே ஒற்றுமைப் பட்டு ஒன்றாய் நிற்றற்கு ஏதுவாகிய சம்பந்தமுமெனத் தாதான்மிய சம்பந்தம் இருவகைப்படும். அவற்றுள் முன்னை யது தாதான்மியமென்றும், பின்னையது அத்துவிதமென்றும் வழங்கப்படும். எனவே அத்துவிதமென்ற சொல்லியல்பு மேற்கூறியவாற்றான் வேறு பொருள் தருமாறின்றி அன்மைப் பொருள் பற்றி இரண்டன்றென வேற்றுமைப் படாமையை விளக்கி நிற்றல் தெற்றென உணரப்படும்.

இங்ஙனங் கொள்ளாக்கால் முதல்வன் படைப்பு முதலிய ஐந்தொழில் செய்தல் தன் பொருட்டோ பிறர் பொருட்டோ வீணே என்னும் ஐயத்தை நீக்க இயலாதாய் முடியும்.

தன்பொருட்டெனின் வரம்பில் இன்பமுடைய முதல் வனுக்கு இச்செய்கையான் வரக்கடவதோர் பயனில்லை. எனவே பயனற்ற செயலாய் முடியும்.

உயிர்கள் பொருட்டெனின் உயிர்களும் அவனும் அபேதமோ பேதமோ பேதாபேதமோ என்னும் வினா எழும். பொன்னும் பணியும் போல் அபேதமாயின் அது தன் பொருட்டாய் முடியும். ஆகவே பயனற்ற செயலாய் முடியும். இருளும் வெளியும் போல் பேதமாயின் அவ்வுயிர் களின் பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு ஒருவாற்றானும் இயைபில்லை. சம்பந்தமில்லாத ஒரு காரியத்தை மேற் கொண்டதாய் முடியும். சொல்லும் பொருளும் போற் பேதாபேதமெனின் அபேதமும் பேதமுமாம் என்றல் சமணர் கூறும் அநேகாந்த வாதமாய் முடியும். பேதமும் அபேதமும் மறுதலையாகலின் நீரும் நெருப்பும் போல ஒருங்கே கூடா. சொல்லும் பொருளும் வேறேயாயினும் சொல்வந்தெழலும் பொருள் தோன்றுதல் பற்றி அபேத மென்பார் மதத்தை ஒருவாற்றான் உடம்படினும் பேதா பேதம் என்னுந் துணையேயன்றி ஒரு பொருட்கு இரண்டு தன்மை கோடல் பொருந்தாமையின் போலியாய் முடியும். இங்ஙனமாகலின் பிறர் பொருட்டென்பது கூடாது.

இனி அவ்வாறன்றி வீணெனின் பித்தர் செய்யுந் தொழிலோடொக்கும். பித்தரன்றி அறிவான் முதிர்ந்த அரையர் முதலியோரும் வேட்டையாடுதல் சூதாடுதல் உயிர்த்தல் இமைத்தல் ஆவித்தல் தும்முதல் முதலிய வீண் தொழில் செய்யக் காண்டலின் முதல்வனும் அவ்வாறு கொள்ளே செய்தல் அமையும் என்பார் சிலர்.

அங்ஙனம் கூறின் வேட்டையாடுதல் புலி முதலிய விலங்குகள் மிக்கு நாடு நலியாமைப் பொருட்டாதல், தனக்கு மடிமை வாராமை முதலியவற்றின் பொருட்டாதல் உணவின் பொருட்டாதல், பொருளீட்டற் பொருட்டாதல் யாதானுமொரு பயன் குறித்தே செய்யப்படுகின்றது. சூதாடுதல் வஞ்சனையாற் பகைவரை வெல்லுதற்கு உபாய மறிதற் பொருட்டாதல் பணயம் பேசிப் பொருளீட்டற் பொருட்டாதல் யாதானுமொரு பயன் கருதிச் செய்யப் படுகின்றது. உயிர்த்தல் உயிர் நிலையின் பொருட்டாகும். இமைத்தல் விழியைப் பாதுகாத்தற் பொருட்டாகும். ஆவித்தல் தும்முதல் தங்குறிப்பினன்றிக் காரணத்தான் நிகழும். இளஞ்சிறுர் செய்யுஞ் சிறுதேருருட்டல் சிற்றி லிழைத்தல் முதலிய விளையாடற்றொழிலும் போர்முகத்தில் தேர் நடாத்துதல் அட்டிற்றொழில் வன்மை முதலியன சோபான முறையிற் பயிலுதற் பொருட்டு இருமுதுகுரவர் முதலியோராற் செலுத்தப்பட்டு நிகழ்தலின் அவை அப் பெரும் பயனுடையவாய் அவ்விளமைப் பருவ மாத்திரையின் மகிழ்ச்சி மீதூர்தலாகிய அற்பப் பயனும் உடையன. எனவே அவையெல்லாம் வீண்தொழிலன்மையின் வீண் தொழிலெல்லாம் பித்தர் முதலியோர் செய்யும் தொழிலே யாய் அமையும்.

இங்ஙனமாகலின் ஐந்தொழில் செய்வோன் முதல்வன் என்றல் இலக்கண வழுவாம் என்று ஆசங்கை நிகழ்ந்தவழி அதனை நீக்கிப் பொருளால் வேருயினும் கலப்பினுல் அவையேயாம் இயல்புடைமையின் தன்னுேடு சம்பந்த முடைய உயிர்களின் பொருட்டே முதல்வன் ஐந்தொழில்

செய்வன் என ஐயமறுத்தலின் அச்சம்பந்தப் பொருளின் உயர்ச்சியும் பொருத்தமும் நன்குணரப்படும்.

சிவபெருமானைப் புகழ்ந்து பாடுங்கால் திருஞான சம்பந்தப் பெருமானும் "ஈருய்" எனத் தொடங்கும் செய் யுளில் இவ்வாறு கலப்பால் அவையேயாயும் பொருளால் வேருயும் அறிவிக்குங்கால் உடனுயும் நிற்றலையே விதந்து பாடியருளினர்,

இறுதலைச் செய்யுங் கடவுளை "ஈறு" என்ருர். சங்காரக் கடவுளைக் குறித்து நிற்கும். முதல் என்றது தோற்றத்தை. சிருட்டிக் கடவுளைக் குறித்து நிற்கும். ஒன்றென்றது ஈறு முதல் என்றமையின் சங்காரம் சிருட்டி முதலியவற்றைச் செய்யும் கடவுள் ஒருவரோ பலரோ என்னும் ஐயமறுத்தற் பொருட்டு. இரட்டுற மொழிதல் என்னும் உத்தியான் ஒப்பற்றவர் என்பதும் கொள்ளப்படும். ஒன்ருய் என்பதன் கணுள்ள ஆய் என்பது முதல் என்பதனேடுங் கூடும். எனவே ஈருய் முதலாய் ஒன்ருய் என நிற்கும். இம்மூன்றும் வேருய் என்பதைத் தடத்த நிலையில் வைத்து விளக்கப்பட்டன.

இரு பெண் ஆண் என்றது "அவ்வப் பிறப்புக் கியைய வடிவங்களெல்லாம் ஒத்துக் குறிகுணங்களான் ஒவ்வாது இருவேறு வகைப்பட்ட ஆணும் பெண்ணும்" எனப் பொருள்படும். "ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும்'. (சூ:1—செய்:69) என்பார் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்' பெண் ஆண் என்பன சகல நிலையில் பசுக்களைக் குறித்து நின்றன. பெண்ணை முதற்கண் வைத்தது வடமொழிமதம் பற்றி.

குண மூன்ருய் என்றது ஆன்மாக்களால் (பசுக்களால்) உணரப்படும் பிரகிருதி மாயா காரியமாகிய சத்துவம் இரா சதம் தாமதம் என்னும் முக்குணங்களை. மறை நான்காய் என்றது முக்குணம் பற்றி ஆன்மாக்களால் அறியப்படும் நான்கு வேதங்களை. மாருு என்றது கருத்தா இறைவனுகலின் எஞ்ஞான்றும் ஒரு தன்மைப்பட நிற்றலைக் குறித்தது.

பூதம்மவை ஐந்தாய் என்றது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐம்பூதங்களை. பூதம்மவை என்றது விரிக்கும் வழிவிரித்தல். அவை என்றது பகுதிப்பொருள் விகுதி. வருதலாவது தோற்ற முறைக்கண் தத்துவங்களுள் இறுதிக்கண் தோன்றுதலைக் குறித்து நிற்பது. குணமூன்றாய் மறை நான்காய் பூதமைந்தாய் என்பவை ஏற்றபெற்றி பற்றி மூன்றுகுணமாய் நான்கு மறையாய் ஐந்து பூதமாய் என மாற்றிப் பொருள் கொள்ளப்படும்.

ஆறார் சுவை என்றது ஆறு என்னும் எண்ணோடு கூடு கின்ற இனிப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, புளிப்பு என்னும் சுவைகளை. ஏழோசை என்றது ஏழாகிய குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் சுரங்களை. "ஏழிசையாய்'' என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். எட்டுத் திசை என்றது கிழக்கு முதலிய எட்டுத் திசைகளை. திசை ஒன்றேயெனச் சாதிப்பாரை மறுத்தற் பொருட்டு எட்டுத் திசை எனக் கூறினர் என்பதும் சாலும்.

தானாய் என்பதன்கணுள்ள தான் என்பது சிவபெரு மானைக் குறித்தது. தான் என்னும் ஒருமை சிவபெருமானை யும், தாம் என்னும் பன்மை ஆன்மாக்களையுங் குறிக்குங் குறியீடாகக் கொள்வது சித்தாந்த மரபு. "தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்'' என்பார் மெய் கண்டதேவ நாயனர். திருஞானசம்பந்தப் பெருமானும், "அங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்த ஆலவாய்'' எனச் சிவபெருமானைக் குறித்தே அருளினர். ஏற்ற பெற்றி பற்றித் தான் என்பது பெண்ணாண் முதலியவைகளோடு கூட்டிப் பொருள் கொள்ளப்படும். இரு பெண்ணாண் முதல் எட்டுத் திசை இறுதியாகவுள்ளன (அவையே) தானாய் நிற்றலை விளக்கும் பொருட்டுக் காட்டப்பட்டன.

ஆன்மாக்களே சத்தோடு கூடிச் சத்தாயும் அசத்தோடு கூடி அசத்தாயும் நின்றுணர்வன. ஆயினும் உணர்த்த உணரும் சிற்றறிவின. எனவே ஈறாய் முதலாக எட்டுத்

திசை இறுதியாகவுள்ள எல்லாப் பொருள்களையும் உணர் தற்கு உடனின்று உணர்த்துவோன் இறைவனாகலின் உடனானன் என்றார். "காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம் போற்—காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்பார் மெய்கண்டதேவ நாயனார்.

எனவே அச்செய்யுளின் பொழிப்பாவது சங்காரக் கடவுளாயும் முதற்கடவுளாயும் ஒப்பற்ற பொருளாயும் இவ்வாறு பொருளால் வேறாயும், இனி இரு வகைப்பட்ட பெண் ஆணாயும், மூன்று குணமாயும் நான்கு வேதமாயும் ஐம்பூதமாயும் ஆறு சுவையாயும் ஏழிசையாயும் எட்டுத் திசையாயும் இவ்வாறு கலப்பால் எல்லாப் பொருள்களும் தானாயும், இனி ஈறு முதல் எட்டுத் திசை இறுதியாகவுள்ள சத்து அசத்து என்னும் பொருள்களை அறியுமிடத்து உடனின்று உணர்த்துமுகத்தான் உடனாயும் (இவ்வாறு மூன்றற்கும் பொதுவாய்) விளங்கும் சிவபெருமான் விரும்பி உறையும் திருத்தலம் திருவீழிமிழலை என்னும் பதியாகும் என்பதாம்.

இவ்வாறு மூன்றற்கும் பொதுமையாய் நிற்றலைக் கூறிச் சிவபெருமானின் உயர்ச்சியைச் சிறப்பாக அருளி யுள்ளார். ஒன்று முதல் எட்டிறுதி எண்களைப் புணர்த்திக் கூறினமையின் எண்ணலங்காரமாம்.

இனி மூன்றற்கும் பொதுமையாய் நிற்றல் என்றமை யானே அநேகாந்த வாதமாகுமோ என்னும் ஐயமறுக்கப் படும். அவ்வாறு ஏகாந்த வாதமாதலை மெய்கண்ட தேவ நாயனார் உவமை முகத்தான் வலியுறுத்தும் உதாரணமாவது

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப வின்று (சூ—2; அதி—2)

என்பதாகும்.

அரக்கை உருக்கி அதனோடு சேர்த்து அணைத்த அக்கற் பொடி அவ்வரக்கினோடு ஒன்றாய் ஒருங்கியைந்து நீக்க

மின்றி நின்ருற்போல முதல்வன் உயிர்களின் ஒருங்கு கூடி நின்று நீக்கமின்றி உடனும் என்பது கருத்து.

அங்ஙனமாயின் வாமதேவ முனிவன் யானே உலகமாயினேன் என்றதும் கண்ணன் யானே உலகமெல்லாம் என்றதும் முரணுமே எனின் அற்றன்று. சோஹம் பாவனையான் வேற்றுமையின்றித் தோன்றுங்காரணத்தான் வாமதேவ முனிவன் முதலாயினோர் யானே உலகமாயினேன் என்றனர். இவ்வொற்றுமை பற்றியன்றே அருச்சுனற்குக் கீதை நூல் செவியறிவுறுத்திய கண்ணன் யானே உலகமெலாம் என்று கூறியதும் முதல்வனது விச்சுவரூபத்தைத் தான் காட்டியதும், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக என்றதும், அதனை உறுதியாகக் கொண்டேன் என்ற அருச்சுனன் அவன் கூறிய கருத்துணர்ந்து சாகும் வரை சிவபூசை செய்ததும், கண்ணன் மேலிட்டபோதுகள் முதல்வன் திருவடிமேற் கண்டதும் பொருந்துமாறு அறியப்படும். கண்ணன் உபமன்னியு முனிவன்பாற் சிவதீக்கை பெற்றுத் தன்னையுந் தலைவனையும் உணர்ந்தோனுதலிற் சிவோஹம் பாவனை தலைப்பட்டோனுதல் பெறப்படும்.

இவ்வாறே முத்திநிலைக்கண்ணும் மற்றைச் சமயத்தாரின் கொள்கைகளைத் தன்னுள் அடக்கி மற்றையோர் கொள்கைக்கு மேம்பட்டிருத்தல் இதுகாறுங் கூறியதுபற்றி உணரப்படும்.

இவ்வாறு அத்துவிதம் என்னும் சொற்பொருள் பற்றி மற்றைச் சமயத்தார் கூறுவனவற்றைப் பூருவபக்கமாகத் தன்னுளடக்கி நிற்றலும் அதுபற்றி அநேகாந்த வாதமாகாது ஏகாந்தவாதமாய் அமைந்து நிற்றலும் நாட்டப்படும்.

இது காறுங் கூறியவாற்ருன் "சுத்தாத்துவித சித்தாந்த சைவம்" என்பது "சுத்தாத்துவிதப் பொருளைக் கைக் கொண்ட சைவாகமத்தைப் பின்பற்றிய சிவசம்பந்தமுடைய (உண்மைச்) சமயம்" என்பதாகும். சிவம்

உ

சிவமயம்

# காச்மீர சைவம்

மும்மொழிக்கொண்டல்
பேராசிரியர் பெ. திருஞானசம்பந்தன், எம்.ஏ., எல் டி.,
ஸம்ஸ்க்ருதப் பேராசிரியர்,
பதிவாளர், சென்னைப் பல்கலைக்கழகம் (ஓய்வு)

சைவம் மிகத் தொன்மையான ஒரு சமயம். இன்று வழங்கும் சைவம் மூன்று பிரிவுகளைக் கொண்டது (1) ஈராயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தென்னாட்டில் நிலவி வரும் சைவசித்தாந்தம், (2) கருநாடகத்தின் பெரும் பகுதியில் பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் வழங்கிவரும் வீரசைவம், (3) காஷ்மீரத்தில் ஒன்பதாம் நூற்றாண்டு முதல் நிலவிவரும் 'திரிகம்' அல்லது 'பிரத்யபிஜ்ஞா தரிசனம'

சைவசமயங்கள் வேதங்களையும் ஆகமங்களையும் பிரமாண நூல்களாகக் கொண்டுள்ளன. வேதம் பொது நூல் சிவாகமம் சிறப்புநூல். சைவசித்தாந்திகள் 28 சிவாகமங்களைப் பிரமாணமாகக் கொள்கின்றனர், சைவசித்தாந்தம் பதி (சிவன்), உயிர், பாசம் ஆகிய மூன்றும் என்றும் உள தனித்தனிப் பொருள்கள் என்ற த்வைதக் கொள்கையைப் பின்பற்றுகிறது. வீரசைவமும் காச்மீர சைவமும் அத்வைதக் கொள்கையைப் பின்பற்றுகின்றன. எனினும் மூன்றுக்குமே சிவனே பரம் பொருள். காச்மீரசைவர் 64 அத்வைத தந்திரங்களை (ஆகமங்களை) ஏற்றுக் கொண்டுள்ளனர். இவற்றுள் காமிகம், மகுடம், போன்ற ஆகமங்களை சைவ சித்தாந்தம், காச்மீரசைவம் ஆகிய இரு சமயத்தைச் சார்ந்தவர்களும் தத்தம் கொள்கைக்கேற்ப விளங்கிக்கொள்கின்றனர்.

காச்மீர சைவம் தோன்றுவதற்கு (9-ம் நூ.) முன்பு த்வைத சைவமும் பௌத்தமும் அங்கே வேரூன்றியிருந்தன. ஆதிசங்கரர் ஒன்பதாம் நூற்றுண்டில் காஷ்மீரத்திற்கு விஜயம் செய்தபோது த்வைதசைவத்திற்கு அத்வைதத் திருப்பத்தைத் தந்திருக்கக்கூடும் என்று ஊகிப்பதற்கு இடமுண்டு.

சித்தாந்தத்தில் கூறப்பட்டுள்ளது போன்றே பதி, பசு, பாசம் என்ற முப்பொருளை ஏற்றுக்கொண்டுள்ள காச்மீர சைவம் திரிகம் (முப்பொருள்) என்று வழங்கப்படுகிறது. இச்சமயம் அபேதம், பேதாபேதம், பேதம் என்ற மூன்று நிலைகளைப் பற்றிப் பேசுவதாலும் 'திரிகம்' என்பது பொருந்தும்.

இந்த 'திரிக தரிசனம்' மூன்று பிரிவுகளைக் கொண்டது.

1. **ஆகம சாஸ்திரம்** இதில் ஞானம், கிரியை இரண்டும் இடம்பெறுகின்றன மாலினீவிஜயம், மிருகேந்திரம், மதங்கம் முதலான ஆகமங்கள் ஆளப்படுகின்றன. இச்சமயத்தின் முதனூல்' 'சிவசூத்திரங்கள்'. இவை ஒருமலைப்பாறையில் பொறிக்கப்பட்டிருந்தனவாகவும், வசுகுப்தர் (9-நூ) என்ற ஆசாரியரின் கனவில் தோன்றிய சிவபெருமான் இவற்றை அத்வைதரீதியில் விளக்குமாறு அவரைப் பணித்தார் என்றும் சொல்லப்படுகிறது.

2. **ஸ்பந்த சாஸ்திரம்**: ஆகம சாஸ்திரத்தை விளக்க வந்தது. இதன் முதல் நூல் 'ஸ்பந்த சூத்திரங்கள்'. இவற்றை வசுகுப்தர் எழுதினர் என்று ஒரு சாராரும் கல்லடர் விருத்தியுடன் இதை எழுதினர் என்று ஒரு சாராரும் கூறுவர்.

3. **பிரத்யபிஜ்ஞா சாஸ்திரம்** : இது தத்துவ விளக்கமாக அமைந்தது. தருக்க நெறியிலே தத்துவங்கள் விளக்கப்படுகின்றன. வசுகுப்தரின் மாணக்கர் சோமானந்தர் ஸ்வபக்ஷம் பரபக்ஷம் என்ற முறையில் இதை விளக்கிச் செல்கிறுர்.

இவரது நூல் 'சிவதிருஷ்டி' என்பதாகும். இவரது மாணுக்கர் உத்பலர் 'ஈசுவர பிரத்யபிஜ்ஞா' என்ற நூலை ஆக்கியவர். அபிநவ குப்தரின் தந்த்ராலோகம், பரமார்த்தசாரம், க்ஷேமராஜரின் பிரத்யபிஜ்ஞாஹ்ருதயம் ஆகியவை ஒரு சில முக்கியமான நூல்கள்.

**பதி அல்லது சிவன்**

சிவன் எக்காலத்தும் ஐந்தொழில்களை (ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) எப்போதும் செய்துகொண்டே இருக்கிறுன். சிவனும் சக்தியும் இணை பிரியாதவை. பல்வேறு உருவும் வண்ணமும் தன்மையும் கொண்ட இப்பிரபஞ்சப் பொருள்கள் பரமேசுவரனுடைய சக்தியால் ஆக்கப்பட்டன. இப்பிரபஞ்சம் அவனினின்றும் வேறுபட்டதல்ல. **அவனுடைய மறு உருவமே இப்பிரபஞ்சம்.** ஆகவே சங்கரமதம் கூறுவது போல் உலகம் வெறும் தோற்றமல்ல. சிவனின் மறுபிரதியானதால் அவனைப் போல உண்மைப் பொருள். பிரபஞ்சத் தோற்றமும் ஒடுக்கமும் அவனுடைய லீலை.

ஒரு பொருளைக் காணும் போது அதுபற்றிய அறிவைப் பெறுகிறோம். அது **உயிரின் ஞானசக்தியின்** விளைவு. அது நல்ல பொருளானுல் அதன் மீது விருப்பு ஏற்படுகிறது. அது உயிரின் **இச்சாசக்தி.** அதைப் பெற வேண்டும் என்ற உந்துதல் ஏற்படுகிறது. அது உயிரின் **கிரியாசக்தி**. மாயை வயப்பட்டுள்ள உயிரிடத்தில் இம்மூன்றும் குறுக்கப்பட்டிருக்கின்றன. பரமேசுவரனிடத்தில் இம்மூன்று சக்திகள் பரிபூரணமாக இருக்கின்றன, அவன் நிர்மலனுக இருப்பதால்.

அபிநவகுப்தர் பரம்பொருளின் இலக்கணத்தைக் கூறும் போது சுத்தம், சாந்தம், அம்ருதம், சத்யம், பாஸ்வரூபம் என்று குறிப்பிடுகிறுர். மூன்று சக்திகளோடு கூடிய அவன் சுவயம்பிரகாசனுய் இருக்கிறுன்.

சைதன்ய சொரூபனுன சிவன் **பிரகாச—விமர்சமய**மானவன் என்று கூறுவர். பிரகாச சைதன்யத்திற்கு முக்கிய

இலக்கணம் 'விமர்சம்' அல்லது 'ஸ்பந்தம்' (அசைவு). இது கிரியையைக் குறிக்கும். முத்தொழிலாகிற கிரியையைச் செய்யும்போது அவன் 'விமர்ச' மயமாகிருன்.

ஞானப்பிழம்பாக பிரகாசிக்கின்ற' பரமேசுவரன், தன் 'விமர்ச' சக்தியால் உயிருள்ள (சித்) பொருளாயும் உயிரில்லாத (அசித்து) பொருளாயும் காட்சி தருகிருன்.

'பிரத்யபிஜ்ஞாஹ்ருதயம்', என்ற நூலில் க்ஷேமராஜர் கூறுகிருர்—'பராசக்தி சுதந்திரத்தன்மை வாய்ந்தது. இச் சக்தி தொழிற்படத் தொடங்கும்போது உலகம் தோன்றுகிறது; தொழிற்பட்டுக் கொண்டிருக்கும் போது உலகம் நிலைபேறுடையதாகிறது; தொழில் முடிவுறுகின்றபோது -லகம் ஒடுங்குகிறது'.

மகேசுவரனும் அவனது சக்தியும் பிரிப்பின்றி இருப்பன என்பதை சிவஞான சித்தியாரும் கூறும்- 'அருளது சத்தியாகும் அரன்றனக்கு; அருளையின்றித் தெருள் சிவம் இல்லை; அந்தச் சிவம் அன்றிச் சத்தி இல்லை'. இச்சக்திக்கு மூன்று நிலைகள் கூறப்படுகின்றன. அவை பரை, பராபரை, அபரை என்பன. இந்த அடிப்படையில் காச்மீர சைவத்தை 'திரிகம்' (முப்பொருள்) என்று கூறுவாரும் உண்டு. பரை என்னும் நிலையில் சித்சக்தியும் ஆனந்த சக்தியும் முழுமையாகக் காணப்படுகின்றன. பராபரை நிலையில் இச்சாசக்தி செயற்படத் தொடங்குகிறது. அபரை நிலையில் இச்சையின் தூண்டுதலால் ஞான சக்தியும் கிரியா சக்தியும் ஓங்கி நிற்கின்றன.

சிவனும் அவனது சக்திநிலைகளும் சூரியனும் அவன் ஒளிக் கதிர்களும் போல்வன. சூரியன் தோன்றி கதிர்கள் விரியும் போதுதான் உலகிலுள்ள பொருள்கள் விளக்கம் பெறுகின்றன. அவ்வாறு சிவனுடைய சக்திகள் தொழிற்படும்போது பிரபஞ்சமாக அவனே காட்சியளிக்கிருன். இதைத்தான் அவனுடைய விமர்ச சக்தி என்கிறோம். சித்திலும் அசித்திலும் அவன் உலவுவதைத்தான் அவனுடைய

'ஸ்பந்தம்' (அசைவு) அல்லது 'கிரீடை' (விளையாட்டு) என்கிறோம். சந்திரபிம்பம் புனித கங்கையில் ஓடுவது போலவும் அழுக்கு நிறைந்த குட்டையில் நிலைத்திருப்பதுபோலவும் தோன்றினாலும் சந்திரனுடைய இயல்பான ஒளியும் தூய்மையும் கெடுவதில்லை. அதேபோல் மகேசுவரன் மாயாகாரியச் சேர்க்கையால் பல பிறவிகளில் உருக்கொண்டு இன்பதுன்பங்களை நுகர்ந்தாலும் சித்சொரூபனான அவனிடம் எவ்வித மாறுபாடும் நிகழ்வதில்லை நீரிலிருந்து அலைகள் பரவுவது போல், தீப்பிழம்பிலிருந்து ஜ்வாலைகள் எழுவது போல், ஈசுவரனிடமிருந்தே பிரபஞ்ச வேறுபாடுகள் தோன்றிக் காட்சியளிக்கின்றன.

சித்சக்தியே தோற்றுவித்தல் காத்தல் ஒடுக்குதல் என்ற முத்தொழிலைச் செய்வதாக சைவர்கள் கூறுவர். காச்மீர சைவம் இம்முத்தொழிலையும் வேறுவகையாக விளக்குகிறது. சித்சக்தி மாயையின் தொடர்பினால் சிதறுண்டு பலப்பலவாகக் காட்சியளிப்பதையே 'சிருட்டி' என்பர். சிவனே சீவனாக நின்று 'நான் மகிழ்கிறேன்', 'நான் துயருறுகிறேன்' என்று உணரும் போதும் உலகப் பொருள்களை நோக்கி அதனதன் வண்ணம், பருமன் முதலானவற்றைக் கண்டறியும் போதும் 'நிலைபேறு' என்னும் தொழில் நடைபெறுகிறது. சிவனருளால் மெய்யறிவு பெற்றபோது புறப்பொருள்களெல்லாம் என்னினின்றும் வேறானவையல்ல, அனைத்தும் எனது வெளிப்பாடே என்று அறியும் போது 'ஒடுக்கம்' என்ற தொழிலாகிறது. இம்முத்தொழிலையும் செய்யும் சிவசக்தியை நான்காவது — துரியம்-என்பார்கள். இக்கருத்தைக் கீழ்க்காணும் திருமந்திரம் ஒருவாறு சுட்டுவதைக் காணலாம்.

பரன்எங்கும் ஆரப் பரந்துற்று நிற்கும்
திரன்எங்கு மாகிச் செறிவெங்கு மெய்தும்
உரனெங்கு மாய்உல குண்டு உமிழ்க்கும்
வரமிங்ஙன் கண்டுயான் வாழ்ந்துற்ற வாறே. (2590)

அருவமான சீவாத்மாவே கண், மூக்கு, வயிறு, கை, கால் என்ற பல்வேறு உருவும் வண்ணமும் கொண்டு காணப் படுவது போலவே, அருவமான சிவனும் பல்வேறு யோனி பேதங்களாய் பல்வேறு சக்தி உடையனவாய் காணப்படு கிருன். அவனே ஒவ்வொருவர் இதயத்திலும் இருந்து கொண்டு அறிவோனுய், செய்வோனுய், நுகர்வோனுய் இருக்கிருன்.

**உயிர் அல்லது சீவாத்மா**

சிவனே தனது அகண்ட சக்தியை பல்வேறு கூறு ளாக் கப்பட்ட ஞான இச்சா கிரியா சக்திகளாகக் குறுக்கிக் கொள்ளும்போது பல உயிர்கள் என்ற வகையில் காணப் படுகிருன். அவனது **இச்சா சக்தி** குறுகிய நிலையில் 'ஆணவம்' எனப்படுகிறது. அவனது **ஞானசக்தி** மாயையின் கூறுகளான அந்தக்கரணம், புத்தி, இந்திரியங்கள் ஆகிய உபாதிவசத்தால் 'மாயை' என படுகிறது அவனது **கிரியா சக்தி** கர்மேந்திரியங்கள் வாயிலாகச் சிறு செயல்களைச் செய்தலாகிய 'கர்மம்' எனப்படுகிறது. பரமசிவனின் சர்வ கர்த்திருத்துவம், சர்வஜ்ஞத்வம், பூர்ணத்வம், நித்யத்வம், வியாபகத்வம் என்னும் சக்திகள் சீவனேடு தொடர்புள்ள குறுகிய நிலையில் கலை, வித்தை, அராகம், காலம், நியதி என்ற தத்துவங்களாகக் கருதப்படுகின்றன.

கருமேகங்கள் சூழ்ந்தாலும் புழுதிப்படலம் பரவினுலும் ஆகாசம் அதனுடைய நித்தியத்தன்மையையோ பரந்து கிடக்கும் தன்மையையோ இழப்பதில்லை. எந்த அழுக்கும் படிவதில்லை. வண்ணமும் தோய்வதில்லை. அதே போன்று மாயையின் காரணமாக பிறப்பு, இறப்பு, மூப்பு முதலான மாற்றங்கள் உயிரைப் பற்றி கூறப்பட்டபோதிலும் சிவ சொரூபத்திற்கு எவ்வித இழுக்கும் ஏற்படுவதில்லை. அவன் நித்யனுய் நிர்மலனுய் இருந்து வருகிருன். ஆணவம் முதலான கோசங்களால் சூழப்பட்டிருப்பதால் அச்சிவ சைதன்யமே அணு, ஆன்மா, சீவன், புருஷன் என்றெல்லாம்

வழங்கப்படுகிறது. பரமேசுவரனின் சுதந்திர சக்தியாகிற மாயையே உயிரின் நிலையை மேற்கொண்டுள்ள சிவனுக்கு மறைப்பாகப் பயன்படுகிறது. அவனே பசு (உயிர்) நிலைக்குத் தன்னைக் குறுக்கிக் கொள்ளும்போது ஞானம், இச்சைகிரியை என்னும் சக்திகள் சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களாகக் குறிப்பிடப்படுகின்றன.

சீவாத்மா என்ற நிலையிலும் நான்கு நிலைகள் உண்டு. சிவனுடைய தோற்றுவித்தல் நிலைபெறச்செய்தல் ஒடுக்குதல் என்ற முத்தொழிலுக்கேற்ப சீவனுக்கு விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மூன்று நிலைகள் உண்டு. இவற்றைக் கடந்த ஆனந்த நிலையே துரிய (நான்காவது) சாந்த நிலையாகும். இதுவே அத்வைத நிலை. சிவசூரியனின் கதிர்களாகிற அருட்சக்தி படிந்த காலத்தில் பெறப்படுகின்ற நிலை இது. பரமேசுவரன் குறுகிய கால வட்டத்திற்குள் தன்னை உட்படுத்திக்கொண்டு நல்வினை தீவினைகளுக்கேற்ற சீவவடிவில் சிறுபொருளில் நாட்டங்கொண்டு சிற்றறிவால் சிற்றின்பத்தைப் பெற்று, பின்னர் அலைப்புறுகின்ற நிலையினின்று மீண்டு மாயையைக் கடந்த நிலையில் சச்சிதானந்தப் பிரகாசனாய் ஆகிவிடுகிறான்.

### பந்தமும் மோக்ஷமும்

'அஞ்ஞானத்தால் உறுவதுதான் பந்தம்; உயர்மெய்ஞ் ஞானத்தால் அது போவது' என்று சிவஞானசித்தியார் கூறும். ஒருவன் தன்னைப் பேரறிவும் பேராற்றலும் கொண்டவன் என்று உணராமல் சிற்றறிவையும் குறைந்த ஆற்றலையும் உடையவனாகக் கருதுவதே 'பந்தம்' என்கிறார் அபிநவ குப்தர். அஞ்ஞானத்தை 'அக்யாதி' என்றும் கூறுவர். இறைவனே இப்படி ஏன் தன்னை இழிந்த நிலைக்கு உட்படுத்திக் கொள்கிறான் என்ற கேள்வி எழலாம். அதுதான் அவனுடைய சுதந்திரத்தன்மை. உயிராக உலவ விரும்பினால் யார் அவனைத் தடுப்பதற்கு? அப்படி விரும்புவதற்கும் ஆவதற்கும் அவனுக்குச் சுதந்திரம் இருக்கிறது.

மும்மலங்களிலிருந்தும் விடுபட்டு, பிரகாச விமர்ச மய மான ஞான சொரூபியும் சுதந்திரனுமான பரம்பொருள் நானே என்று அறிவதுதான் முக்தி. மோட்சம் என்பது ஏதோ ஒருலகத்திற்குச் செல்வதல்ல. தேசம், காலம், வடிவம் என்ற எல்லைக் கோடுகள் இதற்கு இல்லை. தனது இயல்பான சொரூபத்தை உணரக்கூடிய அறிவைப் பெறு வதே முத்திப்பேறு. பயன் கருதாமல் வினைகளைச்செய்து வந் தாலும் 'நான் எதையும் செய்பவனல்ல பரமேசுவரனு டைய சுதந்திர சக்தியே செய்விக்கிறது' என்று 'நான் எனது' என்ற அபிமானமின்றி செயற்படும்போது அவ் வினைப் பயன்கள் அவனைச் சார்வதில்லை. அவனை சீவன் முக்தன் என்கிறோம். உமி நீக்கப்பட்ட அரிசி எப்படி மீண்டும் முளைக்காதோ அப்படி மல நீக்கம் ஏற்பட்ட சீவனுக்கு மீண்டும் பிறப்பில்லை. அனைவருக்கும் முக்தி பெறத் தகுதியுண்டு. குலம், ஆசிரமம், பால், திணை முதலிய பாகு பாடுகளுக்கு இதில் இடமில்லை.

முக்திநிலை என்பது சீவன் தன்னைச் சிவம் என்று முந்திய நிலையை நினைவுகூர்வதால் (பிரத்யபிஜ்ஞை) ஏற்படுவது. இந்த நிலை நீரில் நீர் கலப்பது போலவும் பாலில் பால் கலப்பது போலவும் இருப்பது. இரண்டு என்ற உணர்வு நீங்கிஅத்வைத பாவம் ஏற்பட்டு விடுகிறது. விறகில் உள்ள தீ கொழுந்து விட்டு எரியத் தொடங்கினல் நாம் காண்பது ஒளிப் பிழம்பு தான். மீண்டும் தீ கட்டையில் புகுவதில்லை. அது போல் ஞானத்தீயால் மாயா தத்துவங்களாகிற கட்டை எரிக்கப்பட்ட பிறகு தேஜோமயமாய்க் காட்சி அளிக்கும் ஜீவன்முக்தனுக்கு மீண்டும் சரீரத்தில் புகுதல் இல்லை என்று சுவச்சந்த தந்திரம் கூறுகிறது.

முக்தியடைவதற்கு நால்வகை உபாயங்கள் கூறப்பட்டு உள்ளன.

1. **ஆணவோபாயம் :** இதில் மனம் புத்தி கரணங்கள் ஆகியவற்றை ஈடுபடுத்தி தூலதத்துவங்களை சூக்ஷ்ம தத்துவங்

களிலும், சூக்ஷ்ம தத்துவங்களைப் பர தத்துவத்திலும் லயிக்கும் படிச் செய்யப்படுகிறது. மந்திரஜபம், பிராணுயாமம், இஷ்டதேவதைகளைப் பூசித்தல் இதில் இடம் பெறுவதால் 'கிரியோபாயம்' என்றும் இது சொல்லப்படுகிறது.

2 **சாக்தோபாயம்:** இது மந்திர சக்தியின் வெளிப் பாட்டைக் குறிக்கும். பராசக்தியே பிரபஞ்சமாகக் காட்சி யளிக்கிறது என்ற எண்ணம் (மனனம்) பேத உணர்வினின்று ஜீவனைக் காப்பாற்றுகிறது (**த்ராணம்**)ஆகையால் மந்திரசக்தி உபாயமாகிறது.

3. **சாம்பவோபாயம்:** ஒருவன் இச்சாமாத்திரத்தால் சம்புவின் ஆவேசத்தைப்பெறும் உபாயம். இதில் தியானம் கூடத் தேவையில்லை.

4. **அநுபாயம்:** உபாயம் எதுவும் இன்றி குருவருளும் சக்தி நிபாதமும் உடன் சேர முக்தி கிட்டும். இதைத்தான் திருமூலர் 'கண்ணிய சேதனன் கண் வந்த பேரருள், அண்ணல் அடிசேர் உபாயமதாகுமே' (2421) என்றார்.

சிவம்

---

உ

## சிவநாம மஹிமை

திருவிசநல்லூர் ஸ்ரீதர வேங்கடேச ஐயாவாள் அருளிச் செய்த ஆக்யா ஷஷ்டி என்னும் ஸம்ஸ்க்ருத நூலின் தமிழ் உரைநடையாக விளக்கத்துடன் அமைந்து சிவநாமத்தின் சிறப்பை உணர்த்தும் நூல்.

உ
சிவமயம்

# அந்தம் ஆதி

[க. வச்சிரவேல் முதலியார் பி.ஏ., எல்.டி. காஞ்சிபுரம்]

இத்தொடர் சிவஞானபோதம் முதற்சூத்திரத்தில் மூன்றும் அடியில் வருகின்றது. அச்சூத்திரம், 'அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே; ஒடுங்கி மலத்துளதாம்; அந்தமாதி என்மனுர் புலவர்' என்பது.

இவ்வுலகத்தொகுதி அவன் என்றும், அவள் என்றும், அது என்றும் இவ்வாறு, இன்னது என்று சுட்டியறியப்படுவதாய் இருத்தலின், தோற்றம் நிலை இறுதி என்னும் மூன்று நிலை வேறுபாடு உள்ள பொருளே ஆகும். ஆதலால் அது தானே அவ்வேறுபாடுகளை உடையதாகாமல், ஒருவனுல் தோற்றுவிக்கப்பட்ட (அவ்வாறே மறைக்கப்படும்) உள் பொருளே ஆகும். (திதி என்னும் சொல் இச்சூத்திரத்தில் உள்பொருள் என்னும் பொருளைத் தருவதாகக் கொள்ளப் படுகிறது.) அது அவ்வாறு புலப்பட்டுத் தோன்றும் போது, தான் ஒடுங்குதற்கு இடமாக நின்ற முதற்பொருளை இடமாகக் கொண்டு அதனினின்றும் அதன் நினைவாற்றலால் புலப்பட்டுத் தோன்றும். (இங்கே ஒடுங்கி என்றது தான் ஒடுங்குதற்குக் காரணமாய் நின்ற சங்காரக் கடவுள் என்னும் பொருளில் உள்ளது.) உலகத்தைத் தன்கண் ஒடுங்கும்படிச் செய்து அநாதி முத்த சித்துருவாய் நிற்கும் போது வேறு ஒரு பொருளும் அந்நிலையில் இல்லாமையினுலே அந்தத்தைச் செய்யும் கடவுளே உலகிற்கு முதலாகவும் உளன் என்று ஆராய்ச்சி அறிவில் வல்ல புலவர்கள் சொல்லி வருகிறுர்கள். இது அச்சூத்திரத்தின் பொருள்.

சிவஞான போதம் என்பது எல்லா வேதங்களின் சாரமாகத் தமிழில் மெய்கண்டார் என்னும் பெரியார் 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் செய்த நூல். இது பிரம்ம சூத்திரம் என்னும் வியாச சூத்திரத்தின் சாரமாய் உள்ளது என்று உணர்தல் வேண்டும். வேதாந்த சூத்திரம் எனப் படும் வியாச சூத்திரம் நான்கு அத்தியாயமும், ஒவ்வொரு அத்தியாயமும் நந்நான்கு இயல்களை உடையதாய், மொத்தம் 545 சூத்திரங்களை உடையது. அவற்றில் முதல் இரண்டு சூத்திரங்கள்,

1. அதாதோ பிரம்மஜிஞ்ஞாஸா [(இனிஆகலின் பிரம் மத்தை அறிய ஆசை (கொள்)].

2. ஜந்மாதி அஸ்ய யத: (இதற்குத் தோற்றம் முதலியன எங்கிருந்து?) என்பவை.

இவற்றில் இரண்டாவது சூத்திரப் பொருளைச் சிவ ஞான போதம் தெளிவுபடுத்திச் சொல்லுகிறது. இதற்கு (அஸ்ய) என்றது காணப்படும் உலகிற்கு என்றபடி. ஜந் மாதி என்றது ஜந்மம் முதலியன எனக் குறித்து, தோற்றம், நிலை, இறுதி என்னும் முத்தொழிலையும், அவற்றை இன்னும் விரித்து உணரும் போது கிடைக்கும் தோற்றம், நிலை, இறுதி, மறைப்பு, அருள் என்னும் ஐந்து நிலைகளையும், குறிப்பது.

அந்தம் ஆதி என்னும் தொடர் ''அந்தமே ஆதி'' எனப் பிரிநிலை ஏகாரம் தொக்கதாகக் கொள்ளப்படுகிறது. அந்தத்தை (முடிவை)ச் செய்யுங் கடவுளை அந்தம் என்றார். ஆதி என்பது முதல் எனப் பொருள்படும். அச்சொல் முதலாக உள்ள கடவுளைக் குறிக்கின்றது. முதல் திருமுறை 21-ஆம் பதிகமாகிய சிவபுரத் தேவாரத்தில் திருஞான சம்பந்தர் மும்மூர்த்திகளையும், சிவபூசை, சிவயோகம்; சிவ ஞானம் என்னும் சாதனங்களையும் முறையாகக் குறிப்பிடு கின்றார். அவற்றில் மூன்றாவது பாட்டில் சங்காரத்தைச்

செய்யும் கடவுளைக் குறிக்கும் போது 'அவையவை, முழுவதும் அழிவகை நினைவொடு முதல் உரு, இயல் பரன்' எனக் குறிப்பது நினைவில் வைக்கத் தக்கது. முத்தொழிலைக் கொள்ளும் போது, பிரமனுக்குச் சிருட்டி மாத்திரம் கொண்டு, காத்தற் கடவுளைக் குறிக்கும் போது காத்தல், மறைத்தல் (ரோதயித்திரி) என்னும் இரண்டையும் அடக்கி, அழிக்குங் கடவுளைக் குறிக்கும் போது சங்காரம், அருளல் என்னும் இரு தொழிலையும் அடக்குதல் காணப்படுகிறது. ஆதலால் முதல் உரு எனச் சங்காரமே முதல் என வற்புறுத்துவதைக் காணலாம். "அரி அலால் தேவியில்லை ஐயன் ஐயாறனுர்க்கே" என்னும் திருநாவுக்கரசர் தேவாரமும் பொருள்படுத்தி உணரத்தக்கது.

முதல் திருமுறையில் 4-வது திருப்பதிகத்தில் 4-வது திருப்பாட்டில் 'ஏக பெருந்தகையாய பெம்மான்' என்றதும், முதல்வனை மும்மூர்த்திகளாக உபாசிக்கும் நம்மாழ்வாரும் 'ஒளிமணி வண்ணன் என்கோ' எனத் தொடங்கும திருவாய் மொழியில் 'ஒருவன் என்று ஏத்த நின்ற நளிர்மதிச் சடையன் என்கோ...கண்ணனெம் மாயனையே' என்றதை எண்ணும் போது பிறவாயாக்கைப் பெரியோனை சுவேதாசுவதர உபநிடதம் மூன்றும் அத்தியாயம் 2-ஆம் மந்திரம் "ஏகோஹிருத்ரோ நத்விதீயாயதஸ்து" என்றபடி ஏகன் அத்விதீயமாய் நிற்பவன் எனவும், 'சத்தாம் அறிவறியா மெய்சிவன் தாள் ஆம்' எனத் தமிழ்ச் சிவஞான போதம் 6-ஆம் சூத்திரம் 2-ஆம் அதிகரணம் உதாரணச் செய்யுள் கூறியுள்ளபடி சத்துப் பொருளாகவும் கொள்வது பெரியோர்கள் மரபாக உள்ளது எனக் காணலாம்.



உ
சிவமயம்

# சிவ நாம ஜபம்

'சிவபாத சேகரன்'

மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களின் தாயாரின் தகப்பனுர் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் ஆவார். அவர் தஞ்சை மாவட்டத்தில் காவிரியின் வடகரையிலுள்ள கஞ்சனூர் என்ற சிவஸ்தலத்திற்கு வடகிழக்கே 1½ மைலில் உள்ள 'சூரியமூலே' என்ற ஊரில் வசித்து வந்தார். அதனை சூரியமலே என்றும் வழங்குகிருர்கள். 'சூரிய கோடி.' என்று வடமொழியில் கூறுவர். அந்த ஊரில் உள்ள சிவாலயத்தில் ஸ்வாமிககு 'சூரிய கோடீசுவரர்' என்று பெயர். ஊரின் அருகே பழவாறு ஓடுகிறது. ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் பழவாற்று ஸ்நானத்தை மிகவும் விசேஷமாகக் கருதிவந்தார். அவர் ருக்வேதத்தில் மிகவும் தேர்ச்சி பெற்றவர். வாழ்நாள் முழுவதையுமே சிவபூஜை, ஜபம், வேதபாராயணம் ஆகியவற்றுக்காகச் செலவிட்டு வேறு எதிலும் ஈடுபடாமல் வாழ்ந்தார். (இது போன்ற பெரியோர்களே இக்காலத்தில் காண்பது அருமையிலும் அருமை). தனது பதினுன்காவது வயதிலேயே தந்தை மூலம் பார்த்திப பூஜையும் ஸ்படிக லிங்கபூஜையும் பெற்றுகொண்டார். ஸ்படிகலிங்க மூர்த்திக்கு சிதம்பரேசர் என்று பெயர். தினந்தோறும் லட்சம் சிவநாமஜபம் செய்வார். ஆருணம் சொல்லி 124 சூரிய நமஸ்காரம் செய்து ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். விடியற்காலே முதல் இரவு வரையிலும் அனேகமாக வைதிக மார்க்கத்திலேயே நேரத்தைக் கழித்தார். வீட்டில் பல புஷ்பச்செடிகளேயும், பஞ்ச பில்வங்களேயும் வளர்த்ததால் அவற்றைப் பறித்து சிவபூஜை செய்வார்.

பசும் பாலும் வில்வமும் இல்லாமல் சிவபூஜை செய்யமாட்டார். இதற்காக பசுமாடுகளையும் வளர்த்து வந்தார். மஹா கைலாஸ அஷ்டோத்தரம் சொல்லி அப்புஷ்பங்களால் சிவபூஜை செய்துவந்தார். அவருடைய வாயிலிருந்து மென்மையான தொனியில் சிவநாமம் வந்து கொண்டே இருக்கும். அதில் ஈடுபட்ட டாக்டர் ஐயரவர்கள் தனது பாட்டனாரைப் பற்றி எழுதியதைக்கீழே தருகிறோம்:

"வண்டின் ரீங்காரத்தைப்போல உள்ள அந்த சிவநாமத்தில் நான் இளமையிலே ஈடுபட்டேன். என்னை அறியாமல் நானும் சிவநாம ஜபம் என் ஆறும் பிராய முதலே செய்யத் தொடங்கினேன். இன்றளவும் "நின்றும் இருந்தும் கிடந்தும்" அந்த ஜபத்தைச் செய்து கொண்டு வருகிறேன். பிறகு நான் முறையாகப் பல மந்திர ஜபங்களை உபதேசம் செய்து கொண்டேன். எல்லாவற்றிற்கும் முன் எனக்கு முதல் உபதேசமாக என் நெஞ்சில் தானே ஊன்றியது சிவநாமம் தான். அதை ஊன்றவைத்த முதல் குரு என் மாதாமஹராகிய கிருஷ்ண சாஸ்திரிகளேயாவர்."

ஒருநாள் ஐயரவர்கள் சிவநாம ஜபம் செய்து கொண்டு இருந்ததைக் கண்டு வியப்புற்ற ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் அவருக்கு மார்க்கண்டேயர் வரலாற்றைக் கூறி, ம்ருத்யுஞ்ஜய ஸ்தோத்ரத்தையும் உபதேசம் செய்து விட்டு "அப்பா, இந்த மந்திரங்களைத் தினந்தோறும் சூரிய அஸ்தமனத்துக்குப் பின்பு ஒவ்வொரு ஸ்லோகமாகச் சொல்லி ஈசுவரத்தியானம் செய்து நமஸ்காரம் செய்வாயானால் நல்ல சௌக்கியம் ஏற்படும். ஆயுள் விருத்தியும் உண்டாகும்" என்றார். அதன்படி ஐயரவர்களும் செய்து வந்தார்.

ஐயரவர்களது தந்தையாரும் சிவபக்தியில் சிறந்தவர். இதனை ஐயரவர்களே குறிப்பிடுவதை நினைவு கூர்ந்து இக் கட்டுரையை முடிப்போமாக:

"எப்போதும் சிவபக்தி பண்ணிக்கொண்டிரு' என்பது என் தந்தையார் எனக்குக் கடைசியில் கூறிய உபதேசம்.

அந்த உபதேசத்தை நான் கடைப்பிடிப்பதனுல் தான் இந்த அளவில் தமிழ்த்தொண்டு புரியவும் அன்பர்களுடைய ஆதரவைப் பெறவும் முடிந்ததென்று உறுதியாக நம்பியிருக்கிறேன்.''

குலிசம் குஸுமதி தஹனஸ்துஹிநதி வாராம் நிதி: ஸ்தலதி |
சத்ருர்மித்ரதி விஷமப்யம்ருததி சிவ சிவேதி ப்ரலபதோ
பக்த்யா ||

என்று ஒரு ச்லோகம் உண்டு. ''சிவசிவ என்று சொன்னுல் இந்திரனின் வஜ்ராயுதம் கூட புஷ்பமாகிவிடுகிறது. நெருப்பும் பனிக்கட்டியாக மாறி விடுகிறது. சமுத்திரமும் நிலமாக ஆகி விடுகிறது. விரோதியும் சிநேகிதனுகிருன். கொடும் விஷம் கூட அமுதமாக ஆகிறது'' என்பது இந்த ச்லோகத்தின் அர்த்தம். சிவ சிவ என்ருல் தீவினைகள் ஒழிந்து தேவர்களாவதோடு சிவ பதவியும் கிடைத்து விடுகிறது என்பார் திருமூலர். ஆகவே அனைவரும் சிவநாமத்தை ஜபம் செய்து கொண்டு சிவபக்தி செய்வோமாஞல் எல்லா நன்மைகளும் பெற்று வாழ்ந்து சிவனருளில் திளைப்போம் என்பது உறுதி. (ஸ்ரீ ஐயரவர்கள் எழுதிய ''என் சரித்திரம்'' என்ற நூலின் சில பகுதிகளை ஆதாரமாகக் கொண்டு இக் கட்டுரை எழுதப் பெற்றது.)

பதிப்பாசிரியர் குறிப்பு: சென்னை நுங்கம்பாக்கம் திருவாதிரையான் திருவருட் சபையார் நடத்தி வரும் 'ஆடல்வல்லான்'' என்ற மாதாந்திர வெளியீட்டினின்றும், எடுத்துப் பிரசுரிக்கப்பட்டது. மதி: 6, ஒளி: 5, 6.

சிவம்.



உ

சிவமயம்

# புறநானூற்றில் சைவக் கருத்துகள்

புலவர் முருகு. சுவாமிநாதன், M.A., B.Litt.,
ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்

**முன்னுரை:—**

சங்க நூல்களில் அமைந்துள்ள பாடல்கள், அகமும், புறமும் விரவியவை. சங்க நூல்களான எட்டுத் தொகை என்னும் மாலையில் போர், வீரம், புகழ், கொடை ஆகிய பன்மலர்கள் கஞலுகின்ற ஒரு கதம்ப மாலை 'புறநானூறு' ஆகும்.

இந்நூலில் பண்டைத் தமிழ் நிலமாண்ட மூவேந்தர்கள், சிற்றரசர்கள், வள்ளல்கள், புலவர் பெருமக்கள், வாழ்வியல், நடை, உடை, உணவுப் பழக்கங்கள் ஆகியவை தெளிவாகக் காட்டப் பெற்றுள்ளன. இந்நூலைத் தமிழர் வாழ்வின் பெற்றியைக் காட்டும் கண்ணாடி எனலாம். இன்ன பிற சிறப்புக்களையும் தன்னகத்துக்கொண்ட புறநானூற்றுப் பாடல்களில் கூறப்பெற்றுள்ள—பாடப் பெற்றுள்ள—சைவ சமய நெறியைக் கண்டு, காட்ட முயல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

நற்சமயங்களின் நல்லாறு தெரிந்துணர நம்பர் அருள் வேண்டும்; ஓரறிவுயிர்கள் மாட்டும் பெருங்கருணைத் திறத்தைப் பெருக்கிக் காட்டிய கண்ணுதற் பண்ணவனின் திருக்கோலப் பொலிவினையும், திருவருட் செயல்களையும் முன்னர்க் காண்பது சாலும்.

**சிவபெருமான்:—**

பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின் அருமைக்கும் ஒப்பின்மையான் ஆகிய பரம் பொருளின்

திருமுடி, திருமார்பு, மற்றும் திருவுருவக் கோலங்கள் ஆகிய இவை குறித்து இலக்கியங்கள் பலபட விதந்து பேசும். சங்கப் பழந்தமிழ்ப் பனுவலாகிய புறநானூறும் அந்நெறி யில் நின்று உலகமுதல்வனின் ஒளிமிகும் திருமேனி நலங்களைத் திறனுற விளக்கும்.

**கொன்றைக் கண்ணி முடியோன்:—**

ஆலவாயழகன் தன்னுடைய சென்னியில் கொன்றை மாலை சூடுவன் என்று திருமுறைகளும் ஞான நூல்களும் பேசும்.

"வன்னி கொன்றைமத மத்தம் எருக்கொடு கூவிளம்.
பொன்னியன்றசடை யிற்பொலி" என
ஆளுடைய பிள்ளையும் (3—7—1)

"தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண்" என ஆளுடைய அரசும். (6—8—9)

"பூங்கொன்றைக் கண்ணியான்" என ஸ்ரீகுமர குருபரரும் எடுத்தியம்புகின்ற கொன்றைக் கண்ணி சூடும் பேரழகை, புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து, ஏத்திப் பாடும்.

"கண்ணி கார்நறுங் கொன்றை" (கடவுள் வாழ்த்து)

**செஞ்சடை எம்பெருமான்:—**

சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மானின் தாழ்ந்த சிவந்த திருச்சடையின் பொலிவினைப் புறநானூறு,

"தாழ்சடைப் பொலிந்த" (கடவுள் வாழ்த்து)
"எரிமருளவிர் சடை" (56)
"நன்ருய்ந்த நீணிமிர்சடை (166)
என்றெல்லாம் நயந்து பேசும்.

'செம்பொனாற் செய்தழகு பெய்தாற் போலும்
செஞ்சடையெம் பெருமானே'' (6–4–9)
''மாமதியம் மலர்க்கொன்றை வன்னி மத்தம்
நறவார்செஞ் சடையானை'' (6–20–10)
எனும் திருமுறைத் தொடர்கள் ஈண்டு சிந்திக்கற் பாலன.

**நெற்றிமேலமர் கண்ணினன்:—**

முக்கண் உடை வள்ளலின் மூன்றாவது நெற்றிக் கண்ணைப்பற்றித் தமிழ் நூல்கள் பல்லாற்றானும் பாங்குற மொழியும்.

'காமற் காய்ந்த கண்விளங்கு நெற்றியார்' என்பர் ஆளுடைய அரசர்.

புரமெரித்த புங்கவனின் பொலிவுடைய நெற்றியில் பூத்த திருக்கண்ணை,

''முக்கட் செல்வர்'' (6)
''கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல'' (91)
என்றும் 'புறம்' அழகுறக் கூறும்.

**நீலமணிமிடற் றொருவன்:—**

தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்த போது வெளிப் பட்ட ஆலகால விடத்தை அகில உலகமும் உய்ய ஐயன் அமுதாக எண்ணி அதனை உண்ண அதுசமயம் ஜகன்மாதா, கழுத்தை இறுக்கிப் பிடிக்க அது கண்டத்தில் தங்கிக் கறைக் கண்டம் ஆயிற்று. இது இறைவனின் அருட்பெரும் திரு வுள்ளத்தைப் பெரிதும் காட்டுவதாகும்.

''வேலைவிட முண்டிருள் கின்ற மிடற்றின்''
''நஞ்சணி கண்டனே''
என்று திருமுறைகள் இவ்வருட்செயலை நயந்து போற்றும்.

கடல் நஞ்சை அமுதாக உண்டமையால் கறையாகிய நீல மணிபோன்ற மிடற்றினை,

"கறைமிடறு" (கடவுள் வாழ்த்து)
"நீலமணி மிடற்று ஒருவன்" (91)

என்பதாகப் போற்றும் புறநானூறு.

**கொன்றையந் தாரோன்:—**

உள்குவார் உள்ளத்து உவந்துறையும் சோதியாம் இறைவன் தன் திருமார்பகத்தில் கொன்றை மாலை தரித்தலை,

"காமர் வண்ண மார்பில் தாரும் கொன்றை (க.வாழ்த்து) எனப் 'புறம்' கூறும்.

"குளிர் கொன்றைத் தார் அணிந்து" (6—2—8)
'பைந்தளிர்க் கொன்றையந் தாரார் போலும்"
(6—16—9)

என்னும் திருமுறைத் தொடர்கள் மேற்கூறியவற்றோடு ஒப்புடையன.

**ஏழை பங்காளன்,—**

பலபல வேடமாகும் பரநாரி பாகனின் அர்த்த நாரீசுவரத் திருக்கோலத்தை — பெண்ணுருவை ஒரு பாகத்தில் தாங்கிய பெற்றிமையை—புறநானூறு கூறுவது அழகிதாகும்.

"பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று" (க. வா )
மாதொரு பாகனும் இயல்பை,
"பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி"
"புனைமலர்ப் பூங்கோதை யிடப்பாங் குறையும்
முக்கட் பரஞ்சோதி"

என்னும் அருள் நூல்கள்.

**எருதேறும் எழிலோன்;—**

ரிஷபாரூடனாய்ப் பெருமான் காட்சி தரும் திருக்கோலச் சிறப்பைப் புறநானூற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்,

"ஊர்தி வால்வெள் ளேறே" (க. வா.)
என்றுரைக்கும்.

"விடையேறி"
"போரார்ந்த மால்விடை யொன்றூர்வான் கண்டாய்"

என்னும் திருமுறைப்பாத்தொடர்கள் இக்கருத்தினை முகந்து நிற்பன.

**ஏற்றுக் கொடியோன்:—**

......................"வெள்ளேறு
வலவயின் உயரிய" என்று
திருமுருகாற்றுப்படையும்,

"போரேறு நெடுங்கொடி மேல் உயர்த்தினன் காண்" என்று திருமுறையும் இயம்புகின்ற இறைவனின் ஏற்றுக் கொடியைப் புறநானூறு,

"ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப" (க. வா).
"ஏற்றுவலன் உயரிய" என்று கூறும் (56)

**முப்புரம் செற்ற முதல்வன்:—**

மேரு மலையை வில்லாகவும், வாசுகியென்னும் பாம்பை நாணாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டு முப்புரங்களை எரித்தழித்த இறைவனின் அருட்செயலைப் புறநானூறு அழகுற மொழியும்.

"ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த" (55)

**மழுவேந்தும் மணிமிடற்றோன்:—**

இறைவன் திருக்கரத்தில் ஏந்துகின்ற மழுப்படை யானது விலக்குதற்கு அரியது என்பதை,

''மாற்றருங் கணிச்சி'' ( 6)
என்று புறநானூறு புகலும்,

**நீரறவறியாக் கரகம்;—**

சிவபெருமான் குண்டிகை கைக்கொண்டு அருந்தவம் இயற்றுகின்றான்; அக்குண்டிகையில் நீர்தொலைவு அறியாது. எந்நாளும் பெருகும் என்னும் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து.

''நீரற வறியாக் கரகத்து'' (க. வா)

இவ்வாறாக கணிச்சிக் கூர்ம்படை கண்ணுதற் பண்ண வனின் திருமுடி முதலான திருவுருவப் பொலிவினையும் ஊர்தி, கொடி முதலானவற்றையும், விதந்து பேசிய புற நானூறு அவன் கோயிலை வணங்குக என்றும், இறைவன் வாக்கை மறைமொழியாய்க் கொண்டு போற்றுதல் வேண்டும் என்றும் கூறி அவனைப் பலவாறாக விளிக்கவும் செய்யும்.

**முக்கட் செல்வர் நகர்:—**

திருக்கோயில் என்று இன்று சொல்லப்பெறும் இறை வனின் கோயில், நகர், ஆலயம், நியமம் என்ற சொற்களா லும் வழங்கப் பெற்றுள்ளது.

காரிகிழார் என்னும் புலவர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு உறுதிப் பொருள்களையும், உய்யும் வழிகளையும் கூறும் வகையில் ''மன்னா! நீ மூன்று கண்ணை உடைய சிவபெருமானின் கோயிலை வலஞ்செய்வ தற்கு உன்னுடைய குடை தாழட்டும்; மற்ற எதற்கும் தாழக்கூடாது'' என்று உரைக்கின்றார்.

பணியியர் அத்தை நின்குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே (6)

**கூற்றின் சீற்றம்:—**

மணிமிடற்றேன், பனைக்கொடியோன், புட்கொடியோன், ஒண்செய்யோன் ஆகியோரோடு பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை ஒப்பவைத்து அவன் சீற்றத்தில் சிவபெருமானை ஒக்கின்றான் என்பார் நக்கீரர்.

"ஞாலங் காக்கும் கால முன்பில்
தோலா நல்லிசை நால்வர் உள்ளும்
கூற்றெத் தீயே மாற்றருஞ் சீற்றம் (56)
என்றுரைப்பார்.

**முதல்வன் வாக்கு:—**

ஆராய்ந்த, மிக நீண்ட சடையினையுடைய அரனின் வாக்கினை விட்டு நீங்காது அறமொன்றையே பெரிதாகக் கருத வேண்டும் என்னும் கருத்தமைய,

நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
என 'புறம்' பேசுவது சிறப்புடையது.

**ஒருவன் என்னும் ஒருவன்:—**

இறைவன் ஒன்றானவன். உலக முதலானவன்; உலகிலுள்ள அத்தனைப பொருட்களுக்கும் உடையான அவன், எனவே பெருஞ்செல்வன் என்பதைக் கருத்தில் கொண்டு அவனை,

'முக்கட் செல்வன்' என்றும்,
'நீலமணிமிடற் றொருவன்' என்றும்,
'முதுமுதல்வன்' எனறும்
அன்புடன் அழைக்கும்,

'அவன்அவள் அதுவெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம் ஆதி என்மனுர் புலவர்'

எனும் ஞானசாத்திரக் கருத்து ஈண்டு ஒப்புநோக்கற்குரியது.

நீலமேனி வாலிழை பாகத்துச் சிவபரம் பொருளைப் பலவாருகப் பல நிலைகளில் பாடிப்பரவிய புறநானூறு, பரம்பொருளின் அம்சமாகிய முருகப் பெருமானையும் உரைக்கும்.

**நெடுவேள்:—**

முருகன் நானிலத்துள் குறிஞ்சிக் கிழவனுகக் காக்கின்ற மையைச் 'சேயோன் மேய மைவரை உலகமும்' எனத் தொல்காப்பியம் கூறும். சங்கஇலக்கியங்களுள் முருகாற்றுப் படை முழுமையும் முருகனைப் பாடுவது.

புறநானூறு, முருகப் பெருமானின் தோற்றப் பொலிவினையும், அருட்செயல்களையும், ஆற்றல் திறத்தையும் அழகுதமிழில் கூறும்.

முருகப்பெருமான் சதுக்கமும், சந்தியும், புதுப்பூங் கடம்பும் ஆகியவற்றின் வழியே வெளிப்பட்டு நிற்பதாக முருகாற்றுப் படை மொழியும். பெருமானின் திருக்கோயில் சிறப்பை,

"...................... தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை" (55)

என்றும்,

"அணங்குடை முருகன் கோட்டத்து" (299)

என்றும் 'புறம்' கூறும்.

'பவளத் தன்ன மேனி' உடையன் என்று குறுந் தொகைக் கடவுள் வாழ்த்து குன்றமர்கடவுளைப் போற்றும்.

புறநானூறும் அவன் சிவந்த நிறமுடையவன்; மயிலை ஊர்தியாகவும், கொடியாகவும் கொண்டுள்ளான் என்னும்.

மணிமயில் உயரிய மாறு வென்றிப்
பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும் (56)

சேவலங் கொடியோன் கடம்பமாலை சூடுபவன்; அவன் பகைவரை அழிக்கையில் மிகவும் சினங்கொண்டு போரிடுவான்; அவன் சூருடலங் கீண்ட சுடர் வேலோன் என்று அவன் பண்புகளை,

'கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்' (23)
'முருகற் சீற்றத்து' (16)
'சூர்நவை முருகன்' (23)

எனப் பாராட்டும்.

மலையுறை மக்கட்கு மனங் கொண்ட முதல்வன்சேய்; அவர்கள் மழைவேண்டின் அவனைப் பரவுவர்; அவன் அவர்களைக் காப்பவன்; அவனுக்குப் பூஜை இடுகையில் பூஜை செய்வோன் உடம்பில் எழுந்தருளுவான்; வாக்கருள்வான், அவன் நினைத்ததை முடிக்கும் ஆற்றலுடையவன், அவனைச் சுற்றியுள்ளன அவன் கணங்கள் என்னும் கருத்துக்களமைய,

"ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கும் நளிமுழை
அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமை" (158)
"மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்" (143)
"முருகுமெய்ப் பட்ட புலைத்தி போல" (259)
"முருகொத் தீயே முன்னியது முடித்தலின்" (56)
"கார்நறுங் கடம்பன் பாசிலைத் தெரியல்
சூர்நவை முருகன் சுற்றத்தன்ன" (23)

என்ற புறப்பாட்டுத் தொடர்கள் காணப்படுகின்றன.

போர், வெற்றி, வீரம், புகழ் கொடை முதலியன பற்றிப்புகலும் நூலாக இருந்தபோதிலும் பரவலாகச் சமய நெறிச் செய்திகளையும் கூறுகின்றது புறநானூறு. அவற்றுள் சைவம் பற்றிய செய்திகளைச் சுருக்கமாகக் கண்டோம். அடுத்து வரும் ஆண்டு மலர்களில் இன்னும் விரிவாகவே இச்செய்திகளைக் காணத் திருவருள் துணை நிற்பதாக.

சிவம்

உ
சிவமயம்

# இறை இலக்கணம்

''சித்தாந்த சிகாமணி''
பேராசிரியர் க. வடிவேலாயுதனார், M.A.,
தமிழ்த்துறைத் தலைவர், சென்னைக் கிறித்துவக் கல்லூரி,
தாம்பரம்

சைவ சமயத்துக்கு உயிர் நாடியாக உள்ளவை பதினான்கு சாத்திரங்களும் பன்னிரண்டு திருமுறைகளுமேயாம் என்பது ஆன்றோர் துணிபாகும். இவைகள் அனைத்தும் முதனூல் களேயாம். இதற்கு மாறான கருத்தும் உண்டு.

பதினான்கு சாத்திரங்களும் திருமுறைகளின் கருத்துகளை அடியொற்றி இயற்றப் பெற்றுள்ளன. பதினான்கு சாத்திரங் களுள் எட்டு நூல்களை அருளியவர் உமாபதி சிவாசாரியார் ஆவர். அவைகள் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்ற எட்டு நூல்களாகும். இவற்றை 'சித்தாந்த அஷ்டகம்' என்ற பெயரால் வழங்குதல் மரபு.

இவற்றுள் திருவருட்பயன் என்ற நூல் திருக்குறள் போன்று குறட்பாக்களால் இயன்றது. பத்து அதிகாரங்களை உடையது. ஒவ்வொரு அதிகாரமும் பத்துக் குறள்களையுடை யன. நாற்பொருளாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்றவற்றுள் மூன்று பொருள்களையே திருக்குறள் விரித்து விளக்கியுள்ளது. என்றாலும், "முப்பாலில் நாற்பால் மொழிந்தவர்'' (திருவள்ளுவ மாலை—19) என்றும், "அறம் பொருளின்பம், வீடென்னுமந் நான்கின், திறந்தெரிந்து செப்பியதேவு; (திருவள்ளுவ மாலை—8) என்றும், திருவள்ளு வரைப் புலவர் பெருமக்கள் பலரும் உளமுவந்து போற்றிப்

பாராட்டியுள்ளார்கள். அது திருக்குறளை நன்கு ஆய்வாருக்கு ஏற்புடைய கருத்தே.

எனவே 'திருக்குறளை அடியொற்றி அதன்கண் குறிப்பாகக் கூறப்பெற்றுள்ள மெய்ந்நூற்பொருளின் விளக்கமாக அருளிச்செய்யப் பெற்ற சைவசித்தாந்த நூலே 'திருவருட் பயன்' என்று ஆராய்ச்சிப் பேரறிஞர் க. வேள்ளை வாரணனார் கூறுவது மிகவும் பொருத்தமான விளக்கமாகும்.

திருக்குறள் நூலுக்குப் பேருரை வகுத்த பரிமேலழகர் "வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து ஆகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்'' என்று விளக்கந் தந்துள்ளது சிந்தனைக்குரியது. அக்கருத்தினை நிறைவேற்றுவார்போல உமாபதி சிவாசாரியார் இலக்கணவகையால் திருவருட்பயனைச் செய்துள்ளார் எனக் கோடல் ஒரு வகையில் அமைதி கொள்ளும் கருத்தாகும்.

நூறு குறள் வெண்பாக்களுள் முதலாவதாக விளங்குவது,

''அகர வுயிர்போல் அறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து''

என்ற குறள்வெண்பா. இது கடவுள் வாழ்த்துப் போல விளங்குகிறது. இதன் பொருள்விளக்கமே இந்நூலின் ஏனைய தொண்ணூற்றொன்பது குறட்பாக்களும் என்று ஒருவாறு விளக்கம் தரலாம். 'அகர முதல' எனத் திருவள்ளுவர் தம் நூலைத் தொடங்கியிருப்பதும் ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது.

''எழுத்துக்களுக்கெல்லாம் 'அ' கரம் ஆகிய எழுத்து உயிராய் நின்றாற்போலத் தனக்கு ஓர் உவமன் இல்லாத் தலைவனாகிய கடவுள், ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவாகி, சடப்பொருளிலும் சித்துப்பொருளிலும் ஒழிவற நிரம்பி

ஞானவுருவாய் அழிவின்றி நிலைபெறுவான்'' என்பது இக் குறளின் திரண்ட பொருளாகும்.

இக்குறளின் ஒவ்வொரு சொல்லும் நிரம்பப் பொருள் செறிந்ததாய் அமைந்துள்ளமையை இனிக் காண்போம். 'அ'கர எழுத்து உந்தியினின்று எழும். உதானன் என்ற காற்றெழுப்ப எழுந்து, கண்டத்தைப்பொருந்தி முயற்சி விகாரமின்றி இயல்பாக இயங்கும் ஒலியாம் என்று கூறுவர். இவ்வொலியினுற்றான் ஏனைய ஒலிவடிவமாகிய எழுத்துக்கள் யாவும் இயங்கும். இவ்வொலி இல்லையாயின் மற்ற எழுத்துக்கள் இயங்கமாட்டா. வாயைத் திறந்த அளவிலேயே 'அ'கரம் தோன்றும் என்பது உண்மையாயினும் அதற்கு மேலும் ஒரு சிறப்பு உண்டு. வாயைத் திறவாமல் மௌனமாக இருக்கும் போதும் நாதமாகிய ஒலியாக இருப்பதும் 'அ'கரமே. அதனுல் எல்லா எழுத்துக்களிலும் 'அ'கரம் இரண்டறக் கலந்திருக்கிறது. 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' என்ற தொல்காப்பிய எழுத்ததிகார மொழி மரபு 13—ம் சூத்திரத்திற்கு உச்சிமேற் புலவர் கொள் நச்சினுர்க்கினியர் எழுதிய விளக்கம் ஈண்டு ஒப்பு நோக்கி மகிழ்தற்குரியது.

''இங்ஙனம் மெய்க்கண் 'அ'கரம் கலந்து நிற்குமாறு கூறினற் போலப் பதினேருயிர்க்கண்ணும் 'அ'கரம் கலந்து நிற்கும் என்பது ஆசிரியர் கூறுராயினுர், அந்நிலைமை தமக்குப் புலப்படுத்தலானும் பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிதாகலானும் என்று உணர்க. இறைவன் இயங்கு திணைக்கண்ணும், நிலைத்திணைக்கண்ணும், பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற் போல, 'அ'கரமும் உயிர்க்கண்ணும், தனிமெய்க்கண்ணும் கலந்து அவற்றின் தன்மையேயாய் நிற்கும் என்பது சான்றேர்க்கெல்லாம் ஒப்ப முடிந்தது. 'அகரமுதல' என்னும் குறளான், 'அ'கரமாகிய முதலையுடைய எழுத்துக்களெல்லாம்; அது போல இறைவனுகிய முதலையுடைத்து உலகம்

என திருவள்ளுவனர் உவமை கூறியவாற்ருனும், கண்ணன் 'எழுத்துக்களில் 'அ'கரமாகின்றேன் யானே' எனக் கூறிய வாற்ருனும் பிறநூல்களானும் உணர்க.''

இவ்வளவு சிறப்பான காரணங்களால் இறைவனுக்கு 'அ'கரம் உவமையாயிற்று. உவமேயப் பொருளினும் உவமானப்பொருள் சிறந்திருத்தல் மரபு. ஆயினும் இறைவனைக் காட்டிலும் சிறந்த உவமானம் இல்லை. ஆகையால் இவ்வுவமானம் சிறந்ததாகக் கொள்ளப்பட்டது. எனினும் 'அ'கர ஒலி சடப்பொருளாகும். சடப்பொருளுக்கு உயிர் இன்மையின் அறிவு கிடையாது. இறைவன் 'அ'கரத்தைவிட உயர்ந்தவன் என்று வேறுபாடு தோன்ற 'அறிவாகி' என்ற சொல்லைப் பயன் படுத்தி இறைவனது தூய அறிவினைக் காட்டினர். திருவள்ளுவனும் தமது நூலில் 'வாலறிவன்'என்று கூறியுள்ளது ஒப்பு நோக்கத் தக்கது. எங்கும் நிறைந்தவன் என்பதையும் அவனுக்கு எதுவும் உவமையாகாது என்ற பொருளும் தோன்ற 'எங்கும் நிகரில் இறை' என்று சிறப்பித்துள்ளார் உமாபதி சிவனர். 'உவமன் இல்லி' என்பது தேவாரம்.

இறைவன் சுட்டியறியப்படாதவன். மனம் வாக்குகளால் சிந்திப்பதற்கும் ஓதுதற்கும் அரியவன். அவன் அசைவற நிற்பவன் என்ற கருத்துத் தோன்ற, 'நிறைந்து' என்ற சொல்லை ஆண்டுள்ளார். என்றும் அழியாது நிலைத்து நிற்பவன் என்ற கருத்தினை 'நிற்கும்' என்ற பதம் விளக்கியுள்ளது மகிழ்ந்து இன்புறத் தக்கது.

இவ்வாறு திருக்குறளைப்போலப் பதசாரம் நிறைந்த 'திருவருட்பயனை' ஓதி உணர இவ்வொரு குறள் வெண்பாவே சிறந்த சான்ருகும். இதனை அருளிய சந்தானசாரியருள் ஒருவராகத் திகழும் உமாபதி சிவாசாரியார் திருவடிகளை வணங்கி வாழ்த்துவோமாக.

சிவம்

உ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடிவாழ்க

துறைசையாதீன வித்துவான்
சித்தாந்த பண்டிதபூஷணம்
சிவஸ்ரீ. ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை
அவர்கள் இயற்றிய

# சிவபரத்துவ நிச்சயம்

உரை விளக்கம்
வித்துவான். ச. இரத்நவேலன், சங்கரன்கோவில்

## விநாயக் வணக்கம்.

**மன்னுசிவன் மெய்ப்புகழை வந்தமட்டில் யான்பாடற்**
**கென்னுடைய பேராசை யீர்த்ததெனை—யன்னதனல்**
**அத்திமுக வுன்பாதநா னஞ்சலித்துச் சில்பாடற்**
**கொத்துரைப்பே னெற்கருணீ கூட்டு.**

(பொழிப்புரை):— நிலைபெற்ற சிவபிரானது பொருள் நிறைந்த கீர்த்தியை எனக்குப் பாடத்தெரிந்த வரையில் பாடுவதற்கு என்னுடைய பெரிய ஆசை என்னை இழுத்தது. அதனல், விநாயகக் கடவுளே! தேவரீர் திருவடிகளை அடியேன் வணங்கிச் சில பாடல்இரட்டு இயற்றுவேன். தேவரீர் அடியேனுக்கு அருள் கூட்டுவீராக.

இந்நூல் இனிது முடிதற்பொருட்டுச் செய்யப்படும் விநாயக வணக்கம் இந்நேரிசை வெண்பா.

ஆசிரிய வணக்கம்

விளங்கொளி வெள்ளி மலைமிசை யுமைதன்
னிடமுற வீற்றிருந் துயிர்க்குக்
களங்கம தொழித்துப் பரகதி யருளுங்
கண்ணுதற் பரமனே பரமென்
றுளங்கொள நாயேற் கொளிருநான் மறையி
னுறுதியை யுணர்த்தி வாழ்வளித்த
வளங்கெழு நெல்லைச் சிதம்பர ராம
லிங்கரின் மலரடி சரணே.

(பொ—ரை) 'ஸ்ரீ கயிலையில் ஸ்ரீ உமாதேவியாரொடு எழுந்தருளி உயிர்க்கூட்டத்திற்கு சகசமாக உள்ள ஆணவ மலக் குற்றத்தை நீக்கித் திருவடியின்பமாகிய வீடுபேற்றை நல்கும் ஸ்ரீசிவபிரானே பரம்பொருள்' என்று கூறி அடியேனது உள்ளங்கொள்ளுமாறு ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்கள் கூறும் சத்தியார்த்தத்தை உணர்த்தி வாழ்வளித்த வளம்நிறைந்த திருநெல்வேலிச் சிதம்பர ராமலிங்க பிள்ளையவர்கள் மலர்போன்ற பாதங்களே அடியேனது அடைக்கலத் தானமாம்.

இந்நூலை ஆக்கியோர் தமக்குச் சைவசித்தாந்தங் கற்பித்த ஆசிரியரை இச்செய்யுளால் வணங்குகிருர். சிவஸ்ரீ வி. சிதம்பர ராமலிங்க பிள்ளையவர்கள் இரண்டு வியாழ வட்டங்கள் நெல்லை ம. தி. தா-ஹிந்து கலாசாலையில் தமிழாசிரியராய்ப் பணியாற்றிப் பின்னர் துறைசையாதீன வித்துவானுய்த் தமது பரிபூரண காலம் வரை சிவப்பணி செய்தார்கள். சுருதி சூக்தி மாலை போன்ற பல நூல்களைப் பதிப்பித்த இவர்கள் தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழியிலும் வல்லுநர்.

## நூல்

இரணிய கருப்ப னவ்வில் இலக்குமி கணவ னுவ்வி
லுரமிகு சூல மேந்தும் உருத்திரன் மவ்வி லாவர்

பரசிவ பிரான்சம் வர்த்த காக்கினி பயில்பே ராகப்
பிரணவ சமட்டி யென்னும் பீடமீ திருப்ப னன்றே.

(பொ—ரை) இரணியகருப்பன் என்னும் பிரமதேவன் அகரத்திலும் இலக்குமி கணவனாகிய திருமால் உகரத்திலும், வலிமைமிக்க சூலப்படை ஏந்திய உருத்திரமூர்த்தி மகரத்திலும் இருப்பர். சிவபிரான் 'சம்வர்த்தகாக்கினி' என்பதைத் தமக்கு வழங்கப்படும் பெயராகக் கொண்டு சமஷ்டிப் பிரணவமாகிய ஆசனத்தில் எழுந்தருளியிருப்பர்.

'அகார:... ப்ரஹ்மா... உகார:... விஷ்ணு...மகார:... ..ருத்ரா...ஓங்கார:...ஸம்வர்தகோக்நி' என்ற அதர்வசிகோபநிஷத்தும், 'பூர்வா மாத்ரா....ப்ரஹ்மா....த்விதியா... விஷ்ணு:...த்ருதியா...ருத்ரா....சதுர்த்யா...ஸம்வர்தகோக்நி ...' என்ற நரஸிம்ஹ பூர்வதாபிநியுபநிஷத்தும், 'அகாரே ஸம்ஸ்திதோ ப்ரஹ்மா உகாரே விஷ்ணுராஸ்தித: மகாரே ஸம்ஸதிதோ ருத்ராஸ் ததோஸ்யாந்த: பராத்பர:' என்ற பிரஹ்ம வித்யோபநிஷத்தும், 'அகாரம் ப்ரஹ்மாணம்... உகாரம் விஷ்ணும்...மகாரம் ருத்ரம்...ஓங்காரம் ஸர்வேச்வரம்' என்ற நரஸிம்ஹோத்தரதாபிநி யுபநிஷத்தும் இச் செய்யுட்குப் பிரமாணங்களாம். ஸம்வர்த்தகாக்கினி பதமும் ஸர்வேச்வர பதமும் பரியாயங்களாய் வந்திருத்தல் காண்க. அவ்வீசுவரபதம் சிவபிரானுக்கே யுரியது.

அகர உகர மகரங்களாலாகியது ஓம், அகர உகர மகரங்கள் வியஷ்டிப்ரணவம், ஓம் சமஷ்டிப்ரணவமாம், அகர உகர மகரம் முறையே பிரம விஷ்ணு ருத்திரர்க்கு இருப்பிடம் அம்மூன்றின் சமஷ்டியாகிய பிரணவம் சிவபிரானுக்கு இருப்பிடமாம் என்பன இச்செய்யுளால் பெறப்பட்டன. இனிவரும் செய்யுள்கள் பெரும்பாலும் முதல் நான்காம் சீர்கள் விளச்சீரும் எஞ்சியன மாச்சீருமாய் அமைந்த அறுசீர் விருத்தங்கள். (1)

அவ்வதி லிருக்கும் பூமி யந்தர மிருக்கு முவ்வில்
மவ்வதி லிருக்குஞ் சொர்க்கம் வாக்கொடு மனமுஞ் செல்லா

திவ்விய வுமைவாழ் பாகச் சிவபிரான் சோம லோக
மெவ்வமி லருத்தந் தன்னி லிருக்குமென் றுரைக்கும் வேதம்.

(பொ—ரை) அகரம், உகரம், மகரமாகிய அக்ஷரங்களில் முறையே பூமி, அந்தரிக்ஷம் எனப்படும் அந்தர உலகம், சொர்க்கம் என்பன இருக்கும். ஆனல் வாக்கும் மனமும் செல்லாத உமாநாயகனது உலகமாகிய சிவலோகம் கேடில்லாத பிரணவ அர்த்த மாத்திரத்தில் இருக்கும் என்று வேதம் சொல்லும்.

'கேவல மகாரோகார மகாரார்த்த மாத்ர ஸஹிதம் ப்ரணவமூஹ்ய' என்ற ராம ரஹஸ்யோபநிஷத்தும், 'அகாரோகார மகாரார்த மாத்ராத்மிக' என்ற வராகோபநிஷத்தும் 'அர்த்த மாத்ரா ஸமாயுக்த: ப்ரணவோ மோக்ஷ தாயக:', ப்ருதிவி ... அகாரே ... அந்தரிக்ஷம் ... உகாரே ... த்யௌ:...மகாரே...பஞ்சதைவதம் ஓங்காரம்' என்ற தியாந பிந்துபநிஷத்தும் 'ப்ருதிவ்யகார...அந்தரிக்ஷம் ஸ உகார:... த்யௌ:ஸ மகார:... ஸோமலோக ஓங்கார:' என்ற நரஸிம்ஹ பூர்வ உத்தரதாபிநியுபநிஷத்துகளும் அதர்வசிகோபநிஷத்தும், 'அரைமாத்திரையிலடங்கும்மடி' என்ற தேவாரமும், 'மஹேசாநமவாங் மநஸகோசரம்' என்ற சரபோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

பிரணவத்தின் அர்த்த மாத்திரையில் சிவலோகமிருக்குமென்பதால் அவ்வர்த்தமாத்ரா தெய்வம் சிவபிரானே என்பது இச்செய்யுளால் நிருவப்பட்டது.

பிரணவத்தைக் கொண்டு இவ்விருசெய்யுள்களால் பரத்துவ நிச்சயம் செய்த ஆசிரியர் தியானமுறை கொண்டு அடுத்துவரும் இரு செய்யுள்களால் பரத்துவ நிச்சயம் செய்கிருர். (2)

ஈரிரு முகவ னுபி யிடத்தரி யிதயந் தன்னி
லோரிரு புருவ மையத் துருத்திரன் துவாத சாந்தச்
சீரிய தான மீது சிவபிரா னிவர்க டம்மை
நேரிய யோகி யென்று நிறுத்துவன் தியானத் தாலே.

(பொழிப்புரை):—வேதாகமப் பயிற்சியும், அநுபவமுடைய தேசிகனிடத்து உபதேசமும் பெற்ற நேரிய யோகி பிரம்மதேவனை நாபியிலும், விஷ்ணுமூர்த்தியை இதயத்திலும், உருத்திரமூர்த்தியைச் சிறந்த புருவ நடுவிலும், ஸ்ரீ சிவபிரானை சிறப்பான இடமாகிய துவாதசாந்தத்திலும் தியானத்தாலே வைத்து வணங்குவன்.

'த்வாதசாந்தபதம் ஸ்தாநமிதி' என்ற தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்தும், 'சீர்ஷோபரி த்வாதசாங்குல ஸமீக்ஷிதுரம் ருதத்வம் பவதி' என்ற அத்வய தாரகோபநிஷத்தும், 'ப்ரஹ்மரந்த்ரே மஹாஸ்தாநே வர்ததே ஸததம்சிவா | சித்சக்தி:' என்ற யோகசிகோபநிஷத்தும், 'ப்ரஹ்மாணம் நாபௌ...... விஷ்ணும் ஹ்ருதயே...... ருத்ரம் ப்ரூமத்யே...... சர்வேச்வரம் த்வாதசாந்தே' என்ற நரஸிம்ஹோத்தரதாபிநியுபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

மற்ற தேவர்களை வைத்துத் தியானிக்கும் தானங்களுக்கெல்லாம் உயர்ந்தது துவாதசாந்த ஸ்தானம். அங்கு வைத்துத் தியானிக்கப்படுபவர் சிவபிரான் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (3)

**அயனெனு மவனை நெஞ்சி லரிதனைக் கண்டந் தன்னி**
**லுயவினை யுயிர்கட் கோட்டு முருத்திர தேவை நாவிற்**
**செயமெலா மன்பர்க் காக்குஞ் சிவபிரான் றன்னை நெற்றி**
**நயமிகு மிடத்தி ளுட்டி நாளுநற் றியானஞ் செய்யே.**

(பொ—ரை) 'பிரம்மதேவனை நெஞ்சிலும், விஷ்ணுமூர்த்தியைக் கண்டத்திலும், உயிர்களுக்குத் துன்பத்தை ஓட்டும் உருத்திரமூர்த்தியை நாவிலும், தம்மை வழிபடும் அன்பர்களுக்கு வெற்றித்திருவை உண்டாக்கும் ஸ்ரீ சிவபிரானை நன்மைமிகும் புருவநடுவாம் நெற்றி இடத்திலும் பொருந்தச் செய்து நாள்தோறும் தியானம் செய்க' என்பது வேதம் இடும் கட்டளையாகும்.

'ப்ரஹ்மணோ ஹ்ருதய ஸ்தாநம் கண்டே விஷ்ணு: ஸமாச்ரித: தாலுமத்யே ஸ்திதோ ருத்ரோ லலாடஸ்தோ மஹேச்வர:' என்ற பிரமவித்யோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

இன்னெரு வகைத் தியான முறையில் உச்சஸ்தானமா யிருப்பது நெற்றி. அதில் வைத்துத் தியானிக்கப் படுபவருஞ் சிவபிரானே என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. தியான ஸ்தானபேதம் அதிகாரிபேதம் பற்றிக் கூறப்பட்டமையால் மு ணுதென்பதை உண்மையறிவார் கண்டு கொள்க.

அடுத்து வரும் இரு செய்யுட்களால் வர்ணபேதத்துள் வைத்துப் பரத்துவ நிச்சயம் செய்கிமுர். (4)

**மஞ்சளி னிறவ ஞகி மாமறைக் கிழவன் வாழ்வான்**
**அஞ்சன வண்ண ஞவா னரவமீ துறங்குந் தேவன்**
**விஞ்சிய வெள்ளைத் தேவாய் விளங்குவ னரஞல் வேதச்**
**செஞ்சொலு முரையு மான சிவபிரான் சருவ வண்ணன்.**

(பொ—ரை) மாமறைக் கிழவனும் பிரம்மதேவன் மஞ்சள் நிறத்தையுடையவனுகி வாழ்வான்; ஆதிசேடன் மீது உறங்கும் அரி மைநிறமாகிய கரியவனுகி வாழ்வான்; மிகுந்த வெள்ளை நிறத்தவனுய் விளங்கி உருத்திரமூர்த்தி வாழ்வான். ஆனுல், வேதத்தின் சொல்லும் பொருளுமாய சிவபிரான் சர்வ வண்ணங்களும் உடையவன்.

பீதா......ப்ரஹ்மதைவத்யா.. ......கிருஷ்ணே விஷ்ணு தைவத்யா...சுக்லாருத்ரா தைவத்யா...ஸர்வ வர்ணே புருஷ தைவத்யா' என்ற அதர்வசிகோபநிஷத்தும், 'மற்றுமற்றும் பல்பல வண்ணத்தராய்' என்ற தேவாரமும், 'ருத்ரோர்த்த அக்ஷர: ஸ உமா' என்ற ருத்ரஹ்ருதயோபநிஷத்தும், 'ஸர்வ நாதமய: சிவ:' என்ற தேஜோபிந்துபநிஷத்தும், 'ஸர்வா க்ஷரமய:' என்ற நாரதபரிவ்ராஜகோபநிஷத்தும் இச் செய்யுட்குப் பிரமாணங்கள். புருஷபதம் சிவபிரானுக்கே உரிய பெயர்.

ஒவ்வொரு தேவரும் ஒவ்வொரு வண்ணராயிருக்கச் சிவபிரான் மாத்திரம் சர்வ வர்ணங்களையும் தம்பாற் கொண்டவரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (5)

**மருமலி மலரோன் செய்யன் மங்குலி னிறவன் மாலோன்**
**உருமலி கபில வண்ண முருத்திர மூர்த்திக் குண்டால்**
**கருமலி யுயிர்கட் கெல்லாங் களைகணுய்த் தானேர் போதுஞ்**
**செருமல முருத செல்வச் சிவபிரான் படிக வண்ணன்.**

(பொ—ரை) தாமரை மலர் வாழ் பிரம்மன் சிவப்பு நிறத்தினன்; திருமால் இருள்புரை மேனியன், உருத்திர மூர்த்தி அழகு நிறைந்த கபிலவர்ணன்; ஆனல், கருப்ப வாசங்களை அளவு கடந்து அடைகின்ற உயிர்க்கூட்டங் களுக்கு ஆதரவானவனும், தான் மட்டும் மும்மலத் தொடக்கிலாத செல்வனுமாகிய சிவபிரான் பளிங்கு நிறத்தினன்.

'ப்ரஹ்ம தேவத்யா ரக்தா வர்ணேந......விஷ்ணு தேவத்யா கிருஷ்ண வர்ணேந...ஈசாந தேவத்யா கபிலா வர்ணேந...ஸர்வ தேவத்யாவ்யக்திபூதா ஸ்வம்விசரதி சுத்தஸ்படிக ஸந்நிபா வர்ணேந' என்ற அதர்வசிரோப நிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

தம்பால் சர்வவர்ணங்களையும் கொண்டதுபோல் ஒரு வர்ணத்தையுங் கொள்ளாமல் ஸ்படிகம்போல விளங்குப வரும் சிவபிரானேயென்பது இச்செய்யுளால் பெறப் பட்டது. (6)

**இந்திர னுலகின் மேலே யிருந்திடும் பிரம லோகம்**
**செந்திரு கணவ னுடத் திசைமுக னுலகின் மேலாம்**
**உந்தொளி யுலகஞ் சேரு முருத்திரற் கதன்மே லந்நாட்**
**டந்தம தாகு முத்தி யருள்சிவ பிராற்கு நாடே**

(பொ—ரை) இந்திரன் உலகுக்கு மேலேயுள்ளது பிரம லோகம். மகாவிஷ்ணு மூர்த்தியின் உலகு பிரம்மலோகத் தின் மேலுள்ளது. பிரகாசம் மிக்க உருத்திரர் உலகம்

விஷ்ணு உலகத்தின் மேலுள்ளது. முக்தியை அருள் சிவ பிராற்குரியது அவ்வுலகங்களெ யாவற்றிற்கும் முடிவில் உள்ளது. அதுவே சிவலோகம்.

'ஷஷ்ட்யா மிந்த்ரஸ்ய ஸாயுஜ்யம் ஸப்தம்யாம் வைஷ்ணவம் பதம் அஷ்டம்யாம் வ்ரஜதே ருத்ரம் ... ... த்வாதச்யாம் ப்ரஹ்ம சாச்வதம்...சிவம்...' என்ற நாத பிந்தூபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம். பிரமனுலகம் ஏழிலடங்குவதையும் விஷ்ணு பதத்தின் கீழிருப்பதையும் யூகித்தறிக. ஏனைய உலகங்களின் வரிசையையும் அவ்வுப நிஷத்தில் காணலாம்.

ஸர்வ லோகாதீதமாய்ப் பரமுத்தி ஸ்தானமாய் விளங்குவது சிவலோகமென்பது இச்செய்யுளால் பெறப் பட்டது. (7)

**மலரவ னனவில் வாழ்வன் மாலவன் கனவி லேய்வன்**
**உலவறு சுழுத்தி சேர்வ னுருத்திர னெங்கு மென்றும்**
**திலமுறு நெய்போ னிற்குஞ் சிவபிரான் றுரியந் தன்னில்**
**நிலவுவ னிதனை வேத நெறியின ரறிவ ரன்றே.**

(பொ—ரை) நனவு (ஜாக்கிரம்), கனவு (ஸ்வப்பனம்) உறக்கம் (சுஷுப்தி) என்னும் மூன்றவத்தைகளை முறையே பிரம்மா, விஷ்ணு, உருத்திரர் பொருந்துவர். சித்து அசித்துப் பிரபஞ்ச முழுவதிலும், எக்காலத்திலும் எள்ளில் நிறைந்த நெய்போல ஔபச்சிலேடிக வியாபியாய் நிற்கும் சிவபிரான் மூன்றவத்தைகளுக்கும் அதீதமாய துரியம் என்னும் அவத்தையில் விளங்குவான். இவ்வுண்மையினை வேத நூல்களை முறையாகக் கற்றவர்கள் அறிவர்.

'ஜாகரிதே ப்ரஹ்மா ஸ்வப்நே விஷ்ணு; ஸுஷுப்தௌ ருத்ரஸ்துரீய மக்ஷரம்' என்ற பிரமோபநிஷத்தும் பரப் மோபநிஷத்தும், 'அவஸ்தாத்ரிய தயாதீதம் துரீயம்...... ஈசாநம் .....'என்ற பஞ்சப்பிரமோபநிஷத்தும் 'திலேஷு தைலம்' என்ற சுவேதாசுவதர உபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள். அக்ஷரபதமும் ஈசாந பதமும் பரியாயங்கள்.

மற்ற மூன்றவத்தைகளுக்கு அதீதமாய துரியத்துக்குத் தெய்வம் சிவபிரான் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (8)

**நான்மறை சதுர்த்தந் தன்னை நலம்பெற வுரைக்கும் போது**
**மான்மல ருறைவோ ஞதி வானவர் பெயர்க ளன்றிப்**
**பான்மதி மிலைச்சுஞ் சென்னிப் பரமனுக் குரிய நாமந்**
**தான்மிக வழங்க லாலே தற்பர னவனே யன்றோ.**

(பொ—ரை) வேதநூல் திரிமூர்த்திகளுக்கும் மேலாகிய நாலாவது பொருளை அறிவோர் உள்ளத்தில் தெளிவு உண்டாகும்படி சொல்லும்பொழுது பிரமன், விஷ்ணு முதலிய தேவர்களின் பெயரைப் பிரஸ்தாபியாமல் மூன்றும் பிறையணிந்த ஸ்ரீ சிவபிரானுக்குச் சொந்தமான பெயர்களையே மிகுதியும் எடுத்துப் பிரஸ்தாபிப்பதால் முழுமுதற் கடவுள் அவனேயல்லவா?.

'சிவம்...சதுர்த்தம்' என்ற மாண்டுக்யோபநிஷத்தும், நரஸிம்ஹ பூர்வ உத்தர தாபிநியுபநிஷத்துக்களும், நாரத பரிவ்ராஜகோபநிஷத்தும், ராமோத்தர தாபிநியுபநிஷத்தும், 'சதுர்த்தம்...சிவம்' என்ற பஸ்ம ஜாபாலோபநிஷத்தும், இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

வேதம் நாலாவது வஸ்துவைச் சிவநாமத்தாலேயே பிரஸ்தாபிக்குமென்பதை இச்செய்யுள் நிறுவியது. (9)

**சேவிய னுவ னென்று முபாசியன் றியேயன் என்றுந்**
**தேவிக மறைக ளெல்லாஞ் சிவபிரான் றன்னைப் போற்றிச்**
**சேவக ராவ ரென்று முபாசகர் தியாத மாரிங்**
**காவரே யென்றுங் கூறி யகற்றிடு மூவர் தம்மை.**

(பொ—ரை) சேவிக்கப்படுகிறவன் (சேவியன்), உபாசிக்கப்படுகின்றவன் (உபாசியன்) தியானிக்கப்படுகின்றவன் (தியேயன்) என்று சிவபிரானுரைத் தெய்வீக உபநிடதங்கள் போற்றித் துதித்துச் சொல்லும். ஆனல் சேவிக்கிறவர் (சேவகர்), உபாசிக்கிறவர் (உபாசகர்), தியானிக்கிறவர்

(தியாதாமார்) எனக்கூறிப் பிரம விஷ்ணு உருத்திரர்களை அவ்வுபநிடதங்கள் ஓதுக்கும். இதனுலும் சிவபிரான் உயர்ச்சி புலப்படும்.

'ப்ரஹ்ம விஷ்ண்வாதிபி: ஸேவ்யம்......ஈசாநம்' என்ற பஞ்சப்ரஹ்மோபநிஷத்தும், 'சிவம்......ஸர்வேச்வரம் ஸர்வ தேவைருபாஸ்யம்' என்ற மஹோபநிஷத்தும், 'ஸதாசிவம் ப்ரஹ்மாதி வந்திதம்' என்ற நரஸிம்ஹ பூர்வதாபிநியுப நிஷத்தும், 'ஸர்வ தேவைருபாஸ்யம்,' 'ஸர்வஸ்ய சரணம்' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், ப்ரஹ்ம விஷ்ணு புரந்தராத் யமரவா ஸேவிதம்'' 'மாமேவோபாஸிதவ்யம்'. 'ஏகாமா சாஸ்யம் ... சிவம்' என்ற பஸ்ம ஜாபாலோபநிஷத்தும், 'சிவ ஏகோ த்யேய:' 'த்யாயீதேசாநம்' என்ற அதர்வசிகோபநிஷத்தும், 'ஏகோ ருத்ரோ த்யேய:', 'சிவ ஏவ ஸதா த்யேய:' எனற சரபோபநிஷத்தும், 'நாராயண பரோத்யாதா' என்ற நாராயணோபநிஷத்தும்; 'த்யாதா ருத்ர:[2] என்ற அதர்வசிகோபநிஷத்தும், 'ராம ஏவ பரம் தப:' என்ற ராம ரஹஸ்யோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

வணங்குகிறவர் திரிமூர்த்திகளும் வணங்கப்படுகிறவர் சிவபிரானுமாவாரென்பதைத் தெரிவித்துப் பரத்துவ நிச்சயம் செய்தது இச்செய்யுள். (10)

**சுந்தர சதுர்த்த னென்றுந் துகளறு துரிய னென்றுஞ்**
**சிந்தனை மறைக ணன்குஞ் செய்சிவ பிரானே மாயா**
**மந்திர மாமிப் பாரில் வழங்கிடு மதங்கட் கெல்லா**
**முந்திய சைவ மார்க்க முழுமுதற் கடவுள் காணே.**

(பொ—ரை) மாயாகாரிய வீடாகிய இவ்வுலகில் காணப்படுகிற மதங்களுக்கெல்லாம் முந்தியது சைவ மார்க்கமே. அச்சைவ சமய முழுமுதற் கடவுள் அழகிய சதுர்த்தப் பொருள் எனவும், குற்றமற்ற துரியவஸ்து எனவும் மறைகள் நான்குஞ் சொல்லிச் சிந்தனை செய்யும்

சிவபிரானேயாவார். இவ்வுண்மையைத் தெளியக் கண்டு கொள்க,

'மூவரும் முப்பத்து மூவரு மற்றொழிந்த தேவருங் காணா சிவபெருமான்' என்ற திருவாசகம் இச்செய்யுட்குப் பிரமாணம்.

சைவ சமயத்து முழுமுதற் கடவுள் நாலாவது வஸ்துவாகிய சிவபிரான் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது.

இதுவரை வந்தது நாலு தெய்வப் பிரஸ்தாபம். இனி வருவது ஐந்து தெய்வப் பிரஸ்தாபம். சதுர்த்த தெய்வம் இவ்வரிசையிற் சேராது. (11)

**ஆக்குவ னயன்மா லாக்கி யளிப்பனு லாக்கிக் காத்துப்**
**போக்குவ னரன்மா கேசப் புங்கவ னுக்கிக் காத்துப்**
**போக்கியே மறைப்ப னெண்ணில் புகழ்ச்சதா சிவன்றான் செய்வ**
**னுக்குதல் அளித்தல் போக்கல் மறைத்தனல் லருள்க ளம்மா.**

(பொ—ரை) பிரமதேவன் உலகைப் படைத்தல் மட்டும் செய்வான்; திருமால் படைத்தலொடு காத்தலும் செய்வன்; உருத்திரன் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் செய்வான்; மகேச்சுர மூர்த்தி படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் ஆகிய நான்கு தொழில்கள் செய்ய வல்லவன்; அளவில்லாத புகழுடைய சதாசிவ மூர்த்தியோ படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் செய்வான்.

'பஞ்சக்ருத்ய நியந்தாரம்' என்ற பஞ்சப்ரஹ்மோபநிஷத்தும், 'ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோதாநுக்ரஹாதி ஸர்வசக்தி... ...' என்ற ஸீதோபநிஷத்தும், 'பஞ்சக்ருத்ய ஸம்பந்ந:...பசுபதி' என்ற ஜாபால்யுபநிஷத்தும் 'அயன் முதலிய மூவர்க்கும் முறையே படைப்பு முதலிய மூன்றனுள் ஒரோவொன்று சிறப்புத் தொழிலும், ஏனைய பொதுத்

தொழிலுமாமெனவும்; மகேசன், சதாசிவன் இருவர்க்கும் முறையே மறைப்பும் அருளுஞ் சிறப்புத்தொழிலும் ஏனைய பொதுத்தொழிலுமாம்' என்ற ஶ்ரீசிவஞான மஹா பாஷ்ய மும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

பிரமனாதி ஐந்து மூர்த்திகளுள் சதாசிவனே பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்வரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (12)

**அடிமுதல் முழங்கால் காறு மயனுள னதன்மேன் மாயன்**
**இடைவரை யுள்ளான் தாணு விருதயம் வரையி லாவன்**
**வடுவறு புருவத் தெல்லை மகேச்சுரன் வதிவான் மேலாந்**
**தடமுடி தனினன் குற்ருன் சதாசிவ பரமன் ருனே.**

(பொ—ரை) மனுஷ்ய சரீரத்தில் அடிமுதல் முழங் கால்வரை பிரமன் உள்ளான்; முழங்கால் முதல் இடுப்பு வரை திருமால் வாழ்வான்; உருத்திரமூர்த்தி இடுப்பின் மேல் இதயம் வரை வாழ்வான்; இதயத்தின் மேல் குற்ற மற்ற புருவ எல்லை வரை மகேச்சுரன் இருப்பான்; புருவ மத்தியிலிருந்து சிரசுவரை பரமனாகிய சதாசிவமூர்த்தி வீற்றிருந்தருளுவான்.

'பாதாதி ஜாநுர் பர்யந்தம்...சதுர்புஜாகாரம் சதுர் வக்த்ரம் ஹிரண்மயம்......ஆஜாநோ: பாயுபர்யந்தம்...... நாராயணம் தேவம்......ஆபாயோர் ஹ்ருதயாந்தம்...... ருத்ரம்......ஆஹ்ருதயாத் ப்ருவோர் மத்யம்......ஈச்வரம் ஆப்ரூமத்யாத்து மூர்த்தாந்தம்...ஸதாசிவம்' என்ற யோக தத்வோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

உடம்பிற் பிரதான உறுப்பாகிய சிரசிற்குரிய தெய்வம் சதாசிவனே என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (13)

**மண்ணதி லயன்மா னீரில் வன்னியி லரன்கா லீசன்**
**தண்ணளி வடிவ மான சதாசிவன் விண்ணி லுள்ளார்**
**எண்ணிடு பூத மைந்து மேறலான் முறையா யாங்கே**
**நண்ணிடு மதிபர் தாமு நாசமி லதிக ரங்கன்.**

(பொ ரை) அயனும் மாலும் அரனும் ஈசனும் சதா சிவனும் முறையே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய ஐந்து பூதங்களிலும் உள்ளார். எண்ணத்தக்க பூதங் களில் பிருதிவியினும் அப்புவும், அப்புவினும் தேயுவும், தேயு வினும் வாயுவும், வாயுவினும் ஆகாசமும் வியாபித்தலான் அப்பூதங்களில் இருக்கிற கடவுளர் தாமும் அப்பூதங்களின் வியாபக முறையில் அழியாத வியாபகர்.

'ஆகாசாத் வாயு: வாயோரக்நி: அக்நேராப: | அத்ப்ய: ப்ருதிவீ' என்ற தைத்ரியோபநிஷத்தும், பைங்களோபநிஷத் தும், 'ஆகாசாத் வாயுர் வாயோரக்நிரக்நே ராபோத்ப்ய: ப்ருதிவீ' என்ற ஸுபாலோபநிஷத்தும், 'ஆகாசாத் வாயு: | வாயேரக்நி: அக்நேராப: அத்ப்ய: ப்ருதிவீ | ஏதேஷாம் பஞ்ச பூதாநாம் பதய: பஞ்ச ஸதாசிவேச்வரருத்ர விஷ்ணு ப்ரஹ்மாணச்சேதி' என்ற யோகசூடாமணியுபநிஷத்தும், 'ப்ருதிவீ...சதுர்ப்புஜாகாரம் சதுர்வக்த்ரம் ஹிரண்மயம்... ஆப:......நாராயணம் தேவம்....வஹ்நி....ருத்ரம்......வாயு: ஈச்வரம்...வ்யோம...ஸதாசிவம்' என்ற யோகதத்வோப நிஷத்தும், 'ப்ரஹ்மாணம் ப்ருதிவீ பாகே விஷ்ணும் தோயாம்சகே ததா | அக்ந்யம்சேச மஹேசாந மீச்வரம் சாநிலாம்சகே | ஆகாசாம்சே மஹா ப்ராஜ்ஞ தாரயேத்து ஸதாசிவம்' என்ற ஸ்ரீ ஜாபால தர்சனோபநிஷத்தும், 'தரண் யௌ ப்ரஹ்மா தத்ராதி தேவதா... ஜலம் விஷ்ணுஸ்தஸ் யாதி தேவதா...வஹ்நிருத்ரஸ்தஸ்யாதி தேவதா வாயோர் பிம்பம்து...ஈச்வரோஸ்யாதி தேவதா ஆகாச மண்டலம்... தேவதாஸ்ய ஸதாசிவ:' என்ற யோக சிகோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

மற்றப் பூதங்களை எல்லாம் வியாபித்துள்ள ஆகாச தெய்வம் சதாசிவம் என்பது இச்செய்யுளால் பெறப் பட்டது. (14)

**மண்டலை யயனுல் வெல்க மாலினுல் வெல்க மண்ணீர்**
**மண்புன லனலை வெல்க வயங்கர முதலோன் றன்னுல்**

மண்புன லனல்கா றன்னை மகேசனுல் வெல்க வெல்க
மண்புன லனல்கால் வானை வண்சதா சிவனுல் மாதோ.

(பொ—ரை) பிருவிதி என்னும் பூதத்தை பிரமனை வழிபட்டு வெல்க; பிருதிவி, அப்பு என்னுமிரு பூதங்களையும் திருமாலை வழிபட்டு வெல்க; பிருதிவி, அப்பு, தேயு ஆகிய மூன்று பூதங்களையும் உருத்திர மூர்த்தியை வழிபட்டு வெல்க; பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகிய நான்கு பூதங்களையும் மகேசனை வழிபாடு செய்து வெல்க; பிருதிவி, அப்பு தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்து பூதங்களையும் வளப்ப நிறை சதாசிவ மூர்த்தியை வழிபட்டு வெல்க.

'த்யாயம்ச் சதுர் புஜாகாரம் சதுர்வக்த்ரம் ஹிரண்மயம் தாரயேத் பஞ்ச கடிகா: ப்ருதிவீ ஜயமாப்நுயாத் .. ஸ்மரந் நாராயணம் தேவம் .. தாரயேத் பஞ்சகடிகா— ததோ ஜலாத்பயம் நாஸ்தி ஜலே ம்ருத்யுர் ந வித்யதே | ருத்ரம் தருண மித்ய ஸந்நிபம் தாரயேத் பஞ்சகடிகா வக்நி நாஸௌ ந தாஹ்யதே தாரயேத் தத்ர ஸர்வஜ்ஞமீச்வரம் விச்வதோமுகம் தாரயேத் பஞ்சகடிகா வாயுவத்வ்யோம பவேத் ஆகாசே வாயுமாரோப்ய ஹகாரோபரி சங்கரம்... ஸதாசிவம்.........யத்ரகுத்ரஸ்திதோவாபிஸுக மத்யந்த மச்நுதே' என்ற யோகதத்வோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்'

பஞ்ச பூதங்களையும் ஒரு சேர சதாசிவோபாசனையால் தான் வெல்ல முடியும் என்பதை இச்செய்யுள் நிச்சயித்தது. (15)

விதிபதி சுவாதிட் டானம் விட்டுணு மணிபூ ரத்தன்
உதிகதி ரொளியாஞ் சீவர்க் குருததிர னுக தத்தன்
வதிபதி விசுத்தி தன்னின் மகேச்சுர னுஞ்ஞை யென்னும்
பதியதி லுறைவோ னன்னோர் பணிசதா சிவனே யாவன்.

(பொ—ரை) ஆருதாரங்களில் சுவாதிஷ்டானம் பிரமனுக்கு இடம்; மணிபூரகம் விஷ்ணுமூர்த்திக்கு இடம்,

உயிர்களுக்கு அந்தகாரத்தை நீக்குவதில் காலைக் கதிரவன் போன்ற உருத்திர மூர்த்திக்கு இடம் அநாஹதம், விசுத்தி என்னும் ஆதாரத்தில் இருக்கும் கடவுள் மஹேசன்; பிரம விஷ்ணு உருத்திர மஹேசர் வழிபடும் சதாசிவ மூர்த்தி ஆஞ்ஞை என்னும் ஆதாரமாகிய இடத்தில் வாழ்வோனு வான்.

எனவே மகேச்சுவரனை முன்மூவரும், உருத்திரனை முன் இருவரும், விஷ்ணுவைப் பிரமனொருவனும் பணிவரென்பது சூசனை.

ஆறு தாரங்களை யோககுண்டலியுபநிஷத்து 'மூலா தாரம் ஸ்வாதிஷ்டாநம் மணிபூரம் அநாஹதம் விசுத்தம் ஆஜ்ஞா சக்ரம்' என்றும், ஹம்ஸோபநிஷத்து 'ஸ்வாதிஷ் டாநம், மணிபூரகம் அநாஹதம் விசுத்தௌ ஆஜ்ஞாம் ப்ரஹ்மரந்த்ரம்...' என்றும் கணக்கிடும். இங்கு மூலா தாரமும் பிரமரந்திரமுந் தள்ளி அம்மூர்த்திகளின் தாரதம் மியங்காட்ட மற்றவைமட்டில் எடுத்துக் கொள்ளப்பட்டன.

ஆறுதாரங்களுள் உச்சமான ஆஞ்ஞைத் தெய்வம் சதா சிவம் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (16)

**அயனென வரியே யென்ன வரனென மகேச னென்னச்**
**சயசதா சிவனே யென்னச் சாற்றுமவ் வைவர் மேலாய்**
**மயலறு போதா நந்த மயசிவ னென்னு மாறுஞ்**
**சுயவொளி யிறைவ னாகித் துலங்கலுந் துரியற் குண்டால்.**

(பொ—ரை) துரியன் என்று பேசப்படும் சிவபிரான் அயன் அரி அரன் மகேசன் சதாசிவன் என்று சொல்லப்படும் ஐவர்க்கும் மேலாய் மயக்கம் அறுக்கும் "போதாநந்தமய சிவன்" என்னும் ஆறுவது மூர்த்தியாய் விளங்குவான்.

'ப்ரஹ்மாணம் விஷ்ணும் மஹேசாந மீச்வரம்...... ஸதாசிவம் | அதவா தவ வக்ஷ்யாமி தாரணம் முநிபுங்கவ | புருஷே ஸர்வ சாஸ்தாரம் போதாநந்தமய சிவம்' என்ற ஸ்ரீ ஜாபாலதர்சநோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

மூன்றுமூர்த்திக் கணக்கு வரும்போது அவர்களுக்கதீதனுகிய நாலாவது மூர்த்தியாஞ் சிவபிரானே ஐந்து மூர்த்திக் கணக்கு வரும்போது அவர்களுக்கதீதனுகிய ஆருவது மூர்த்தியாயும் விளங்குவனென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (17)

**முத்தொழி லியற்றுந் தேவர் மூவருண் மூன்ருந் தேவே**
**சத்திய சைவ மாக்கத் தனிமுத லென்பர் தேரார்**
**அத்தொழி லிறைவ ரெல்லா மஞ்சலி சிரமேற் கொண்டு**
**வித்தகச் சதுர்த்த னுரே வினைகளை யென்றுஞ் செய்வர்.**

(பொ—ரை) படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களை முறையே பிரம, விஷ்ணு, உருத்திரர் இயற்றுவர். அவருள் மூன்ருமவராய் விளங்கும் உருத்திர மூர்த்தியே உண்மை நிறைந்த சைவசமயக் கடவுள் என அறியாதவர் கூறுவர். ஆனல் அம்மூவரும் நான்காமவராகிய ஞானமயரான சிவபிரானைச் சென்னியில் வைத்த கையினராய் வணங்கிக்கொண்டு அச்சிவபிரான் திருவுள்ளப்படி தத்தம் தொழில்களை எக்காலத்தும் செய்வர்.

'நம்மவரவரே, மூவரென்றே யெம்பிரானெடும் எண்ணி விண்ணுண்டு மண்மேல், தேவரென்றே யிறுமாந்தென்ன பாவநதிரிதவரே' என்ற திருவாசகம் இச்செய்யுட்குப் பிரமாணம்.

திரிமூர்த்திகளுட் சேர்ந்த உருத்திரன் சைவசமய முழுமுதற் கடவுளல்லர் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (18)

**அயனரி தன்னி லாவ னயன்றனி லரிதா னுவ**
**னயனரி யரனி லாவ ரரனரி யயரி லாவ**
**னியலிவை கற்ப பேத மீசுர மூர்த்தி தானே**
**யயனரி யரரைத் தன்பா லாக்கிமுன் னழிப்பான் பின்னர்.**

(பொ—ரை) பிரமன் விஷ்ணுமூர்த்தியிடம் தோன்றுவான், ஒடுங்குவான்; பிரமனிடத்திருந்து விஷ்ணுமூர்த்தி

தோன்றுவான்; பிரம விஷ்ணுக்கள் உருத்திரரிடம் தோன்றுவர், ஒடுங்குவர்; உருத்திரர், விஷ்ணு ஆகிய இருவரும் பிரமனிடந்தோன்றுவர். இப்படி நிகழுகிற இவையிரண்டும் அவாந்தரக் கற்பங்களில் உண்டாகும் மாறுபாடுகள். உண்மையில் ஈசுரமூர்த்தியாம் சிவபிரான் பிரம விஷ்ணு உருத்திரர்களை முதலில் தோற்றுவித்துச் சர்வசங்கார காலத்தில் ஒடுக்குவான்.

'ஏகோஹவை நாராயண ஆஸீந் நப்ரஹ்மா நேசாந:' என்ற மஹோபநிஷத்தும், 'நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே நாராயணாத்ருத்ரோ ஜாயதே', 'ருத்ரோ மகர்ஷி' | ஹிரண்யகர்பம் பச்யதி ஜாயமாநம்' என்ற நாராயணோப நிஷத்தும் 'லலாடாத க்ரோதஜோ ருத்ரோஜாயதே' என்ற ஸுபாலோபநிஷத்தும் 'டமாபிவிஷ்ணோர் ஜநகம்' என்ற சரபோபநிஷத்தும், 'நாராயணாத்திரண்யகர்போ ஜாயதே' என்ற திரிபாத்விபூதி மஹாநாராயணோபநிஷத்தும், 'ப்ரஹ்மயோநிம்' என்ற கைவல்யோபநிஷத்தும், 'ஈசம் புருஷம் ப்ரஹ்மயோநிம்' என்ற முண்டகோபநிஷத்தும், ருத்ரோ மகர்ஷி: | ஹிரண்யகர்பம் ஜநயாநம ஸபூர்வம்', 'ருத்ரோ மஹர்ஷி: | ஹிரண்ய கர்பம் பச்யதி ஜாயமாநம்;' 'ப்ரஹ்மயோநிம் யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், 'ஸர்வேச்வரம் சிவாச்யுதாம்போருஹ கார்ப பூருஹம்' என்ற நாரதபரிவ்ராஜகோபநிஷத்தும், 'சிவம்—ஹரிஹர ஹிரண்யகர்ப ஸ்ருஷ்டாரம்' என்ற பஸ்மஜாபாலோபநிஷத்தும், 'திரயஸ்தை காரணாத்மநோ | ஜாதாஸ் ஸாக்ஷாந் மஹேச்வராதித்யுபக்ரம்யஸ்பஷ்டமுக்தம் தபஸாதோஷயித்வாது பிதரம் பரமேச்வரம் | ப்ரஹ்ம நாராயணௌ பூர்வம் ருத்ரம் கல்பாந்தரே ஸ்ருஜத் | கல்பாந்தரே புநர்ப்ரஹ்மா ருத்ர விஷ்ணும் ஜகந்மய: விஷ்ணுச்ச பகவாந் தத்வத் ப்ரஹ்மாணமஸ்ருஜத் ப்ரபு: | நாராயணம் புநர்ப்ரஹ்மா ப்ரஹ்மாணம் ச புநர்பவ: | ஏவம் கல்பேஷு கல்பேஷு ப்ரஹ்ம விஷ்ணு மஹேச்வரா; | பரஸ்பரமாஜ்ஜாயந்தே பரஸ்

பரஜயைக்ஷிண: | தத்தத் கல்பாந்த மதிச்ருத்ய மஹர்ஷிபி: | ப்ரபவ: சத்த்யதே தேஷாம் பரஸ்பர ஸமுத்பவா இதி' என்ற வாயுஸம்ஹிதையும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

திரிமூர்த்திகளும் சிவபிரானிடமே ஒடுங்கித் தோன்றுவ ரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது (19)

**பார்தனே யாக்குந் தேவைப் பாற்கட லிறையைச் சூலஞ்**
**சேர்கர முதலே யீற்றிற் சிவபிரான் சங்க ரித்த**
**லார்கலி நீரை முற்று மாங்குறு வடவை யங்கி**
**யோர்கண மதனிற் சீறி யுண்பதற் கொப்பா மன்றே.**

(பொ—ரை) பிரம்ம, விஷ்ணு, உருத்திரர்களேச் சிவ பிரான் சங்கரித்தல் கடல்நீர் முழுவதையும் வடவா முகாக்கினி ஒரு க்ஷணப்பொழுதில் கோபித்துச் சீறிச் சுவறச் செய்வதற்கொப்பாகும்.

'ப்ரஹ்மா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஸர்வேவாபூத ஜாதய: | நாசமேவாநுதவந்தி ஸலிலாநீவ பாடபம்' என்ற மஹோப நிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

திரிமூர்த்திகளேயும் சிவபிரான் எளிதிற் சங்கரிப்பவ ரென்பது இச்செய்யுளால் நிச்சயிக்கப்பட்டது. (20)

**மேதகு மூன்று மூர்த்தி விருப்புடன் சதுர்த்தன் றன்னேப்**
**பாதம திறைஞ்சி நோற்றுப் பரித்திடப் பெற்று னன்று**
**ஞேதரு முருவும் பேரு முயர்மறை யதனு லந்தப்**
**பேதரை யபேத மாக்கிப் பேசலு மாங்காங் குண்டால்.**

(பொ—ரை) மேன்மையான மூன்றுவது மூர்த்தியாகிய உருத்திரர் ஆர்வத்துடன் நான்காவது மூர்த்தியாகிய சிவ பிரான் திருவடிப்போதினே வணங்கித் தவம்செய்து சிவ பிரானுக்குரிய ஓதுதற்கரிய வடிவு, நாமம் முதலிய தாங்கப் பெற்றூர். அதனுல் நான்கு வேதங்களும் மூன்றும் மூர்த்தி யையும் நான்காவது மூர்த்தியையும் ஒருவராக்கி மூன்றும் மூர்த்தியே பரமென்று ஒவ்வோரிடத்தில் பேசுதலுமுண்டு.

பின் சில செய்யுட்களில் மும்மூர்த்திப் பிரஸ்தாபமே வருகிறது. ஆங்கும் உருத்திரனுக்கே பரத்துவம் உளதாதல் கண்டு கொள்க.

'தச்சக்த்யாதிஷ்டிதச்சச்வத்தச்சிஹ்நைரபி சிஹ்நித: | தந்நாமாதத்ரூபஸ் ததிகார்ய, கரணக்ஷம: | தத்துல்ய வ்யவஹாரச்ச ததாஜ்ஞா பரிபாலக:' என்ற வாயு ஸம்ஹிதை இச்செய்யுட்குப் பிரமாணம்.

மூன்றும் மூர்த்தியாகிய உருத்திரர் சிவபிரானை நோக்கித் தவம் செய்து அவரிடமிருந்து சிவநாம ரூபாதிகளைப் பெற்றாரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (21)

கண்ணுத லுருவ மாகிக் காரண மனைத்து மோங்குங்
கண்ணர விந்த மாவோன் காரிய மனைத்து மாவான்
மண்ணுறு கிரியை யெல்லா மலரவ னுருவா மென்னில்
எண்ணுவ ரரனைச் சர்வ காரண னென்று மேலோர்.

(பொ—ரை) கண்ணுதற் கடவுள் உருவந்தாங்கிச் சர்வகாரணராவார்; திருமால் எல்லாக் காரிய வடிவும் ஆவார்: பிரமதேவர் உலகிற் பொருந்திய கிரியா வடிவினர். ஆதலால் சான்றோர் அரனாகிய சிவபிரானைச் சர்வ காரணர் என்று சொல்லுவர்.

'கார்யம் விஷ்ணு: க்ரியா ப்ரஹ்மா காரணம்து மஹேச்வர:' என்ற ருத்ர ஹ்ருதயோபநிஷத்தும் 'ஸர்வேசம்... சிவம் காரணம்' என்ற மண்டலப்ராஹ்மணோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

உருத்திரரே சர்வத்துக்குங் காரண சொரூபரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (22)

நாடரு நாடி மூன்று ஞாண னிடையின் றெய்வம்
பீடுறு கமல வாசன் பிங்கலைத் தெய்வ மாவன்
வீடெனு மின்பைச் சீவர் மேவிட முதுகென் பூடே
யோடிடு சுழுனைத் தேவா யுறைபவன் சிவனே யாவான்.

(பொ—ரை) ஆராய்தற்கரிய நாடிமூன்றில் இடைகலை நாடிக்குரியவர் நாராயணர்; பிங்கலை நாடித்தெய்வம் பிரம்மதேவன்; மோக்ஷமென்னும் அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டை உயிர்கள் அடைய முதுகு எலும்புக்கு நடுவில் செல்லும் சுழுனை நாடித் தெய்வமாய் வாழ்பவன் சிவபிரானேயாவான்.

'இடாவாமே ஸ்திதா பாகே தக்ஷிணே பிங்களா ஸ்திதா || ஸுஷும்நா மத்ய தேசே' என்ற யோகசூடாமணி உபநிஷத்தும், 'ஸுஷும்நாது பரேலீநா விரஜா ப்ரஹ்ம ரூபிணி | இடாதிஷ்டதி வாமேந பிங்களா தக்ஷிணே நசே' என்ற க்ஷுரிகோபநிஷத்தும், 'ஸுஷும்நாயா:சிவோ தேவ இடாயா தேவதா ஹரி: பிங்களா விரிஞ்சி:' என்ற ஸ்ரீஜாபால தர்சனோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

மோக்ஷ நாடிக்குத் தெய்வம் உருத்திர னென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (23)

**காலொரு மூன்றி னுள்ளே கண்ணுத லிரேசி யாவான்**
**மாலவ னவன் கும்பி மலரவன் பூரத் தாவான்**
**சாலவி ரேச மொன்றே தளர்த்திடு முடலை யென்னின்**
**ஆலம துண்டோ னன்றி யருந்துணை யோகர்க் குண்டோ?**

(பொ—ரை) இரேசகம், கும்பகம், பூரகம் எனப்படும் மூன்று காற்றினுள் கண்ணுதற் கடவுள் இரேசகத் தெய்வம். கும்பகத் தெய்வம் திருமால்; பூரகத் தெய்வம் பிரம்ம தேவன். இரேசகமொன்றே யோகிகளுக்கு உடலை மிகவும் தளர்த்தும் என்பது உண்மையாதலால் சிவபிரானை அன்றி யோகிகளுக்குத் துணையாவார் எவருமிலர்.

'ப்ரஹ்மா பூரக இத்யுக்தோ விஷ்ணு: கும்பக உச்யதே | ரேசோ ருத்ர இதிப்ரோக்த: ப்ராணயாமஸ்ய தேவதா' என்ற தியாநபிந்துபநிஷத்தும், 'தவமிக முயலும் போது தன்னுயிர்ப் புமிழ்வ தன்றிப், பவனெனு முனைவுங் கொள்வான்' என்ற கோயிற் புராணமும், 'உணவு உடம்பை

வாட்டுந் தவத்திற்கு விலக்கு' என்ற அதனுரைக் குறிப்பும், 'ஸதாசிவம் ..யோகித்யேயம்' என்ற நாரத பரிவ்ராஜகோப நிஷத்தும் 'விருபாக்ஷம்...த்யாயேத் யோகீச்வரேச்வரம்' என்ற ஸ்ரீ ஜாபால தர்சனோபநிஷத்தும், 'ஜீவந்முக்த: சிவ யோக நித்ராச' என்ற நிர்வாணோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

யோகிகளுக்குச் சரீரத்தைத் தளர்த்த உதவும் ரேசக வாயுவின் தெய்வம் உருத்திரனே என்பது இச்செய்யுளால் நிச்சயிக்கப்பட்டது. (24)

**பிறையணி பரமன்றனே பிராமண தெய்வ மாவான்**
**நிறைதிரு வுடைய வேந்தாய் நிலவுவன் சங்க மேந்தி**
**துறைவல வணிகன் தேவன் சூத்திரன் மகவா னென்னிற்**
**பிறையணி பரனை யன்றிப் பிராமணர் வணங்க லாமோ?**

(பொ—ரை) சிவபிரானே பிராமண தெய்வம்; திருமால் க்ஷத்ரிய தெய்வம், வைசிய தெய்வம் பிரம்ம தேவன்; இந்திரன் சூத்திர தெய்வம். உண்மை இவ்வாறிருக்க பிராமணர் சிவபிரானை விட்டு வேறொரு தெய்வத்தை வணங்கலாமோ? கூடாது.

'த்வம் தேவேஷு ப்ராஹ்மணோ அஸி அஹம் மநுஷ்யேஷு. ப்ராஹ்மணோவை ப்ராஹ்மணமுபதாவத்யுபத்வதாவாமி' என்ற ஸாமவேத சதபத ப்ராஹ்மணமும், 'விப்ரா விப்ரஸ்ய' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், ப்ரஹ்மணோதிபதி ..சிவோம்' என்ற நாராயணோபநிஷத்தும், 'விப்ராணும் தைவம் சம்பு: க்ஷத்ரியாணாம்து மாதவ: | வைச்யாநாந்து பவேத் ப்ரஹ்மா சூத்ராணும்தேவேந்த்ர:' என்ற மநுஸ்மிருதியும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

உருத்திரனே பிராமண தெய்வம் என்பது இச்செய்யுளால் நிச்சயிக்கப்ட்டது. (25)

**ஒருதிரு மருவு மார்பற் குறுகுறி யோனி யாகும்**
**உருமிகு பீசந் தானே யுருத்திரன் குறியா மன்னோர்**

**இருவரு மருவிப் பாரை யீனுவ ரென்னி னந்தப்**
**பெருவிடை யுயர்ப்போ னன்றிப் பிதாவெவ னுலகுக் கெல்லாம்**

(பொ—ரை) மஹாவிஷ்ணுமூர்த்திக்கு அடையாளம் பசம்; உருத்திரமூர்த்திக்கு லிங்கம்; அரிஅரர் மருவி இவ்வுலகைத் தருவர். அப்படியாயின் ரிஷபக் கொடியை உடையோனாகிய சிவபிரானே இவ்வுலகிற்குப் பிதா அல்லவோ? பிதாவை மறப்பது பேதைமை.

'ருத்ராத் ப்ரவர்ததே பீஜம் பீஜயோநிர் ஜநார்தந:' என்ற ருத்ர ஹ்ருதயோபநிஷத்தும், 'பிதரம் மஹேசம்' என்ற சரபோபநிஷத்தும், 'இதம் பித்ரே ருத்ரஸ்ய வர்தநம்'என்ற ருக் மந்திரமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

உருத்திரனே சர்வலோகத்திற்கும் பிதா வென்பது இச்செய்யுளால் நிச்சயிக்கப்பட்டது. (26)

**உலகெனு மரத்தி னுச்சி யுலகினை யளந்தோ னவன்**
**உலகெனு மரத்தின் மைய முந்தியிற் பிறந்தோ னவன்**
**உலகெனு மரத்தின் வேர்க ளுருத்திர னவ னென்னின்**
**உலகினை வாழ வைப்போ னுருத்திர னன்றி வேறார்?**

(பொ—ரை) உலகமாகிய மரத்தின் உச்சி திருமால்; அம்மரத்தின் மையம் பிரம்மதேவன்; அம்மரத்தின் வேர்கள் உருத்திரமூர்த்தி என்பது வேத உண்மை. அப்படியாயின் உலகினை வாழவைப்போர் உருத்திர மூர்த்தியையன்றி வேறு யாருளார்? எவருமில்லை.

'அஸ்ய த்ரைலோக்ய வ்ருக்ஷஸ்ய பூமௌவிடப சாகிந: |
அக்ரம் மத்யம் ததாமூலம் விஷ்ணு ப்ரஹ்மா மஹேச்வரா:'
என்ற ருத்ரஹ்ருதயோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

உருத்திரமூர்த்தியே எல்லாவுலகிற்கும் ஆதிமூலம் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (27)

**போதின னுருவ மாகிப் பொருந்துநான் மறையின் ஞானஞ்**
**சீதர னுருவ மாகித் திரிவித வுலகந் தங்கும்**
**தீதகல் தருமம் ஈசன் திவ்விய வுருவா மந்தப்**
**போதமு முலகுங் கொண்டு புரிவதத் தருமங் கண்டாய்.**

(பொ—ரை) நான்கு வேதங்களின் ஞானம் பிரமன் வடிவாகிப் பொருந்தும்; மூவுலகும் விஷ்ணு மூர்த்தியின் வடிவமாகித் தங்கும். தீமையை அகலச் செய்யும் தருமம் ஈசனது திவ்ய வடிவமாகும். அந்த நான்கு வேதங்களின் ஞானத்தையும் உலகையும் சாதனமாகக் கொண்டு செய்யத் தக்கது அச்சிவசொரூப தருமமாகும்.

'தர்மோருத்ரோ ஜகத் விஷ்ணு: ஸர்வஜ்ஞாநம் பிதாமஹ:' என்ற ருத்ரஹ்ருதயோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

உருத்திரனே தர்மசொரூபி என்பது இச்செய்யுளால் நிச்சயிக்கப்பட்டது. (28)

**சங்கரன் பரம வான்மாச் சார்ங்கம தேந்தி யான்மாப்**
**பங்கயன் அந்த ரான்மா வெனமறை பகர்வ தோரார்**
**இங்கொரு பரமான் மாவா யின்னெரு தேவை யேத்திச்**
**சங்கரன் றனக்குத் தோடஞ் சாற்றிவெந் நரகி லாழ்வார்.**

(பொ—ரை) 'சங்கரன் பரமாத்மா; விஷ்ணுமூர்த்தி ஆத்மா; பிரமதேவன் அந்தராத்மா'—என வேதங் கூறுவதை ஆராயாதவராய்ச் சிலர் இங்கே இனனுமொரு பரமாத்மாவாய் வேறேதேனும் ஒருதெய்வத்தை வணங்கிச் சங்கரர்க்கு நிந்தை கூறிக் கொடிய நரகில் விழுந்து அழுந்துவர்.

'ஆத்மாநம் பரமாத்மாநமந்தராத்மாநமேவச | ஜ்ஞாத்வாத்ரிவித மாத்மாநம் பரமாத்மாந மாச்ரயேத் | அந்தராத்மா பவேத் ப்ரஹ்மா பரமாத்மா மஹேச்வர: | ஸர்வேஷா மேவ பூதாநாம் விஷ்ணு ராத்மா ஸநாதந:'

என்ற ருத்ரஹ்ருதயோபநிஷத்தும், 'யாஸ்ய ப்ரதமா ரேகா ஸ்வாத்மா ப்ரஜாபதிர் தேவோ தேவதேதி | யாஸ்யாத்விதியாரேகா அந்தராத்மா விஷ்ணுர் தேவோ தேவதேதி | யாஸ்ய த்ரிதியாரேகா பரமாத்மா மஹா தேவோ தேவ தேதி ' என்ற ஜாபால்யுபநிஷத்தும் இச் செய்யுட்குப் பிரமாணங்கள். ஆத்ம நிலையும் அந்தராத்ம நிலையும் பிரம விஷ்ணுக்களுக்கிடையில் மாறிக் கொள் வதையும் பரமாத்ம நிலைமாத்திரம் சிவபிரானை விட்டு விலகாமையையும் அவ்வுபநிஷத்துக்களிற் காண்க.

உருத்திரனே பரமாத்மா என்பது இச்செய்யுளால் நிச்சயிக்கப்பட்டது. (29)

**அப்பணி வேணித் தேவுக் கரியினைப் பிரமன் றன்னை**
**யொப்புட னுயர்ச்சி சொல்லேல் உம்பரிற் பிரமன் மேலோன்**
**திப்பிய விதியின் மேலோன் திருமகள் கணவ னம்மாற்**
**கொப்புட னுயர்ச்சி யில்லா வுருத்திரன் மேலோன் ருனே.**

(பொ—ரை) ஸ்ரீ சிவபிரானுக்கு இணையாகவோ அதிக மாகவோ விஷ்ணு மூர்த்தியையோ அன்றிப் பிரமதேவர் முதலிய எவரையுமோ கூறவேண்டா. தேவர்களில் பிரம்ம தேவன் மேலானவன்; அப்பிரமற்கு மேலானவன் திருமகள் கணவனும் விஷ்ணுமூர்த்தி; உருத்திரமூர்த்தி அவ்விஷ்ணு மூர்த்திக்கு மேலோன். அவ்வுருத்திரற்கு ஒப்பாகவோ உயர்ச்சியாகவோ வேறொருவரில்லை.

'பராத் பரதரம் ப்ரஹ்மா தத்பராத் பரதோ ஹரி: | தத்பராத் பரதோ ஹீச: தஸ்மாத் துல்யோதிகோ நஹி' என்ற சரபோபநிஷத்தும் 'தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் ந தத் ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே' என்ற சுவேதாசுவதர உபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

உருத்திரனே பரம்பொருளென்பதை இச்செய்யுள் நிர்ணயஞ் செய்தது.

மருத்திகழ் அலரோன் றன்னை வாலிய சோற தாக்கி
திருத்திகழ் உரவோன் றன்னைத் திப்பிய ரசமே யாக்கி
மிருத்துவை யூற வைத்த மெல்லிய காய்தா ணக்கி
உருத்திரன் உண்பா னெல்லா வுலகையு மொடுக்கு ஞான்றே.

(பொ—ரை) உருத்திரமூர்த்தி எல்லா உலகங்களையும் சங்கரிக்கும் பொழுது பிரமதேவரை வெண்மையான சோறுக்கி, விஷ்ணுமூர்த்தியை இனிய ரசமாக்கி, யமனை ஊறுகாயாக்கி உண்பார். அப்படியாயின் உரு திரமூர்த்தி யினும் வலிய தேவர் வேறொருவர் உளரோ? இல்லை.

'யஸ்ய ப்ரஹ்மாச க்ஷத்ரஞ் சோபபவத வோதந: ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம் என்ற கடோபநிஷத்தும், 'த்ரயம்பகே காநுஷ்டுபேந | ம்ருத்யுஞ்ஜயம் தர்சயதி' என்ற திரிபுரதாபிநியுபநிஷத்தும், 'ப்ரஹ்மாந்நந்து ரஸோ ஹரிஸ்து பகவாந் போக்தா மஹேச:' என்ற ஸித்தாந்த ஸாராவளியும், 'அந்நம் ப்ரஹ்மா ரஸோ விஷ்ணுர்போக் தாச் சைவ மஹேச்வர:' என்ற மந்திரமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

ரசங்கலந்த சோற்றுக்கு ஊறுகாய் தொட்டுக்கொள் ளும் வழக்கம் செங்கற்பட்டு மாவட்டத்தில் இப்போதும் உண்டு.

உருத்திரனே பிரம்ம விஷ்ணு முதலிய யாவரையும் சங்கரிப்பான் என்பது இச்செய்யுளால் பெறப்பட்டது (31)

**பதிப்பாசிரியர் குறிப்பு:** இந்நூலின் ஏனைய பாடல்கள் அடுத்த ஆண்டுமலர்களில் தொடர்ந்து பிரசுரிக்கப்படும்.



உ

சிவமயம்

# மணிமேகலையில் சைவம்

சி. சு. மணி, பி. ஏ., பாளையங்கோட்டை

தமிழ்க் காப்பியங்களில் மிகச்சிறந்ததான சிலப்பதிகாரத்தை ஒட்டித் தோன்றியது மணிமேகலை. 'மணிமேகலை மேல் உரைப் பொருள் முற்றிய சிலப்பதிகாரம்' என்ற சிலப்பதிகார நூற்கட்டுரையின் வரிகளே இந்தக் கருத்தை வலியுறுத்தும். இலக்கிய அறிஞர்களும் இரண்டு நூற்களையும் சேர்த்து 'இரட்டைக் காப்பியங்கள்' என்று குறிப்பிடும் வழக்கும் உண்டு. .சிலப்பதிகாரத்தில் காணக் கிடைக்கும் சொற்றொடர்கள் மட்டுமன்றி உவமைகளும், வழக்காறுகளும் அவ்வாறே மணிமேகலையிலும் ஆளப்பட்டிருப்பது இவற்றிடையே உள்ள நெருங்கிய தொடர்பை உறுதிப் படுத்தும்.

சங்க இலக்கியங்களில் மிகப் பெரும்பாலானவை தனிப் பாடல்கள். சுருங்கிய அளவிலே உடையவை. பத்துப் பாட்டு நூற்கள் மட்டிலுமே நீண்ட அமைப்பினைக் கொண்டவை. சங்க மருவிய காலத்தில் தோன்றியனவாகக் கருதப்படும் சிலம்பும், மணிமேகலையுமே தமிழில் தோன்றிய தொடர்நிலைச் செய்யுள்களுள் காலத்தால் முற்பட்டவை என்று கொள்ளுதற்கு இடமுண்டு.

சிலப்பதிகாரம் தனது இனிய கதைப் போக்கினாலும், காப்பியப் பண்புகளினாலும் கவிதைச் சிறப்பினாலும் மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்குகிறது. மணிமேகலை அத்தகைய புகழையும், பெருவழக்கையும் பெறவில்லை. ஆனாலும் சில இலக்கிய அன்பர்கள் சிலப்பதி

காரத்தினும் மணிமேகலையே ஊன்றிப் பயில்வதற்குரிய நூல் என்ற கருத்தினை வலியுறுத்தி வருகிறார்கள்.

மணிமேகலை புத்த சமயக் கருத்துக்களை வலியுறுத்துவதற்கும், விரித்துரைப்பதற்கும் எழுந்த நூல். ஆனால், புத்த சமயக் கருத்துக்களை மட்டும் கூறி அமைந்து விடாமல் அந்தக் காலத்தில் வழக்கிலிருந்த சமயக் கொள்கைகள் பலவற்றை அடையாளம் காட்டுவதாகவும் அது விளங்குகிறது.

தத்துவக் கருத்துகளைத் தமிழில் முதன் முதலாக வகைப்படுத்திக் காட்டிய பெருமை மணிமேகலைக்கு உண்டு என்று கூறுவது மிகையாகாது. மணிமேகலை, புகார் நகரினின்றும் நீங்கி வஞ்சி மாநகருக்கு வருகிறாள். அங்குக் கண்ணகித் தெய்வம் தோன்றித் தன் வரலாறு உரைக்கக் கேட்கிறாள். "பல்வேறு சமயத்தவர் கூறும் அறநெறி யாவையும் கேட்டுத் தெளிந்து புத்த பகவானின் பிடக நெறியில் வழுவாது நின்று அறம் பேணுவாயாக!" என்று கண்ணகி, மணிமேகலைக்குக் கட்டளையிடுகிறாள். மணிமேகலை இளம் பருவத்து அழகிய பெண்ணாதலால் சமயக் கணக்கர் அவளை எள்ளி, அவளோடு உரையாடுதலைத் தவிர்த்தல் கூடும். ஆதலால், அவள் வேற்றுருக் கொண்டு அவர்களை அடைதல் வேண்டும் என்றும் அறிவுறுத்துகிறாள்.

அவ்வாறே, மணிமேகலையும் தனக்கு மணிமேகலா தெய்வம் அளித்த மந்திரத்தின் வலிமையினால் ஒரு மாதவன் வடிவத்தை அடைந்து, வஞ்சி நகரில் வாழ்ந்த சமயக் கணக்கர்களை அடைந்து அவ்வவர் சமயக் கருத்துகளை அவரவர் கூறக் கேட்கின்றனள்.

மணிமேகலை நூலில் இருபத்தேழாவது காதையாக அமைந்துள்ள, சமயக் கணக்கர் தம் திறங்கேட்ட காதையிலே இவ்வாறு பல்வேறு சமயங்களின் கொள்கைகளும் எடுத்தியம்பப்படுகின்றன. இந்தப் பகுதியில் எடுத்துரைக்

கப்பட்ட அளவை வாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவ வாதி, வேதவாதி, ஆசீவக வாதி, நிகண்டவாதி, சாங்கிய வாதி, வைசேடிக வாதி, பூதவாதி, ஆகியோரின் கருத்துக் கள், ஆசிரியர் சீத்தலைச் சாத்தனாரின் காலத்திலிருந்த சமயக் கருத்துக்களை ஓரளவு அறிந்து கொள்ள உதவுகின்றன.

நூலின் நோக்கம் புத்தசமயக் கருத்துகளை வலியுறுத்து வதுதான் எனினும், பிற கருத்துகளையும் அறிந்து தம் நூலில் பொதிந்து வைத்த ஆசிரியர் நம் பாராட்டுக்கு உரியவரே. பொதுவாக பரபக்கம் கூறிப் பின் அதனை அடைவே மறுத்துச் சுபக்கம் கூறித் தன் கோள் நிறுவும் அமைப்பு இந்நூலில் பின்பற்றப்படவில்லை. பரபக்கம் கூறும் பகுதி சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் அமைந் துள்ளது. அதனையடுத்து ஒரு காதை கதைப் போக்கில் நடந்து முடிகிறது. அதற்கும் பின்னர் வருகிற இருபத் தொன்பதாவது காதையாகிய ''தவத்திறம் பூண்டு தருமங் கேட்ட காதை''யில் தான் புத்த சமயக் கருத்துக்கள் தொகுத்துரைக்கப் படுகின்றன. ஆசிரியர் இவ்வாறு அமைத்துள்ளதன் நோக்கம் நமக்கு நன்கு புலனாகின்றது. காப்பிய ஓட்டத்தில் தடையேதும் இன்றித் தம் கருத்தை வலியுறுத்த இதை ஓர் உத்தியாகக் கையாளுகிறார். முதன் முதலாக எடுத்துரைக்கப் படுகின்றது, அளவை வாதியின் கொள்கை. இந்தப் பகுதி ஏறத்தாழ எண்பத்தைந்து வரிகளைக் கொண்டதாக அமைகிறது.

இதனை யடுத்து, சைவ வாதியின் சமயக் கொள்கை விளக்கப் படுகின்றது.

''.......... இறைவன் ஈசனென
நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசுநின் தெய்வம் எப்படித் தென்ன
இருசுட ரோடுஇய மானன் ஐம்பூதமென்று
எட்டு வகையும் உயிரும் யாக்கையுமாய்க்
கட்டி நிற்போனும் கலை உருவினோனும்

படைத்து, விளையாடும் பண்பி னேனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
தன்னில் வேறு தானேன்று இலோனும்
அன்னேன் இறைவ னாகும்என்று உரைத்தனன்''

என்ற பகுதி சைவ வாதியின் சமயக் கொள்கையை விளக்குவதாகும்.

'முப்பொருளின் ஈரியல்பும் முறை திறம்பா வகை' கூறுவதே சைவ சித்தாந்தம் என்பர் பெரியோர். 'மணிமேகலை'யில் முப்பொருள்களுள் ஒன்றான இறைவனைப் பற்றி மட்டுமே கூறப்பட்டுள்ளது. மற்றை இரு பொருள்களைப் பற்றிய விளக்கம் இங்கே இல்லை. தலைமை பற்றிப் பதிப் பொருள் ஒன்றை மட்டும் கூறினர் என்று இதற்கு அமைதி கூறலாம். இவ்வளவு சுருக்கிக் கூறுமிடத்தும் சைவசமயத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் யாவற்றையும் முரண் இன்றிக் கூறுவது மகிழ்தற்குரியது. ஐம்பூதங்களும், இரு சுடரும் இயமானனும் இறைவனுக்கு உபசாரத் திருமேனியாகக் கூறப்படுவதை இந்தப் பகுதி தெரிவிக்கிறது. 'உயிரும் யாக்கையுமாய்' என்ற செய்யுட் பகுதியை, 'யாக்கையும் உயிருமாய்' என்று மாற்றிப்பொருள் கொள்ளுதல் வேண்டும். செய்யுளாதலின் ஆசிரியர் இவ்வாறு முறை பிறழ வைத்தார். இந்தப் பகுதி அப்பரடிகளின் ''இரு நிலனாய்த் தீயாகி'' என்று தொடங்கும் திருத்தாண்டகத்தோடு ஒப்பு நோக்கி இன்புறற் பாலது. அட்ட மூர்த்தம் பற்றிப் பேசும் திருமுறைப் பகுதிகளை எதிரொலிப்பது போல் இது அமைந்துள்ளது.

''படைத்து விளையாடும் பண்பினேன்'' ''துடைத்துத் துயர் தீர் தோற்றத்தோன்'' என்ற இரு சொற்றொடர்களால் இறைவனது ஐந்தொழில்களும் தொகுத்து உரைக்கப் படுகின்றன. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற இறைவனது ஐந்தொழில்களையும், படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்றாகச்

சொல்வது பெரும்பான்மை வழக்கு. இவற்றையும் தொகுத்து இரண்டாக்கிக் கூறும் மரபும் உண்டு. "பந்தம் வீடு தரும் பரமன்" என்று சேக்கிழார் பெருமானும், "பந்தமுமாய் வீடுமாயினர்க்கு" என்று மாணிக்கவாசகப் பெருந்தகையும் கூறுவர். கட்டிற் பிணிப்பித்தும், முற்றும் விடுவித்தும் உயிர்களுக்கு அருள் புரிவது இறைவனது கருணைத்திறம். இவ்வாறு செய்வது வரம்பில்லா ஆற்றல் உடைய அவனுக்கு அலகிலா விளையாட்டு, அந்த விளையாட்டு உலகிலுள்ள உயிர்கள் மேல் அவன் கொண்ட கருணையினால் உயிர்களின் பொருட்டே நிகழ்கிறது என்ற சைவ சித்தாந்த உண்மையை உட்கொண்டே இந்த இரண்டு வரிகளும் எழுதப் பெற்றுள்ளன.

'தன்னில் வேறு தானொன்று இல்லோன்' என்ற வரியில் சிவபெருமான் ஒப்புடையன் அல்லன் ஓர் உவமன் இல்லி என்ற கருத்து எடுத்துரைக்கப் படுகிறது. "சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்", "மற்றுரும் தன்னொப்பார் இல்லாதான்" என்ற அப்பரடிகளின் அறை கூவல் இவ்வாறு மணிமேகலையில் இடம் பெறுகிறது என்றால் அது மிகையன்று.

சைவத்தைப் பற்றிய விரிந்தகருத்துகள் எடுத்துரைக்கப் படாவிடினும் சுருங்கிய சொற்களால் சைவத்தின் கண்ணனைய அடிப்படைகள் மணிமேகலையில் கூறப்பட்டுள்ளன. புத்த சமயத்தைச் சார்ந்த ஆசிரியர் சீத்தலைச் சாத்தனர் சமயக் காழ்ப்பின்றிச் சைவத்தின் கொள்கைகளை வரைந்துள்ளார். பல்வேறு சமயங்களைத் தொகுத்துக் காட்டும் 'சர்வ தரிசன சங்கிரகம்' போன்ற ஒரு காதையைத் தம் நூலில் முதன் முதலில் தமிழில் வழங்கிய பெருமை சீத்தலைச் சாத்தனரைச் சேரும். பண்டைப் பழங்காலந் தொட்டு மாறுபாடில்லாத உயர்ந்த கொள்கைகளைக் கொண்டது சைவ சமயம் என்ற உண்மையும் இந்நூலிலிருந்து புலனாகிறது.

சிவம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அந்தணர் தம் சிந்தையான்

ந. சுப்பிரமணிய சிவாசாரியார்
தலைவர், அறுபத்திமூவர் குருபூசைக் குழு
சங்கரன்கோவில்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது — பொதுமறை.

மோக்ஷ சாம்ராஜ்யம் பெறவும், பிறவிப்பிணி தீரவும் துரிய மூர்த்தியாகிய சிவபெருமானே முக்தி தாதா. (முக்தி அளிப்பவன்)

ஈண்டு அந்தணன் என்பான் அந்தத்தை அண்ணினவன் என்பது பொருள். அவனே பிராம்மணன் என்றும் சொல்ல லாம்.

தேவர்களில் உருத்திரனே பிராம்மணன். விஷ்ணு க்ஷத்திரியன். இந்திரன் முதலிய மற்றைய தேவர்கள் மற்ற வருணங்களைச் சார்ந்தவர்கள். 'ப்ராஹ்மணோ பகவான் ருத்ர:க்ஷத்ரியோ விஷ்ணுருச்யதே—ப்ரஹ்மா வைஸ்ய இதி ப்ரோக்தோ வ்ருஷலஸ்து புரந்தர: ॥ ஸங்கராஸ் ஸர்வ தேவஸ்ஸ' என்று பராசர புராணம் கூறிற்று. உமையொரு பாகனாகிய சிவபெருமானே பிரபஞ்சங்களுக்கெல்லாம் பதி. விசேஷமாக அந்தணாளர்களுக்குப் பதியாகலின் அந்தணரெனச் சிறப்பிக்கப் பட்டனர்.

''ப்ரஹ்மாதிபதி: ப்ரஹ்மணோதிபதி:'' வேதத்துக்கு அதிபதி, பிரமனுக்கு அதிபதி என்று தைத்ரீய நாராயணோப

நிடதம் சிவபிரானைப் புகழ்ந்தது. மேலும் 'த்வம் தேவேஷு ப்ராஹ்மணோஸி அஹம் மனுஷ்யேஷு ப்ராஹ்மணோஹி ப்ராஹ்மணமுபதாவதி உபத்வா தவாவாமி த்வயா ப்ரஸூத இதம்கர்ம கரிஷ்யாமி' என்று சாமவேத சதபத பிராஹ்மணம் நீ தேவர்களுள் பிராம்மணன். நான் மனிதருள் பிராம்மணன். பிராம்மணன் பிராம்மணனை யன்றோ வழிபடுவான் ஆதலால் உன்னை யான் வழி படுவேன் என்று ஈசனுக்கே பிரஹ்மண்யம் கூறியது. இன்னும் 'விப்ரஸ்ய ப்ருஹத:' — பெரிய பிராம்மணன் பரமேசுவரன் என்று கூறி உண்மை நிறுவியது.

ஸகலலோக நாயகனாகிய மாதொருபாகனின் திவ்ய நாமங்களில் ஒன்றாகிய பர்க்கன் என்னும் பெயரும் அளவில் லாப்பெருமை பெற்ற ஸ்ரீ காயத்ரி மஹா மந்திரத்தில் பிராம்மணத்துவ காரணமாய் நிற்றலின் அம்மந்திரத்தை பிராம்மணர்கள் ஜபிப்பார்கள். இதனை ஈசாந:......ப்ரஹ்ம ணோதிபதி......ஸதாசிவோம் என்னும் நாராயணத்தாலும் "விப்ராணும் தைவதம் சம்பும்" என்னும் மனுஸ்மிருதியும் உறுதி செய்தது.

ஆகவே அந்தணர்கள் யாவருக்கும் குலதேவதை அப்புலி யணிந்த எம்பிரானே! (சிவபெருமானே). அதனாலன்றோ சமயாச்சாரியாருள் ஒருவராகிய ஸ்ரீ வாகீசப் பெருந்தகை யும் "அந்தணர் தம் சிந்தையானை' — என்று திருவாய் மலர்ந்து அருளினார்கள். ஆகவே அந்தணர் பெருமக்கள் புறத்தில் மட்டும் சிவவேடந்தாங்கி உள்ளுக்குள் வைணவர் களாக இருக்காமல், உள்ளும் புறமும் ஒருமித்துச் சிவபக்தி செய்து சிவநாமத்தையே ஜபித்து, சிவபெருமானையே திருக் கோயில்களில் சென்று தரிசித்து, வீட்டிலும் சிவ பூஜையே செய்து, ஸதா சிவத்தியான பரர்களாகவே இருந்து, சிவானந்த போகத்தை நுகருமாறு பணிவுடன் வேண்டிக் கொள்கின்றேன்.

சிவம்

உ

சிவமயம்

# ஷேக்ஸ்பியரும் சைவ சித்தாந்தமும்

சேக்கிழார் அடிப்பொடி
T. N. ராமச்சந்திரன், B.Com., B.L.,
அட்வொகேட், தஞ்சாவூர்

**சைவ சித்தாந்தம் வல்ல சகமுணர் சான்றோராகும்**
**மெய்வளர் சுவீடன் பார்க்கும் மேதகு ஹாய்சிங்டன்னும்**
**பொய்தபு புலமை போப்பும் போற்றுகௌதி ஷோமாரசும்**
**மையறு மோக்ஷமுலர் மாக்நிகோல் பார்னெட் மார்ஷல்**

**என்றசர் ஜானும் ஏன்ற குட்விலும் மில்டனுரும்**
**ஒன்றிய சகப்பிரி யன்னும் ஓங்குமேல் நாட்டாரோடு**
**நன்றறி புலமை சான்ற நம்பியாம் நல்லசாமி**
**துன்றிய ரமண சாஸ்திரியும் துதி எனது ஏற்பாராக.**

சொற்களின் மர்மங்களை உணர்ந்த மஹான்கள் உதிர்க்கின்ற சொற்கள் வஜ்ர சரீரம் உடையன. இவற்றை சாதாரண வ்யாக்யானங்கள் ஊடுருவ மாட்டா. இவற்றின் பொருளை அனுபூதிமான்கள் மட்டுமே உணர்வர். அங்ஙனம் அனுபூதிமான்களால் உணர்ந்து இவை உரைக்கப்பட்டாலும், உரைக்கபட்டனவற்றையும் உணர்வதற்கு அனுபூதி தேவைப்படும். அனுபூதி இன்றி, அறிவுத் திறம் மட்டுமே கொண்டு அச்சொற்கள்மீது படை எடுத்தல் பயன் பயவாத வெற்றுச் செயலாகி ஒழியும். பெற்ற அறிவே இடையூறாக மூண்டு குறுக்குச் சுவராகப் படர்ந்துவிடும்.

கற்றபின் அதற்குத் தக நிற்றலே நெறியாகும். இதைத் தான் மகாகவி பாரதியார், 'யான் கற்ற கல்வி எல்லாம்

பலிக்கச் செய்தான்" என்ற வாசகத்தில் சூசிப்பிக்கின்றார். பலித்த நிலையில் கற்பனவும் இனி அமையும்.

ஆணவமலம் சிவணிய ஆன்ம நிலையை, பொற்காசுப் புலவர் இப்படி வருணிக்கின்றார்;

"........செய்கை ஒன்றறியேன்
சிறுமை மடமை சினம் பொய் காமம்
விலங்குகள் வாழும் வேட்டைக் களமாய்
வெறியாட்டயரும் வேதனையல்லால்
உலைத்திடும் நெஞ்சத்து ஒளி சிறிதேனும்
ஒட்டுவதுண்டோ? உற்றதிங் கிருளே!"

இவ்விருளை அருள்தான் கடிய முடியும். அருளைப் பெற்றால்தான் "செற்றில் என்? செஞ்சாந்து அணியில் என்?" என்று பேச முடியும். இச்சமநிலை பெற்றார் அரியதில் அரியர். அவ்வரியாரே வழிபடத் தக்கவர். ஆகவே ஷேக்ஸ்பியர் கூறுகிறார்.

"A man that fortune's buffets and rewards
Hath ta'en with equal thanks; blest are those
Whose blood and judgment are so well commingled
That they are not a pipe for Fortune's finger
To sound what stop she please. Give me that man
That is not passion's slave, and I will wear him
In my heart's core, ay, in my heart of hearts."

விதி தந்த தாக்குதல்கள், மற்றவ்விதியே தந்த வெகுமதிகள் (buffets and rewards of Fortune அனைத்துமே சரி நிகர் சமானமான உள்ளமொடு hath taken with equal thanks கொள்ளுமவன் இருக்குமிடம் யாதோ?

வேட்டபடி விதி ஊதும் குழலாக மாறாமல் (a pipe for Fortune's finger), உணர்வும் அறிவும் கலந்த அத்துவிதக் கலவையாய் (whose blood and judgement are so well

commingled), திகழுமவன் இருக்கும் இடம் யாதோ? ராக விராகங்களுக்குக் கொத்தடிமையாகாமல் (not passion's slave) ஒளிரும் ஒரு புருடன் இருக்குமிடம் யாதோ?

அன்னனைக் காட்டுதி. (show me that man) என் இதயம் அவன் சிங்காதனமாம் என் உள்ளார்ந்த ஆனந்தப் பொந்திடை வைத்தவனைப்பேணுவன். I will wear him in my heart's core, ay, in my heart of hearts.

"குலக்குமரா! காடுறையப் போ" என்று தசரதன் தன் தனயனிடம் சொன்னான்.

"தாதை அப்பரிசு உரை செயத்
தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்
'கடன் இது' என்றுணர்ந்தும்
'யாது கொற்றவன் ஏவியது
அது செயல் அன்றோ
நீதி எற்கு' என நினைந்தும் அப்
பணி தலை நின்றான்".

"பாதகங்கள் செய்திடினும் கொலை களவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள் வந்திடினும்
தனக்கென வோர் செயலற்றுத் தான் அநுவாய் நிற்கில்
நாதன் இவன் உடல் உயிராய் உண்டுறங்கி நடந்து
நானா போகங்களையுந் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்"

அந்த அம்மையப்பன்.

இதுவே வேறின்மை காணப்பெறுதல் என்று விதந்து ஓதப்படும். அணுவாகிவிட்ட ஆன்மாவிற்கு, இவ்வேறின்மையை நல்குதற்கே 'மஹத்' அருள் உள்ளம் கொண்டுள்ளது.

இதற்காக,

அவையே தானே யாய்இரு வினையில்
போக்கு வரவு புரிய — ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

இங்ஙனம் ஆன்மாவோடு இறைவன் கொண்டுள்ள உறவை அத்துவிதம் என்ற சொல் கொண்டு, ஆன்றோர் துலக்குகின்றனர். முன்னம் யாம் மொழிந்தது போல இந்த அத்துவிதம் என்ற சொல்லும் வஜ்ர சரீரம் கொண்ட ஒரு சொல்லாம். இதன் பொருளை ஷேக்ஸ்பியர் தரும் வெளிச்சத்தில் காண முனைவோம்.

"ந" என்பதும் "துவைதம்" என்பதும் சேர்ந்து "அத்வைதம்" என்று ஆகியிருக்கிறது.

"நஞ்ஞுக்கு, சாமியம் — இன்மை—பேதம் — சிறுமை— இழிவு—மறுதலை, என்னும் ஆறு பொருள்கள் உண்டு." இது சப்தகற்பதுருமம் நுவலும் செய்தி.

சாமியம்—சாதிருசியம் என்பன ஒரு பொருட்சொற்கள். இவற்றிற்குச் சரியான தமிழ்ச் சொல் "அன்மை" என்பதாகும்.

மேலே கூறப்பட்ட ஆறு பொருள்களுக்குள்ளே நஞ்ஞுக்கு, ஏகான்ம வாதியரால் இன்மைப் பொருளும், மத்துவர்களால் பேதப் பொருளும், சிவாத்துவிதிகளாலும், சைவசித்தாந்திகளாலும் சாமியப் பொருளும் கொள்ளப் படுகின்றன. சாமியப் பொருளே அன்மைப் பொருளில் செல்வதாகும்.

"நஞி வயுக்த மந்ய சதிருசாதி கரணே
ததாஹ்யார்த்த கதி:"

என்னும் பாரிபாஷேந்துசேகர இலக்கணத்தால் இது உணரப்படுகின்றது என்பர் காசிவாசி செந்தில்நாதஐயர் அவர்கள். இந்த பரிபாஷையை விளக்க வந்த ஐயர் கூறுவதாவது:

" 'அநசுவத்தைக் கொணர்க' என்று தேவதத்தனுக்கு யஞ்ஞதத்தன் ஆஞ்ஞாபிக்குங்கால், தேவதத்தன் (அநசுவம்) —அதாவது குதிரை அல்லாதது மண்ணாங்கட்டியும் ஆகலாம் என்று கொண்டு, அம்மண்ணாங்கட்டியை எடுத்துக் கொடுப்பான் அல்லன். பின், குதிரை அல்லாததாயும்— அதாவது — குதிரையுடன் பேதப்பட்டதாயும், எனினும் குதிரை செய்யவல்ல பணி செய்ய வல்லதாயும், அந்தக் குதிரையின் தோற்ற முதலியன ஒருவாறு ஒப்பதாயும், அதாவது, அபேதமாயும் உள்ள கோவேறு கழுதையை கொணர்ந்து விடுவன் எனப் பொருள் கொள்ளப்படும்."

இங்ஙனம் வேருயும், வேறு அன்மையாயும் இருக்கும் அன்மைப் பொருளே சைவ சித்தாந்திகளால் அத்து விதத்தில் உள்ள அகரத்துக்குப் பொருளாகக் கொள்ளப் படுகின்றது. மேலே கூறப்பட்ட ஆறு பொருள்களில், முதற் கண் நிற்கும் பொருள் இதுவே. சாமியம் என்றும், சாதி ருசியம் என்றும், அன்மைப் பொருள் என்றும் பேசப்படும் இப்பொருளிலேயே இது விளக்கப் படுகின்றது. பதஞ்சலி மஹாபாஷ்யகாரரும் அன்மைப் பொருளையே எடுத்து ஆண்டிருக்கின்ருர் என்று கூறுகிருர் ஐயர். இந்த சாமியப் பொருளே முண்டக உபநிடதத்திலும் கொள்ளப்படுகின்றது என்றும் அவர் அறிவிக்கின்ருர்.

யஜுர் வேதமும், சுவேதாசுவதர உபநிடதமும், "ஏகோ ருத்ரோ நதுவிதீயாய தஸ்து:" (உருத்திரர் ஒருத்தரே; அவர் அத்துவிதீயராய் இருந்தார்) என்று பேசுகின்றன. மேலும், அத்துவிதம் என்ற சொல்லே பிறிது காரணம் வேண்டாமல் முதல்வன் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்றலை உணர்த்தி நிற்கும். இச்சொல் பிரிவு அற்றதான அரிய ஒருமையை உணர்த்தும் திறன் உடையது. இதை "பிரிவு அரும் அத்துவிதம் ஆகும் சிறப்பினது" என்பர் உமாபதி சிவாசாரியார்.

அத்துவிதம் என்ற சொல்லில் வருகின்ற அகரம், அன்மை-இன்மை-மறுதலை-என்கின்ற மூன்று அர்த்தங்களை

உணர்த்த வல்லதாகும் இதற்கு நூலாசிரியர்கள் அப்பிராமணன், அமலம், அநீதி என்கிற மூன்று சொற்களை உதாகரிக்கின்றனர். இவற்றுள் அப்பிராமணன் என்னும் சொல், பிராமணன் அல்லாத ஏனையோரைக் குறிக்காது. ஆனுல் பிராமணனுயிருந்தும் பிராமணத் தன்மை இல்லாமையைக் குறிக்கும். இங்கு அகரம் அன்மைப் பொருளில் வந்ததைக் காணலாம்.

அமலம் என்ற சொல்லில் உள்ள அகரம் அடியோடு மலத்தன்மை இல்லாமையைக் குறிப்பதாகும். இங்கு அகரம் அபாவமாம் இன்மைப் பொருளில் வந்தது. அபோஜனம் என்பது உணவின் அபாவம் என்பர் ஐயர். அதாவது அபோஜனம் என்பது உபவாசம் என்ற பொருள் தரும். உணவு இன்மை இங்கு கொள்ளப்பட்டது.

அகரம் மறுதலைப் பொருளில் வருங்கால் அதர்மம் என்பது தருமத்துக்கு மறுதலையாகிய பாவம் எனப் பொருள் படும். அநீதி என்பது நீதியின் மறுதலை. இதை விளக்க வந்த John H Piet, "The one (நீதி) means "righteousness" and the other "aniti" (அநீதி) unrighteousness. One is the exact opposite of the other. This idea is used in English in such words as typical and atypical, where the "a" stands for the c.ntrary idea. Atypical is not a mere negation of typical but a positive statement in which the presence of variant qualities is postulated".

Piet அவர்கள் மறுதலைக்கு ஆங்கிலத்தில் உதாரணம் தந்தார்; அன்மைக்கும், இன்மைக்கும் அவர் எந்த உதாரணமும் தரவில்லை. இன்மைக்கு இணையாக "amoral" என்ற சொல்லைச் சொல்லலாம் என்று தோன்றுகிறது. Amoral does not mean immoral; it only means non-moral.

அன்மைக்கும் ஆங்கிலத்தில் ஓர் உதாரணம் காண்பம். ந + துவைதம், அத்வைதம் ஆனுற்போல ந + நாமம்,

அநாமம் ஆயிற்று. நாமம் என்ற வடசொல்லுக்கு இணையான இலத்தீன் சொல் nomen என்பதாம். இங்கு அநாமம் என்பது anomen என்று நிற்கும். இதனடியாகப் பிறந்ததே anonymous என்ற சொல்லாம். அனுமதேயம் என்பதில் வருகின்ற அகரம் அன்மைப் பொருளில் வருவதாக எமக்குத் தோன்றுகிறது.

அன்மைப் பொருளுக்கான விளக்கத்தை இன்னம் சற்று ஊன்றிக் காண்பம். துவிதம் என்பது எண்ணுப் பெயர். It refers to number. துவிதம் என்னும் எண்ணுப் பெயருக்கு முன் அகரம் எய்தி, அத்துவிதம் என்று நிற்குங்கால், அது இன்மை, மறுதலைப் பொருள்களில் நிற்காமல் பொதுமையில் நிற்கும். இதை ஓர் உதாரணம் கொண்டு விளக்கலாம்.

"என்னிடம் இரண்டு மாங்கனிகள் இல்லை" என்று நான் சொன்னால், இதற்குப் பின்வருமாறு பல பொருள்கள் கூறலாம்.

1. என்னிடம் மூன்று, நான்கு முதலிய அநேக மாங்கனிகள் உள.

2. என்னிடமிருப்பது ஒரு மாங்கனியே.

3. என்னிடம் மாங்கனியே இல்லை. அதாவது, என்னிடம் ஒரு மாங்கனி கூட இல்லாததால் இரண்டு மாங்கனிகள் இல்லை.

ஆகவே, இரண்டில்லை என்றால், இருக்கும் மாங்கனி ஒன்றுதான் என்று வரைவு படுத்திப் பொருள் கொள்ளுதற்கு இடம் இல்லை. ஆகவேதான் J. M. நல்லசாமிப் பிள்ளை அவர்கள், "Advaita means non-dualism and not monism," என்று கூறினர். ஆகவே, ஏகான்ம வாதிகள், அத்துவிதம் என்பதற்கு இன்மைப் பொருள் கூறி ஒன்று என்பதும் மத்துவர்கள் மறுதலைப்பொருள்கூறி இரண்டு என்பதும் ஒவ்வாதாம். அத்துவிதம் என்ற சொல்

மாத்திரையானே ஒரு பொருள் என்று கொள்ளுதல் பொருத்தமுடைத்தன்று.

தானே தன்னை ஒன்று என்று கருதவும் வேண்டுமோ? வேண்டாம். வேண்டாமையின், அவ்வாறு கருதும் பொருள் வேறு உண்டு என்று பெறப்படுகின்றது.

"ஒன்று என்றது ஒன்றே காண்; ஒன்றே பதி, பசுவாம்
ஒன்று என்ற நீ பாசத்தோடு உளை காண்"

என்பது மெய்கண்டார் அருள் வாசகம்.

கடவுளோடு ஆன்மா கொண்டுள்ள உறவு பேத, அபேத, பேதா பேதங்களில் ஒன்ரும் என்று கொள்ளுகின்றனர் சிலர்.

மத்துவர் கொள்கை பேதம்.
சங்கரர் கொள்கை அபேதம்.
இராமாநுஜர் கொள்கை பேதாபேதம்.
மெய்கண்டார் கொள்கை யாது?

''புறச்சமயத்தவர்க்கு இருளாய், அகச்சமயத்து ஒளியாய்
புகல்அளவைக்கு அளவாகி பொன்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய், இருள்வெளிபோல் பேதமும், சொல் பொருள் போல்
பேதா பேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனல் விளைவதாய் உடல் உயிர், கண், அருக்கன்,
அறிவு ஒளி போல் பிறிவரும் அத்துவிதமாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்கல் உற்ரும்.

சிவப்பிரகாசம் செப்பும் செய்தியிது.

மாயா இயந்திர தனுவினுள் இயங்குகின்ற ஆன்மா சுதந்திரஹீனன் 'அதாவது, ஒரு செயலைச் செய்வதற்கோ' அல்லது செய்யாமல் இருப்பதற்கோ, ஆன்மாவிற்குச் சுதந்திரம் இல்லை என்பதில்லை இதன் பொருள். வினை

தொழில், கருமம் செய்ய, ஆன்மாவிற்குச் சுதந்திரம் உண்டு. இதை "Soul is the mistress of her choice" என்று ஷேக்ஸ்பியர் கூறுவார். ஆனால் வினையைச் செய்த பிறகு, வினை விளைவை புசிக்காமல் இருப்பதற்கு அதற்குச் சுதந்திரம் இல்லை.

சத்தும் அசத்தும் சிவணிய சதசத்து நிலையே ஆன்ம நிலை. இது சார்ந்ததன் வண்ணமாய் இருக்கும். பாசத்தால் பந்திக்கப் பட்டிருப்பதால், இதற்குச் சுதந்திர ஹீனம் ஏற் பட்டுள்ளது. பாசப்பட்டுக் கிடப்பதாலே ஆன்மா பசு என்று பேசப்படுகிறது. "ஒன்றே பதி" என்ற மெய் கண்டார், "ஒன்று என்ற நீ பாசத்தோடு உளை காண்" என்றும் அருளியுள்ளார். பாச நீக்கத்திற்குத் தரப்பட்டதே பதி வழிபாடு. அந்நியம் இன்மை உணர்தலே அரன் கழல் அடைதற்கான உபாயம்.

தன்னை நேசிக்கும் பசுவை, பதியும் நேசிப்பன். நேயத்தே நிற்கும் நிமலன் அவன். தாள் நயந்த தலைவியை தோள் நயக்கும் தலைவன் காதலிப்பன். இந்தக் காதல் இரு திறப்பட்டதாகவே இருக்கும். அன்பெனும் பிடியில் அகப் படும் மாமலையாம் இறைவனை பக்தபக்திமான் என்று பாகவதம் பேசும். இந்த நேசத்தை ஷேக்ஸ்பியர் வாசகம் கொண்டு,

"So they loved as love in twain" என்று வருணிக்க லாம்.

> கிடந்த கிழவியைக் கிள்ளி எழுப்பி, உடந்தையுடனே நின்றும்
> எட்டுக் கொண்டார் தமைத் தொட்டுக் கொண்டே நின்றும்

ஆன்மா செயல்பட்டு வந்தால், சித்தமும் கரணமும் சித்திலே ஒத்துப்போம். தற்போதம் தொலைந்து, சிவ போதம் தலைப்படும். இந்நிலையை,

"So they loved as love in twain,
Had the essence but in one"

என்ற ஷேக்ஸ்பியர் வாசகம் தெளிவு படுத்தும்.

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்த ஆன்மாவிற்குப் பிண்டத்தில் வேலையில்லை. அத்துவிதத் தித்திப்புக் கலப்பு அதற்குச் சித்தித்துவிடும். என்றாலும், முக்தியிலுங்கூட மும்முதல் உள என்னும் சைவ சித்தாந்தம். முக்தி நிலையிலும் பதி, பதிதான்; பசு, பசுதான். அப்படியாயின் இப் பசு-பதி கலப்பை எப்படித்தான் பேசுவது? இது அத்துவித கலப்பு என்று மட்டுமே பேசப்படும்.

அத்துவிதம் என்னும்சொல் தானே, வேறு காரணம் வேண்டாது வேறன்மையை உணர்த்தி நிற்கும். வேறன்மை does not mean non-difference; but only non-separateness. இந்நிலையை ஷேக்ஸ்பியரைப் போல் துல்லியமாக விளக்க வல்லார் யாரும் இல்லை போலும்! அவர் கூறுவதாவது:--

"Two distincts; division none".

திருவாளர் நல்லசாமி பிள்ளை கூறும் வாசகத்தையும் உடன் வைத்து ஓதுவோம்.

"The word (advaita) does not mean one, or non-existence of two or more, but is used to express the peculiar relation that exists between two *distinct* things which can become one...".

இவ்விருவர் மரபில் வருகின்ற நாம் கூறுவதாவது: —
Advaita relationship is not one of one oneness; but one of oned togetherness. It is losing oneself in a togetherness.

ஷேக்ஸ்பியர் பாஷையில் வருணிப்போம்:—
"Thou and I *am* one".

Advaitam postulates a unity, a union despite differences.

பிள்ளை அவர்கள் கூறுவதாவது:—

"Though in all these cases, an identity is perceived, a difference in substance is also felt. It is this relation which could not be easily postulated in words, but which may perhaps be conceived, and which is seen as two (Dvaitam) and at the same time as not two (Advaitam). It is this relation which is called advaitam, 'a unity in duality' and the philosophy which postulates it, the Advaita philosophy".

சைவசித்தாந்தத்தின்படி அத்துவிதம் என்பது ஓர் உறவு. ஆன்மா அத்துவிதப்பட்டிருப்பது. கேவல நிலையிலும், சகல நிலையிலும், முத்தி நிலையிலும் ஆன்மா பூண்டிருப்பது அத்துவித உறவே. கேவல, சகல நிலைகளில் ஆன்மா ஆணவ மலத்தோடு கட்டுண்டு கிடக்கும். ஆணவ மலம் என்பதை the ancestral blindness of the soul என்று வருணிக்கலாம். ஆணவ மலத்தோடு கூடியிருப்பதோ, பிரிந்திருப்பதோ ஆன்மாவின் சுதந்திரத்திற்கு விடப்பட்ட விஷயம். Soul is the mistress of her choice. இருட்பாவையாம் ஆணவ மலத்தின் சக்தி பலதிறப்பட்டது. மாசறு காட்சி வேட்கின்ற ஆன்மாவே, இருளைக் கடக்க எண்ணம் பூண்டு செயல்படத் தொடங்கும். வள்ளுவர் பெருமானும்

"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

என்று அருளியுள்ளார். தவராஜ யோகியரான தாயுமானவர்,

"ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவித மாகுநாள் எந்நாளோ?" என்றார்.

தாயுமானவர் என்ற சொல்லைக் கவனியுங்கள். தாயும் ஆனவர் என்பதே அத்துவித நிலைதான்.

அத்துவிதம் என்று சொல்லுக்குப் பொருள் ஒன்று, இரண்டா என்றால், ஒன்று என்றோ, இரண்டு என்றோ, ஒன்றும் இரண்டும் இன்று என்றோ சொல்ல முடியாது. ஆகவேதான் ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்று மிரண்டுமாகாமல் என்றிந்நிலையை சர்வ ஜாக்ரதையுடன் பேசுகிறார் அருள்நந்தி சிவாசார்யர்.

அத்துவிதம் என்ற சொல்லை எண் என்ற சிறையில் இருத்தி வைக்க முடியாது. ஏகம், இரண்டு என்னாமல் சும்மாயிரு என்கிறார் ஒழிவிலொடுக்க ஆசிரியர். கேட்பான் புகில் அளவில்லை கிளக்க வேண்டா என்ற ஆளுடைய பிள்ளையார் மரபில் வந்தவர் அவர். ஆகவே ஏகம், இரண்டு என்னாமல் சும்மாயிரு என்றார் அவர்.

ஏன் அங்ஙனம் சும்மா இருத்தல் வேண்டும் என்பதற்கான காரணங்களை ஷேக்ஸ்பியரிடம் தெரிந்து கொள்ளலாம். எண் என்ற பேச்சுக்கு இங்கு இடமில்லை என்பதே ஷேக்ஸ்பியரின் சித்தாந்தம்.

"Two distincts, division none
Number there in love was slain''.

எண் என்பது இங்கு மாண்டு போகிறது; இல்லை, இல்லை, கொலையுண்டு போகிறது.

''தந்தது என் தன்னை கொண்டது உன் தன்னை''

என்பதை அடியொற்றிச் சொல்லுமா போலே, "Either was the other's mine'' என்கிறார் ஷேக்ஸ்பியர்.

பதியினைப் போல் பசு, பாசங்களும் அநாதி. ஆகவே பாசத்தை அறவே ஒழித்தல் என்பது இல்லை. பாச க்ஷயமே உண்மை. பாச க்ஷயம் ஏற்பட பசுத்வம் நசுக்கப்படும். அதாவது பொருளுக்குப் பண்டு இருந்த தன்மை நசுக்கப் படுகிறது. இதை "Property was thus appalled'' என்று பேசுகிறார் ஷேக்ஸ்பியர். Property என்பது பொருளின் விசேஷகுணம்.

பசுபோதம் நீங்கப் பெற்ற ஆன்மா, புதிய ஆன்மா, "இன்று புதிதாய்ப் பிறந்தோம்" என்ற மஹாகவி பாரதியாரின் வாசகம் பொருள் பொதிந்தது. "என்னைப் புதிய உயிராக்கி" என்று அவர் வேண்டுவார். பழையது கழிய புதிது பிறக்கும்.

Property was thus appalled that the self was not the same'' என்பது ஷேக்ஸ்பியரின் கூற்று.

இந்த அத்துவிதம் ஒன்று என்றோ, இரண்டு என்றோ பேசப்படாது. பின் எப்படி? ஷேக்ஸ்பியர் கூறுகிறார்-

"Single nature's double name
Neither two nor one was called."

மதியில்லார் இதை ஆராயத் தலைப்பட்டால் இடருற்று, தட்டுண்டு, மாழாந்து போவர். "Reason, in itself confounded என்பதே ஷேக்ஸ்பியர் வாசகம். பதி, பசுக்கள் இரண்டாக இருந்தன. அத்துவிதத்தில் இரண்டற்றநிலை. என்றாலும் பசு பதியாகிவிடவில்லை. பதி பசுவாகிவிடவில்லை. அப்படியோர் பேரதிசயக் கலப்பு.

"Reason in itself confounded
Saw division grow together
To themselves yet either neither
Simple were so well compounded

என்பதே ஷேக்ஸ்பியர் கண்டுணர்ந்த காட்சி.

இரண்டாக இருந்த பொருள்கள் ஒன்று போல் ஆகி விட்டன. ஒன்றுபோல் தோற்றம் என்பதே ஷேக்ஸ்பியர் தரும் குறிப்பு.

"How true a twain
Seemeth this concordant one!"

இந்தக் கலப்பே அத்துவிதக் கலப்பு.

பெத்த நிலையில் முதல்வன் உயிராய் ஒற்றுமைப்பட்டு நிற்பதும், முத்தி நிலையில் உயிர் சிவமாய், ஒற்றுமைப்பட்டு நிற்றலும் அத்துவித சம்பந்தம். இதன் நுணுக்கத்தை "அகக் கண் ஒரு பதினாயிரம் உடையார்" என்று கவிவாணர் கோலரிட்ஜால் போற்றப்படும் ஷேக்ஸ்பியர் மிக அழகாகக் காட்டியுள்ளார். இந்த அத்துவிதக் கலப்பு காலாதீதமானது. ஆகவே, "To eternity doth rest" என்றிதை ஷேக்ஸ்பியர் விளக்குகிறார்.

பாசத் தோற்றத்துக்குத் தொடக்கம் இல்லை. என்றாலும் பாச க்ஷயத்திற்குத் தோற்றம் உண்டு. அந்த வகையில் பாசத்திற்கு முடிவு உண்டு. முக்திக்குத் தோற்றம் உண்டு ஆனால் அதற்கு முடிவில்லை. இதை, the soul's state of bondage has no beginning; but has an end, while the soul's spiritual freedom has a definite beginning, but no end என்பார் ரமண சாஸ்திரிகள்.

ஆகவே அத்துவித முத்தி காலம் கொன்ற விருந்து காண்!

"To eternity doth rest" என்பது ஷேக்ஸ்பியரின் தரிசனம்.

சைவசித்தாந்தம் வாழ்க! ஷேக்ஸ்பியர் வாழ்க !!

சிவம்

---

தாயுமானவர் பாடல்

ஒன்றிரண்டென் றுன்னு உணர்வுகொடுத் துள்ளபடி
என்றுமென்னை வையாய் இறையே பராபரமே.

—பராபரக்கண்ணி : 290

அத்துவிதம், துவிதம் என்கின்ற பேதம் தோன்றுவதொழித்து 'ஏகமேவாத்துவீதம்' என்னும் பேருணர்வளித்து எப்போதும் நான் ஒரே நிலை கொண்டு நிற்க நீ கிருபை வைத்தருள வேண்டும் என் இறைவனே என்றதாம்.

உ
சிவமயம்



# ॥ अष्टमीप्रबन्धे शिवदण्डकपादः ॥

## நாராயண பட்டத்திரியின்
## அஷ்டமீ பிரபந்தத்திநின்றும்
## சிவ தண்டகம்

உரை: டாக்டர் ந. கங்காதரன் எம்.ஏ. எம்.லிட். பிஹெச்.டி
ஸம்ஸ்க்ருத விரிவுரையாளர், சென்னை பல்கலைக்கழகம்

जय जयजगदेकनाथ ! प्रभो ! देवदेव ! प्रसीद त्रिशूलिन्! कपालिन्! भवाम्भोधिमध्ये सदाबद्धखेदं मुहुर्मज्जनोन्मज्जनैर्मुह्यते मह्यमाशु प्रदेहि प्रमोदेन ते पादपङ्केरुहं नावमाविर्दयम् । त्वत्पदाम्भोरुहादन्यदस्मादृशां किं समालम्बनं सान्द्रकारुण्यसिन्धो ! सतामेकबन्धो ! जगत्सृष्टिरक्षाविनाशैकदीक्षाधुरीणामरीणामार्द्रकारुण्यधारासुधाधोरणीसारणीं भक्ति-

भाजां जनानामहन्तालताकर्तरीं मृत्युजन्मादिसन्तापविध्वंस-
सिद्धौषधिं देहि तुष्टामितो दृष्टिमिष्टप्रदां नौमि नित्यम् ।

ஜய ஜய ஜகதேகநாத! பிரபோ! தேவதேவ! ப்ரஸீத த்ரிசூலின்! கபாலின்! பவாம்போதி மத்யே ஸதாபத்த கேதம் முஹுர் மஜ்ஜனோன்மஜ்ஜனைர் முஹ்யதே மஹ்யமாசு ப்ரதேஹி ப்ரமோதேன தே பாதபங்கேருஹம் நாவமாவிர்தயம்! த்வத்பதாம்போருஹாதந்யதஸ்மாத்ருசாம் கிம் ஸமாலம்பனம் ஸாந்த்ரகாருண்யஸிந்தோ! ஸதாமேகபந்தோ! ஜகத் - ஸ்ருஷ்டி - ரக்ஷா-விநாசைக-தீக்ஷா—துரீணு மரீணுமார்த்ர-காருண்ய-தாராஸுதா-தோரணீ-ஸாரணீம் பக்திபாஜாம் ஜநாணுமஹந்தா - லதாகர்த்தரீம் ம்ருத்யு ஜன்மாதி-ஸந்தாப-வித்வம்ஸ-ஸித்தௌஷதிம் தேஹி துஷ்டாமிதோ த்ருஷ்டிமிஷ்டப்ரதாம் நௌமி நித்யம்.

உலகமனைத்திலும் சிறந்த தெய்வமே! நீர் வெல்வீராக! பெருந்தலைவரே! வானவர்க்கும் தலைவரே! அருள்புரியுங்கள். திரிசூலம் தாங்கியவரே! மண்டை ஓட்டைத் தாங்கியவரே! பிறப்பு, இறப்பு என்னும் ஆழ்கடலின் நடுவில் எப்பொழுதும் கட்டுண்டு வருந்தி. மீண்டும் மீண்டும் மூழ்கி எழுவதால் மயக்கமுற்ற எனக்கு மிக்க மகிழ்ச்சியுடன் உம்முடைய பாதத் தாமரைகளை விரைவில் தாரும்! பாதத் தாமரைகளான படகினில் ஏறிவிட்டேன். உம் பாதத் தாமரையைத் தவிர்த்து எங்கள் போன்றவர்க்கு பிடிப்பு ஏது? அளவற்ற கருணைக்கடலே, நல்லவர்களுக்குச் சிறந்த உற்றவரே! உலகினைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மேம்பட்ட கடமையில் சிறந்தவரின் வற்றாத நெகிழும் கருணை ஊற்றின் அமிர்தமயமான வெள்ளப் பெருக்கின் வாய்க்காலும். பக்தி பெருகும் மக்களின் அகந்தை என்னும் கொடியைக் களையும், மரணம், பிறப்பு முதலான துன்பங்களை அழிக்கும் அருமருந்தைக் கொடுங்கள். மகிழ்வுற்றதும் விரும்பியதை வழங்குவதுமான பார்வையை இப்பொழுதிலிருந்து எப்பொழுதும் வணங்குகின்றேன்.

क्वचिच्चञ्चदञ्चज्जटामण्डलीहिण्डमानस्फुरत्स्वस्सरिन्निः-सरल्लोलकल्लोलहल्लोहलध्वाननिर्धूतलोकं, क्वचिच्चारुधम्मिल्लभारोल्लसन्मल्लिकावल्लरीनिर्यदामोदसंभारसंभ्राम्यदुत्तालमत्तालिझंकार-भृङ्गारिताशान्तरालं, क्वचिन्मुण्डमालागणैर्मण्डितं, कुत्रचित् फुल्ल-मौल्युत्करैरुल्लसन्तं, क्वचित् भस्मपुण्ड्रोल्लसत्फालदेशं, क्वचिन्नील-लोलाळकाळीसमुल्लासिवक्त्रारविन्दं, क्वचित् फालनेत्रोज्वल-द्वीतिहोत्रं, क्वचिच्चित्रकस्तूरिकाचित्रकालङ्कृतं, कुत्रचित् भक्त-तृष्णालताकन्ददात्रायितारक्तनेत्राञ्चलं, कुत्रचिद्वित्रसद्बालसारङ्ग-योषिच्चलापाङ्गभङ्गीभिरङ्गीकृतं, कुत्रचित् भूरिभूतिस्फुरत्पाण्डु-गण्डस्थलं, कुत्रचिच्चित्रपत्राङ्कुरैरङ्कितं, कुत्रचित्कर्णभूषापदोद्भा-सितस्थूलकद्रूसुतं, क्वापि गण्डस्थलत्कुण्डलालग्नरत्नप्रभाभासुरं, क्वापि च स्फीतवक्षस्थलाकुण्ठभस्मावकुण्ठोज्वलं, क्वापि चोत्तु-ङ्गपीनस्तनासक्तकस्तूरिकाकर्दमं, कुत्रचिल्लम्बमानास्थिमालागणं, क्वापि चामुक्तमुक्तावलीबन्धुरं, कुत्रचित् भस्मना भासमानोदरं, क्वापि चापीनवक्षोरुहक्रान्तमुग्नावलग्नं, क्वचिद्व्याघ्रचर्माम्बराकल्प-शोभं, क्वचिच्चापि शुम्भन्नितम्बस्थलोद्यद्दुकूलाञ्चलाबद्धकाञ्ची-कलापं, क्वचित् भोगिवृन्दस्फुरत्पादपद्मं, क्वचिन्मञ्जुशिञ्जान-मञ्जीरकालङ्कृतं गोत्रराजात्मजागात्रमिश्रीभवन्तं भवन्तं सदा मानसे शीलयाम ।

க்வசிச்சஞ்சதஞ்சஜ்ஜடாமண்டலீ ஹிண்டமான ஸ்புரத் ஸ்வஸ்ஸரிந்நிஸ்ஸரல்லோல-கல்லோல-ஹல்லோஹலத்வாண நிர்தூதலோகம், க்வசிச்சாரு - தம்மில்ல - பாரோல்லஸந் மல்லிகாவல்லரீ - நிர்யதாமோதஸம்பார - ஸம்ப்ராம்ய துத்தால - மத்தாலிஜங்கார - ச்ருங்காரிதாசாந்தராலம், க்வசிந்முண்டமாலாகணைர்மண்டிதம், குத்ரசித் புல்ல மௌல்யுத்கரைருல்லஸந்தம், க்வசித் பஸ்மபுண்ட்ரோல்ல ஸத்பாலதேசம், க்வசிந்நீலலோலாளகாளீ - ஸமுல்லாஸி வக்த்ராரவிந்தம், க்வசித் பாலநேத்ரோ - ஜ்வலத்வீதி ஹோத்ரம், க்வசிச்சித்ர - கஸ்தூரிகா - சித்ரகாலங்க்ருதம் குத்ரசித் பக்த - த்ருஷ்ணு - லதா - கந்ததாத்ராயிதாரக்த நேத்ராஞ்சலம், குத்ரசித் வித்ரஸத்-பால-ஸாரங்க-யோஷிச் சலாபாங்க - பங்கிபிரங்கீக்ருதம், குத்ரசித் பூரிபூதிஸ்புரத் பாண்டுகண்டஸ்தலம், குத்ரசிச்சித்ரபத்ராங்குரைரங்கிதம், குத்ரசித் கர்ணபூஷாபதோத்பாஸித - ஸ்தூலகத்ருஸ-தம், க்வாபி கண்டஸ்கலத்குண்டலாலக்ன - ப்ரபாபாஸுரம், க்வாபி ச ஸ்பீத - வக்ஷஸ்தலாகுண்ட - பஸ்மாவகுண்டோ ஜ்வலம், க்வாபி சோத்துங்க - பீனஸ்தனஸக்தகஸ்தூரிகா கர்தமம், குத்ரசில்லம்பமானஸ்தி - மாலாகணம், க்வாபி சாமுக்தமுக்தாவலீ-பந்துரம், குத்ரசித் பஸ்மநா பாஸமா னேதரம், க்வாபி சாபீன-வக்ஷோருஹக்லாந்த புக்னவலக் னம் க்வசித்வ்யாக்ர-சர்மாம்பராகம்ர-சோபம், க்வசிச்சாபி சும்பந்நிதம்பஸ்தலோத்யத் - துகூலாஞ்சலாபத்த - காஞ்சீ கலாபம், க்வசித்போகிவ்ருந்தஸ்புரத்பாதபத்மம், க்வசிந்மஞ் ஜுசிஞ்ஜானமஞ்ஜீரகாலங்க்ருதம் கோத்ரராஜாத்மஜா - காத்ர-மிச்ரீபவந்தம் பவந்தம் ஸதா மானஸே சீலயாம.

ஓரிடத்தில் அசைகின்ற சுருண்ட சடையில் ஓடுகின்ற பொங்கும் தன் ஆற்றிலுள்ள அலைகளின் ஒலியினால் அசைக் கப்பட்ட உலகத்தை உடையவரும், ஓரிடத்தில் அழகிய கூந்தல் தாங்கும் ஒளிரும் மல்லிகைக் கொடியினின்று வரும் நறுமணப்பெருக்கினால் சுழலும் பெரும் குடிமயக்கம்

கொண்ட வண்டுகளின் ரீங்காரத்தினுல் கவர்ச்சியாக்கப் பட்ட திசைகளை உடையவரும், ஓரிடத்தில் முண்டமான உடல்களாலான மாலையையணிந்த பூதகணங்களால் சூழப் பட்டவரும், ஓரிடத்தில் தலைமீது மலர்ந்த அசோக மலர் களினுல் விளங்குபவரும், ஓரிடத்தில் திருநீறு ஒளிரும் நெற்றிப் பகுதியை உடையவரும், ஓரிடத்தில் அசைந்தாடும் கருத்த கூந்தலில்வண்டுடன்ஒளிரும் முகத்தாமரையை உடையவரும் ஓரிடத்தில் நெற்றிக்கண்ணினின்றும் ஜ்வலிக்கும் நெருப்பை உடையவரும், ஓரிடத்தில் பிரகாசிக்கும் கஸ்தூரியினுலான நெற்றிப் பொட்டினுல் அலங்கரிக்கப்பட்டவரும், ஓரிடத்தில் தம் பக்தர்களின் ஆசை என்னும் கொடிச்சுழலைக் களைவதினுல் சிவந்த கடைக்கண் பகுதியை உடையவரும், ஓரிடத்தில் பயந்த இளம்புள்ளிமானின் மிரண்ட கடைக்கண் பார்வை களால் ஏற்றுக்கொள்ளப்பட்டவரும், ஓரிடத்தில் நிரம்ப திருநீறு ஒளிரும் வெளுத்த கழுத்துப்பகுதியை உடையவரும். ஓரிடத்தில் பிரகாசிக்கும் இலைத்துளிர்களின் குறியை உடையவரும், ஓரிடத்தில் காதணியாக ஒளிரும் பருத்த அரவத்தை உடையவரும், ஓரிடத்தில் கன்னத்தில் தொங்கும் குண்டலங்களிலுள்ள இரத்தினங்களின் ஒளியினுல் விளங் குபவரும், மேலும் ஓரிடத்தில் பரந்த மார்பில் பரவிப் பூசப் பட்ட திருநீறுடன் ஒளிர்பவரும், ஓரிடத்தில் உயர்ந்த பருத்த ஸ்தனபாகத்தில் பூசப்பட்ட கஸ்தூரிக் குழம்பை உடைய வரும், ஓரிடத்தில் தொங்கும் அஸ்தி மாலையின் தொகுப்பை உடையவரும், ஓரிடத்தில் அணியப்பட்ட முத்துமாலையுடன் விளங்குபவரும், ஓரிடத்தில் திருநீறினுல் ஒளிரும் வயிற்றுப் பகுதியை உடையவரும், ஓரிடத்தில் பருத்த மார்பினுல் சோர்வுற்று வளைந்த இடுப்பை உடையவரும், ஓரிடத்தில் புலித்தோலணிந்ததினுல் அழகிய தோற்றத்தை உடைய வரும், ஓரிடத்தில் உடலின் பின் பகுதியில் ஒளிரும் பட்டின் நுனியில் கட்டப்பட்டு சிறந்து விளங்கும் ஒட்டியாணத்தை உடையவரும், ஓரிடத்தில் அரவங்களின் கூட்டங்கள் துள்ளி விளங்கும் பாதத்தாமரைகளை உடையவரும், ஓரிடத்தில்

கவர்ச்சியாக ஒலிக்கும் சதங்கையினுல் அழகு செய்யப் பட்டவரும், மலையரசனின் மகளின் உடலுடன் ஒன்றிய வருமான உம்மை (எம்) மனத்தில் எப்பொழுதும் வழி படுகின்ருேம்.

सदा त्वत्पदाम्भोरुहद्वन्द्वसंसेवनादन्यदेकं न वाञ्छाम्यहं; कृन्धि तृष्णालतां; छिन्धि संसारबन्धं; मनोवागलभ्यस्वरूपाय तुभ्यं नमः; सच्चिदानन्दकन्दाय तुभ्यं नमः; सर्ववेदान्तसिद्धान्ततत्त्वार्थसारस्वरूपाय तुभ्यं नमः; नित्यशुद्धप्रबुद्धाय तुभ्यं नमः; रज्जुसर्पाभमेतत् समस्तं प्रपञ्चं सदा पश्यतां योगभाजां जनानामिडापिङ्गलानाडिसन्नद्धशुम्भत्सुषुम्नामहानाडिमध्ये विशुद्धे समाधौ स्फुटं भासमानाय संवित्प्रकाशाय तुभ्यं नमः; पाहि पाहि प्रभो! मन्मथारे! महादेव! शम्भो! कृपाम्भोनिधे! हे प्रभो! विश्वमूर्ते! नमस्ते नमस्ते नमस्तेऽस्तु शम्भो! नमः।

ஸதா த்வத்பதாம்போருஹ-த்வந்த்வ-ஸம்ஸேவனுதந்ய தேகம் ந வாஞ்சாம்யஹம்; க்ருந்தி த்ருஷ்ணுலதாம்; சிந்தி ஸம்ஸாரபந்தம்; மனோவாகலப்யஸ்வரூபாய துப்யம் நம: ; ஸச்சிதானந்தகந்தாய துப்யம் நம:; ஸர்வ - வேதாந்த ஸித்தாந்த - தத்வார்த்த - ஸார - ஸ்வரூபாய துப்யம் நம:; நித்ய-சுத்த-ப்ரபுத்தாய துப்யம் நம:; ரஜ்ஜுஸர்பாபமேதத் ஸமஸ்தம் ப்ரபஞ்சம் ஸதா பச்யதாம் யோகபாஜாம் ஜனுனு மிடா - பிங்கலா - நாடி-ஸந்நத்த - சும்பத்ஸுஷும்னு-மஹா நாடி - மத்யே விசுத்தே ஸமாதெள ஸ்புடம் பாஸமானுய ஸம்வித்ப்ரகாசாய துப்யம் நம:; பாஹி பாஹி ப்ரபோ! மன்மதாரே! மஹாதேவ! சம்போ! க்ருபாம்போநிதே!

ஹே ப்ரபோ! விச்வமூர்த்தே! நமஸ்தே நமஸ்தே நமஸ்தே (அ)ஸ்து சம்போ! நம: |

எப்பொழுதும் உம்மிரு பாதத்தாமரைகளை வழிபடுவதைத் தவிர மற்றெதையும் நான் விரும்பவில்லை. ஆசைக் கொடியைக் கத்தரித்துவிடும். பிறப்பு, இறப்பு என்னும் பிணைப்பைக் களைந்துவிடும். மனத்தாலும் சொல்லாலும் அடையமுடியாத உருவமுடைய உமக்கு வணக்கங்கள். ஸத், சித், ஆனந்தவடிவமான உமக்கு வணக்கங்கள். அனைத்து வேதாந்த சித்தாந்த தத்துவப் பொருள்களின் ஸாரவடிவான உமக்கு வணக்கங்கள். எப்பொழுதும் தூய ஞானியான உமக்கு வணக்கங்கள். கயிறு ஒரு அரவம் போலத் தோற்றமளிக்கும் இந்த பிரபஞ்சமனைத்தையும் எப்பொழுதும் நோக்கும் மக்களுடைய இடை, பிங்களை என்னும் இவ்விரு நாடிகளால் சூழப்பட்டு ஒளிரும் ஸுஷும்னை என்னும் சிறந்த நாடியின் நடுவே தூயமான ஸமாதிநிலையில் துல்யமாகப் பிரகாசிக்கும் ஞானவடிவாய்த் திகழும் உமக்கு என் வணக்கங்கள். என்னைக் காத்திடும்! காத்திடும்! பிரபுவே! காமனின் பகைவரே! தெய்வங்களுள் சிறந்தவரே! செல்வத்தைக் கொடுப்பவரே! கருணைக்கடலே! ஓ! பிரபுவே! உலகவடிவானவரே! உமக்கு என்னுடைய வணக்கங்கள். ஓ! செல்வத்தைக் கொடுப்பவரே!

[உரையாசிரியர் குறிப்பு: திருமாலின்மீது நாராயணீயம் என்னும் சிறந்த தோத்திரத்தைப் பாடி புகழ் பெற்ற மேல்புத்தூர் நாராயணபட்டர் திருமாலிடம் ஈடுபாடு கொண்டவர் என்றும் அதனால் அவர் தம் நூலில் மற்ற தெய்வங்களைக் குறைத்துக் கூறியிருக்கிறார் என்றொரு கருத்து நிலவுகிறது. அதற்கு மாறாக அவர் சிவனாரையும் சிறப்பாகப் பாடியதொரு நூல் இருக்கிறது என்று யாவரும் அறிய அவருடைய இந்த நூலை இங்கு மொழி பெயர்த்து தந்துள்ளேன். கேரளத்தில் வைக்கம் என்றதொரு புகழ் பெற்ற சிவத்தலம் உள்ளது. அங்கு ஒரு சிறந்த சிவாலயம் உள்ளது. அங்கு ஆண்டுதோறும் இருமுறை கார்த்திகை,

மாசி இவ்விரு மாதங்களிலும் அஷ்டமி திதியில் திருவிழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விழாவினை விவரித்து நாராயணபட்டர் 'அஷ்டமீ சம்பூ' அல்லது 'வ்யாக்ராலயேசாஷ்டமீ மஹோத்ஸவ சம்பூ' என்னும் ஒரு சிறு நூலை இயற்றியுள்ளார். 40 செய்யுட்களும் 22 உரைநடைப் பகுதிகளும் உள்ள இந்நூலில் சிவனுரைப் போற்றும் தண்டகம் ஒன்றை அமைத்துள்ளார். இந்த தண்டகம் வடிவில் சிறிதே ஆயினும் அதன் சொல் நயமும் பொருள் நயமும் படிப்பவர் மனத்தைக் கவரவல்லது என்பதில் சிறிதும் ஐயமில்லை. தாம்பாடும் பொருளை அனைத்திலும் உயர்ந்த தாகக் கூறுவது கவிகளின் இயல்பு. அவ்வாறே இங்கும் சிவனுரை சிறப்பாகக் கொண்டாடும் சில சொற்றொடர்கள் அமைந்துள்ளன. உ-தாரணமாக, 'ஜகதேகநாத', 'த்வத் பதாம்போருஹாதன்ய - தஸ்மாத்ருசாம் கிம் ஸமாலம்பனம்', 'ஏகபந்தோ', முதலியவற்றைக் கூறலாம். இந்த தண்டகத்தைப் படித்து இன்புற்று பரமனின் அருளுக்குப் பாத்திரமாவோம்].

சிவம்

---

## பிரமனும் மறைக்கவொண்ணுப் பெருமை

ஆலேபனம் பஸிதமாவஸதச் ச்மசானம்
அஸ்தீனி தே ஸததமாபரணுநி ஸந்து |
நிஹ்நோதுமீச நிகில ச்ருதி ஸாரஸித்தம்
ஐச்வர்யமம்புஜபவோபி ச ந க்ஷமஸ்தே ||

(ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அருளிய
ஆத்மார்ப்பணஸ்துதி : 43)

(இதன் பொருள்) — ஈச்வரனே! நீ பூசிக்கொள்வது விபூதி, இருப்பிடம் சுடுகாடு, உனக்கு எப்பொழுதும் ஆபரணமாக இருப்பன எலும்புகள், இருப்பினும், ஸகல வேதங்களாலும் உபநிடதங்களாலும் 'ஸாரம்' என்று நிச்சயமாய்த் தெரிந்த உன் ஈச்வரத் தன்மையை மறைக்கப் பிரமதேவனும் முடியாதவர்.

ஸ்ரீ கோமத்யை நம:



ஸ்ரீ ஆதிசங்கார் அருளிய

# ॥ श्री गोमत्यम्बाष्टकम् ॥

# ஸ்ரீ கோமதி அம்பாள் அஷ்டகம்

தமிழ் உரை:

ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக

P, N. நாராயண சாஸ்திரிகள்

भूकैलासे मनोज्ञे भुवन वनवृते नागतीर्थोपकण्ठे
रत्नप्राकारमध्ये रविचन्द्र महायोगपीठे निषण्णम् ।
संसारव्याधिवैद्यं सकलजननुतं शङ्खपद्मार्चिताङ्घ्रिं
गोमत्यम्बासमेतं हरिहरवपुषं शङ्करेशं नमामि ॥

பூகைலாஸே மனோக்ஞே புவன வனவ்ருதே
நாகதீர்த்தோபகண்டே
ரத்னப்ராகார மத்யே ரவிசந்த்ர மஹாயோக
பீடே நிஷண்ணம் ।
ஸம்ஸார வ்யாதி வைத்யம் ஸகலஜனநுதம்
சங்கபத்மார்ச்சிதாங்க்ரிம்
கோமத்யம்பாஸமேதம் ஹரிஹரவபுஷம்
சங்கரேசம் நமாமி ॥

பூசைலாசமெனப்படும் சங்கரநாராயணர் கோவிலில் உலகமாகிற காட்டினுல் சூழப்பெற்றதும், நாகதீர்த்த மெனப்படும் குளத்தின் அருகிலுள்ளதும், ரத்தினங்களா லான பிராகாரத்தின் நடுவில் உள்ளதுமான சூரிய, சந்திர ராகிற யோகபீடத்தில் வீற்றிருப்பவரும், சங்கு, தாமரை முதலிய ரேகைகளைத் திருவடியில் கொண்டவரும், பிறப் பிறப்பு என்கிற நோய்க்கு வைத்தியராயும், கோமதி அம்பாளுடன் கூடியவரும், முக்கண்ணன், திருமால் இரண் டையும் ஒரே உருவத்தில் கொண்டவருமான ஸ்ரீசங்கரேச் வரரான ஸ்ரீசங்கரலிங்கரை வணங்குகின்றேன்.

लक्ष्मी वाणी निषेविताम्बुजपदां लावण्यशोभां शिवां
लक्ष्मीवल्लभ पद्मसम्भवनुतां लम्बोदरोल्लासिनीम् ।
नित्यं कौशिकवन्द्यमानचरणां ह्रींकार मन्त्रोज्वलां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥ १ ॥

1. லக்ஷ்மீ வாணீ நிஷேவிதாம்புஜ பதாம்
லாவண்ய சோபாம் சிவாம்
லக்ஷ்மீவல்லப பத்மஸம்பவநுதாம்
லம்போதரோல்லாஸிநீம் |
நித்யம் கௌசிகவந்த்யமான சரணும்
ஹ்ரீங்கார மந்த்ரோஜ்வலாம்
ஸ்ரீபுன்னுகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ||

லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலியவர்களால் நன்கு தொழப் பட்ட திருவடித் தாமரைகளை உடையவளும், திருமால், நான்முகன் ஆகியோர்களால் துதிக்கப்பட்டவளும், தன் குமாரனை விநாயகரைக் கண்டு மகிழ்பவளும், தினமும் கௌசிகரால் வணங்கப்பட்ட திருவடிகளை உடையவளும், "ஹ்ரீம்" என்னும் மந்திரத்தில் ஒளிவிட்டு விளங்குபவளும்,

புன்னாகவனத்தின் தலைவரின் மனைவியாய் விளங்குகிற ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

देवीं दानवराज दर्पहरिणीं देवेन्द्र संपत् प्रदां
गन्धर्वोरग यक्षसेवितपदां श्रीशैल मध्यस्थिताम् ।
जाती चम्पक मल्लिकादिकुसुमैः सम्शोभिताङ्घ्रिद्वयां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥ २ ॥

2. தேவீம் தானவராஜ தர்ப்பஹாரிணீம்
தேவேந்த்ர ஸம்பத்ப்ரதாம்
கந்தர்வோரக யக்ஷ ஸேவிதபதாம்
ஸ்ரீசைல மத்யஸ்திதாம் |
ஜாதீ சம்பக மல்லிகாதி குஸுமை:
ஸம்சோபிதாங்க்ரி த்வயாம்
ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ||

பண்டன் முதலான அரக்கர் தலைவர்களின் கொழுப்பை அடக்கியவளும், மூவுலகத்துத் தலைவனான இந்திரனுக்கு ஒப்பான செல்வத்தைக் கொடுப்பவளும், கந்தர்வர், யக்ஷர், உரகர் முதலியவர்களால் தொழப்பட்ட திருவடிகளை உடையவளும், ஜாதி, சம்பகம், மல்லிகை ஆகிய மலர்களால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவளும், புன்னாக வனத்தின் தலைவரின் மனைவியும் தேவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

उद्यत्कोटि विकर्तनद्युतिनिभां मौर्वीं भवाम्भोनिधेः
उद्यत्तारक नाथ तुल्य वदनां उद्योतयन्तीं जगत्
हस्तन्यस्त शुकप्रणाळसहितां हर्षप्रदां अम्बिकां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥ ३ ॥

3. உத்யத்கோடி விகர்த்தனத்யுதிநிபாம்
மௌர்ஷீம் பவாம்போநிதே:
உத்யத்தாரகநாத துல்யவதநாம்
உத்யோதயந்தீம் ஜகத் |
ஹஸ்தந்யஸ்த சுகப்ரஸூந ஸஹிதாம்
ஹர்ஷப்ரதாமம்பிகாம்
ஸ்ரீபுன்னகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ॥

உதயமாகிற கோடிக்கணக்கான சூரியர்களுக்கொப்பான ஒளியை உடையவளும், பிறவிக்கடலைத் தகர்த்தெறிபவளும், உதயமாய்க் கொண்டிருக்கின்ற நக்ஷத்திரக்கூட்டங்களின் தலைவனான சந்திரன் போன்ற முகத்தை உடையவளும், உலகத்தை விளங்கச் செய்பவளும், கிளியையும், தாமரைப் பூவையும் கையில் கொண்டு பக்தர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிற புன்னகவனத் தலைவரின் மனைவியான ஸ்ரீ கோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

कल्याणीं कमनीयमूर्ति सहितां कर्पूरदीपोज्वलां
कर्णान्तायतलोचनां कलरवां कामेश्वरीं शङ्करीम् ।
कस्तुरी तिलकोज्वलां सकरुणां कैवल्य सौख्यप्रदां
श्रीपुन्नाग वनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥४॥

4. கல்யாணீம் கமநீயமூர்த்திஸஹிதாம்
கர்ப்பூர தீபோஜ்வலாம்
கர்ணாந்தாயத லோசனாம் களரவாம்
காமேச்வரீம் சங்கரீம் |
கஸ்தூரீ திலகோஜ்வலாம் ஸகருணாம்
கைவல்ய ஸௌக்யப்ரதாம்
ஸ்ரீபுன்னகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ॥

கல்யாணியாயும் மிகவும் அழகான திருமேனியைக் கொண்டவளும், கர்ப்பூர தீபங்களால் பிரகாசிக்கிறவளும் காது வரையில் நீண்ட கண்களை உடையவளும், இனிமையான குரலையுடையவளும், காமேச்வரியாயும், சங்கரியாயும், கஸ்தூரிப்பொட்டால் விளங்குகிறவளும், கருணையுடன் கூடியவளும் மோக்ஷம் என்னும் அழியாத ஸௌக்கியத்தைக் கொடுப்பவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்

वैडूर्यादि समस्त रत्न खचिते कल्याण सिंहासने
स्थित्वाऽशेषजनस्य पालनकरीं श्रीराजराजेश्वरीम् ।
भक्ताभीष्टफलप्रदां भयहरां भण्डस्य युद्धोत्सुकां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥ ५ ॥

5. வைடுர்யாதி ஸமஸ்த ரத்னகசிதே
கல்யாண ஸிம்ஹாஸனே
ஸ்தித்வா (அ)சேஷஜனஸ்ய பாலனகரீம்
ஸ்ரீராஜ ராஜேச்வரீம் |
பக்தாபீஷ்ட பலப்ரதாம் பயஹராம்
பண்டஸ்ய யுத்தோத்ஸுகாம்
ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ||

வைடூர்யம் முதலிய எல்லா ரத்தினங்களாலும் அமைக்கப் பட்ட ஸிம்மாஸனத்தில் அமர்ந்து உலக ஜனங்களைக் காப்பவளும், ராஜ ராஜர்களுக்குத் தலைவியாயும், பக்தர்களின் இஷ்டத்தைக் கொடுப்பவளும், பயத்தைப் போக்கடித்து பண்டன் என்னும் அரக்கனோடு போர்புரிவதில் ஆர்வமுள்ளவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

शैलाधीशसुतां सरोजनयनां सर्वाघविध्वंसिनीं
सन्मार्गस्थित लोकरक्षणपरां सर्वेश्वरीं शाम्भवीम् ।
नित्यंनारद तुम्बुरु प्रभृतिभिः वीणाविनोदस्थितां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥६॥

6. சைலாதீசஸுதாம் ஸரோஜநயனும்
ஸர்வாகவித்வம்ஸிநீம்
ஸன்மார்க்கஸ்தித லோகரக்ஷணபராம்
ஸர்வேச்வரீம் சாம்பவீம் ।
நித்யம் நாரத தும்புரு ப்ரப்ருதிபி:
வீணுவிநோதஸ்திதாம்
ஸ்ரீபுன்னுகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ॥

மலையரசனின் மகளும், தாமரை போன்ற கண்களை உடையவளும், பாவக்கூட்டத்தை நாசம் செய்பவளும், நல்வழியில் உள்ள ஜனங்களைக் காப்பவளும் ஸர்வேச்வரியும், சம்புவின் மனைவியாயும், நாரதர், தும்புரு முதலிய தேவ முனிவர்களுடன், வீணை நாதம் செய்பவளும் புன்னுகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

पापारण्य दवानलां प्रभजतां भाग्यप्रदां भक्तिदां
भक्तापत्कुल शैलभेदनपविं प्रत्यक्षमूर्तिपराम् ।
मार्कण्डेय पराशरादिमुनिभिः संस्तूयमानां उमां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥७॥

7. பாபாரண்ய தவாநலாம் ப்ரபஜதாம்
பாக்யப்ரதாம் பக்திதாம்
பக்தாபத்குலசைல பேதநபவிம்
ப்ரத்யக்ஷமூர்த்திம் பராம் ।

மார்க்கண்டேய பராசராதி முநிபி:
ஸம்ஸ்தூயமாநாம் உமாம்
ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ॥

தன்னை அண்டினவர்களின் பாவமாகிற காட்டிற்குத் தீயாயும், பாக்கியத்தையும் பக்தியையும் ஒருங்கே கொடுப்பவளும், பக்தர்களின் மலைபோன்ற ஆபத்துக்கு வஜ்ராயுதம் போன்றவளும், நேரில் சாக்ஷி கொடுப்பவளும், மார்க்கண்டேயர், பராசரர் முதலிய முனிவர்களால் நன்கு துதிக்கப்படுபவளும், உமாதேவியும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

चेतारण्य निवासिनीं प्रतिदिनं स्तोत्रेणपूर्णाननां
त्वत्पादाम्बुजसक्तपूर्ण मनसांस्तोकेतरेष्टप्रदाम् ।
नानावाद्यवैभव शोभितपदां नारायणस्यानुजां
श्रीपुन्नागवनेश्वरस्य गहिषीं ध्यायेत् सदा गोमतीम् ॥८॥

8. சேதாரண்யநிவாஸிநீம் ப்ரதிதினம்
ஸ்தோத்ரேண பூர்ணாநநாம்
த்வத்பாதாம்புஜ ஸக்தபூர்ண மனஸாம்
ஸ்தோகேதரேஷ்ட ப்ரதாம் ।
நாநாவாத்யவைபவ சோபிதபதாம்
நாராயணஸ்யாநுஜாம்
ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்
த்யாயேத் ஸதா கோமதீம் ॥

மனதாகிற காட்டில் வஸிப்பவளும், தினமும் பக்தர்களின் துதியினால் மலர்ந்த முகமுடையவளும், தன் திருவடித் தாமரைகளில் எப்பொழுதும் மனதைச் செலுத்திய

பக்தர்களுக்கு அளவற்ற வரங்களைக் கொடுப்பவளும், பலவிதமான வாத்தியங்களினால் விளங்குகிற திருவடிகளை உடையவளும், நாராயணனின் உடன் பிறந்தவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்,

ஸ்ரீ ஆதி சங்கரர் இயற்றியதாகக் கருதப்படுகிற ஸ்ரீகோமதி அஷ்டகம் ஸ்ரீ. P. N. நாராயண சாஸ்திரிகள் எழுதிய தமிழுரையுடன் முற்றிற்று.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்



ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச்செய்த

# ।। अर्धनारीश्वरस्तोत्रम् ।।

# அர்த்த நாரீச்வர ஸ்தோத்ரம்

தமிழ் உரை:
ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக
P. N. நாராயண சாஸ்திரிகள்

चाम्पेयगौरार्धशरीरकायै कर्पूरगौरार्धशरीरकाय ।
धम्मिल्लकायै च जटाधराय नमः शिवायै च नमः शिवाय ॥१॥

சாம்பேய கௌரார்த்தசரீரகாயை
கர்ப்பூரகௌரார்த்த சரீரகாய |
தம்மில்லகாயை ச ஜடாதராய
நம: சிவாயை ச நம: சிவாய || 1 ||

1. சம்பகமலர் போன்ற வெளிளையான பாதி உடலை உடையவளும், கர்ப்பூரம் போன்று வெளுத்த பாதி உடலை உடையவரும், அழகான பின்னல்களை உடையவளும், ஜடை முடியைக் கொண்டவருமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

कस्तूरिकाकुङ्कुमचर्चितायै चितारजः पुञ्ज विचर्चिताय ।
कृतस्मरायै विकृतस्मराय नमःशिवायै च नमःशिवाय ॥ २ ॥

கஸ்தூரிகா குங்குமசர்ச்சிதாயை
சிதாரஜ: புஞ்ஜவிசர்ச்சிதாய ।
க்ருதஸ்மராயை விக்ருதஸ்மராய
நம: சிவாயை ச நம: சிவாய ॥ 2 ॥

2. கஸ்தூரி குங்குமம் இவைகளால் அலங்கரிக்கப் பட்டவளும், பஸ்மத்தால் பூசப்பட்ட உடலையுடையவரும், மன்மதனை உயிர்பெறச்செய்தவளும், காமனை எரித்தவருமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

झणत्क्वणत्कङ्कणनूपुरायै पादाब्जराजत्फणि नूपुराय ।
हेमाङ्गदायै भुजगाङ्गदाय नमःशिवायै च नमःशिवाय ॥ ३ ॥

ஜணத்க்வணத் கங்கணநூபுராயை
பாதாப்ஜராஜத்பணி நூபுராய ।
ஹேமாங்கதாயை புஜகாங்கதாய
நம: சிவாயை ச நம: சிவாய ॥ 3 ॥

3. ஒலிக்கிறக் காப்பு கால் கொலுஸுகளையுடையவளும், பாம்புகளாகிற கால் சலங்கையை உடையவரும், தங்கத் தினலான தோள்வளைகளை உடையவளும், பாம்பையே தோள்வளையாகக் கொண்டவருமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

विशालनीलोत्पललोचनायै विकासिपङ्केरुहलोचनाय ।
समेक्षणायै विषमेक्षणाय नमःशिवायै च नमःशिवाय ॥ ४ ॥

விசாலநீலோத்பல லோசநாயை
விகாஸிபங்கேருஹ லோசநாய |
ஸமேக்ஷணாயை விஷமேக்ஷணாய
நம: சிவாயை ச நம: சிவாய || 4 ||

4. அலர்ந்த கருங்குவளைமலர் போன்ற விழிகளை உடையவளும், மலர்ந்த தாமரை போன்ற கண்களை உடையவரும், நேரான கண்களை உடையவளும், முக்கண்ணருமான 'சிவா' என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

मन्दारमालाकलितालकायै कपालमालाङ्कित कन्धराय ।
दिव्याम्बरायै च दिगम्बराय नमःशिवायै च नमःशिवाय ॥५॥

மந்தாரமாலா கலிதாலகாயை
கபாலமாலாங்கித கந்தராய |
திவ்யாம்பராயை ச திகம்பராய
நம: சிவாயை ச நம: சிவாய || 5 ||

5. மந்தார மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட முடியை உடையவளும் கபால மாலைகளை கழுத்திலணிந்தவரும், நல்ல பட்டுவஸ்திரங்களையணிந்தவளும், திசைகளையே வஸ்திரமாகக் கொண்டவருமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

अम्भोदरश्यामल कुन्तलायै तटित्प्रभाताम्र जटाधराय ।
निरीश्वरायै निखिलेश्वराय नमःशिवायै च नमःशिवाय ॥ ६ ॥

அம்போதரச்யாமல குந்தலாயை
தடித்ப்ரபாதாம்ர ஜடாதராய |
நிரீச்வராயை நிகிலேச்வராய
நம: சிவாயை ச நம: சிவாய || 6 ||

6. மேகம்போல் கருத்த முன்மயிர்களையுடையவளும் மின்னல் ஒளிபோல் சிவந்த ஜடைமுடியுடையவரும், தனக்கு மேல் இல்லாதவளும், உலகுக்கெல்லாம் ஈசனுமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

प्रपञ्चसृष्ट्युन्मुख लास्यकायै समस्त संहारक ताण्डवाय ।
जगज्जनन्यै जगदेकपित्रे नमःशिवायै च नमःशिवाय ॥ ७ ॥

ப்ரபஞ்சஸ்ருஷ்ட்யுன்முக லாஸ்யகாயை
ஸமஸ்த ஸம்ஹாரக தாண்டவாய |
ஜகஜ்ஜனந்யை ஜகதேகபித்ரே
நம: சிவாயை ச நம: சிவாய ‖ 7 ‖

7. உலகைப் படைக்கும் நடனத்தைக்கொண்டவளும் எல்லாவற்றையும் அழிக்கும் ஆனந்த தாண்டவரும், உலகுக்குத் தாய்தகப்பன்களுமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

प्रदीप्तरेखोज्ज्वलकुण्डलायै स्फुरन्महापन्नग भूषणाय ।
शिवान्वितायै च शिवान्विताय नमःशिवायै च नमःशिवाय ॥८॥

ப்ரதீப்தரேகோஜ்வல குண்டலாயை
ஸ்புரன்மஹா பன்னகபூஷணாய |
சிவாந்விதாயை ச சிவாந்விதாய
நம: சிவாயை ச நம: சிவாய ‖ 8 ‖

8. ஒளி விடுகிற காதுகுண்டலங்களை உடையவளும் பெரிய பாம்புகளை அணிகலன்களாகக் கொண்டவரும், எப்பொழுதும் மங்களமான உருவங்கொண்டவர்களுமான 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

एतत्पठेदष्टकमिष्टदं यो भक्त्या स मान्योभुविदीर्घजीवी ।
प्राप्नोतिसौभाग्यमनन्तकालं भूयात्सदातस्यसमस्तसिद्धिः ॥ ९ ॥

ஏதத்படேத் அஷ்டகமிஷ்டதம்யோ
பக்த்யா ஸ மான்யோ புவிதீர்க்கஜீவீ ।
ப்ராப்நோதி ஸௌபாக்யம் அனந்தகாலம்
பூயாத்ஸதா தஸ்ய ஸமஸ்தஸித்தி: ॥ 9 ॥

9. எவனொருவன் இந்த எட்டு சுலோகங்களைப் படிக்கிருனோ அவன் உலகில் புகழ்பெற்று நீண்ட ஆயுளுடன் வெகுகாலம் தனக்கு வேண்டியவைகளை அடைந்து எல்லா வித ஸித்திகளையும் நன்கு பெற்று விளங்குவான்.

ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய அர்த்தநாரீச்வர ஸ்தோத்ரம்
தமிழ் உரையுடன் முற்றிற்று.

சிவம்

---

## பிறப்பிலிப் பெருமான்

தாமரையில் அமர்ந்த பிரம்மதேவனுக்கு "பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்" என்றும் விஷ்ணுவுக்கு "ஜாதோ ப்ருஹந்" என்றும் வேதம் பிறப்பைக் கூறுகின்றது. ஆனல் அதே வேதம் சிவபிரானை "அஜாதோருத்ர:" என்று பிறப்பற்றவர் என்று கூறுகின்றது. ஆதலால் பிறவிப்பிணிக்குப் பயந்த நான் பிறப்பில்லாப் பெருமானுகிய சிவபிரானையே சரணமடைகின்றேன்.

—ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர்
(பஞ்சரத்னஸ்துதி—1)

---

உ
திருச்சிற்றம்பலம்

# சிவபெருமான் புகழ்மாலை

ஆக்கியோன்:

வித்துவான் பெ. கு. வரதராசன் எம்.ஏ., பி.ஓ.எல்., பி.டி.

## முன்னுரை

பூவுல கதனில் பூத்தோ ரெல்லாம்
பூவென வுதிர்தல் புதிதிலை; பூத்தால்
அடியார் கையில் அகப்பட் டிறைவன்
முடிமீ தமரும் முத்தியே பெறுவாய்;
இலையேல் இருந்த இடத்துனைக் காணும்
தொலைசேர் வண்டு துய்ப்பதற் கான
தேனைத் தந்து திளைத்திட வாழ்க;
தேனு மில்லை; தெளிவுடை யோர்க்குன்
வண்ண நிறத்தால், வடிவின் அழகால்
எண்ண மெழுப்பி யிசைபட வாழ்க;
புதரிடைத் தோன்றிப் பிறர்கண் படாவிடில்
காட்சிக் கரிதாய்க் கருத்திற் கெளிதாய்
மாட்சிமைப் பட்ட மணத்தால் வாழ்க.
இப்படிப் பட்ட இயல்புக ளுள்ளே
எப்படிப் பட்ட முறையிருந் தேனும்
வாழ்ந்து காட்டுத லேவாழ் வாகும்.
தாழ்ந்து விடாது தான் கடைத் தேற
சிவனை நினைப்பாய், சிந்தை மகிழ்வாய்
அவனைச் சார்ந்த அடியார் காட்டும்
துறையில் மூழ்கித் துன்பம் தவிர்ப்பாய்;

இறையுந் தவிரா திருத்தியென் நெஞ்சே!
இறைவன் இருதாள் எளிதிற் பற்ற
மனத்திற் கிங்கோர் மாற்றங் கூறும்
மனத்திற் றேன்றிய மலர்பறித் தவற்றைச்
சிவபெரு மான்புகழ் மாலையான் செய்தேன்;
தவநெறி பெற்றுத் தரணியில் உள்ளோர்
பெற்ற மாலையால் பெரும்பே
றுற்றவர் வாழ்க! வாழ்க வுவந்தே.

## கணபதி துதி

உலக முதல்வன் ஒருவன் இருதாள்
நிலவு மனத்தில் நிறையும்—அலகில்
பெருமை புனைய பிழைகள் நலிய
வருக களிறே மகிழ்ந்து.

## அவையடக்கம்

பூவொடு நாரும் மணம்பெறும்; புன்மலர்தான்?
காவொடு சேரக் கதிபெறும்;—பாவொடு
ஈசன் புகழ்சேர்த்தேன் என்பத னலென்னை
நீசனென் றுலும் நினை.

## மூவரது பெருமையும் நினைவும்

பாட்டால் முதலையுண்ட பாலகனைத் தந்திட்டான்;
ஏட்டால் சிவநெறியை ஏற்றுவித்தான்;—காட்டருஞ்சீர்
தொண்டால் உயர்ந்தான்; துயர்களைந்த வப்பிறவி
கொண்டார் திறத்தைக் குறி.

## மாணிக்கவாசகர் துதி

அழுதால் உனைப்பெற லாமெனுந் தேனைத்
தொழுதார் சுவைக்கத் தொகுத்தாய்—கழுவாய்நீ
காட்டிவிட்டாய் மாணிக்க வாசகா கண்டுன்தாள்
சூட்டிவிட்டேன் நெஞ்சிற் குறித்து.

## திருமுறைகளும் அவற்றின் பயனும்

மூவர்தே வாரம் முதிர்ந்தசுவை வாசகமும்
பாவிசையும் பல்லாண்டும் பாடுகவே—மூலனூர்
மந்திரமும் மாண்பார் தொகை நூலும் சேக்கிழார்த்
தந்திரமும் பாடத் தகும்.

பிறவிக் கடல்விழுந்தார் பேரின்பம் காணத்
துறவித் துயர்தாங்க வேண்டா—இறவித்
துயர்போக்கும் தூய திருமுறைகள் நாளும்
உயர்வாக ஓதி வரின்.

## நூல்

### சிவபெருமானை வணங்குவாயாக

தேவர் தளைநீக்கித் தேவ அணங் கைமணந்தான்
மூவர் மகிழ முருகேசன்—யாவர்
இவனைப்போல் பிள்ளையை யீன்றெடுத்தார்; ஈன்ற
சிவனுக்கே தாழ்த்துன் சிரம். 1

### பல சிறப்புக்களும் பெற்ற ஒருவன்

திருநீல கண்டன் சிவபெருமான் பித்தன்
அருளாளன் ஆண்டவன் ஆதி—குருநாதன்
என்றெல்லாம் சொல்லி அழைக்கும் ஒருவன்தான்
நன்றெல்லாம் ஒன்றானன் நாடு. 2

### ஐந்தெழுத்தின் பெருமை

தேடித் திரிந்தலைந்தாய் தேசிழந்தாய் நெஞ்சமே
ஓடிப் பரவிடநீ பற்றற்றாய்—ஓடிப்போம்
செல்வத்தை யெண்ணாது சிந்தையில் எப்போதும்
நல்வித்தை நாடு நயந்து. 3

நயந்துநீ நாடும் நலமான வித்து
பயன் தரும்சொல் பஞ்சாக் கரமாம்—உயர்ந்த
சிவாய நமவென்னும் சீர்சொல்லி வாழ்வ
சிவாயமெப் போது முனக்கு 4

### அதை ஓதுவார் அடையும் பயன்

அல்லும் பகலும் அரனை நினைவார்க்குக்
கொல்லும் கொடுவினைகள் கூடாவே—வெல்லும்
திருவைந் தெழுத்தைத் தெளிவாகக் கூறி
உருகிவந் திப்பவர்க் கு. 5

பஞ்சாக் கரமோதி பாடு கிடந்தார்க்கு
எஞ்சாக் குறைகள் எதுவுமே—தஞ்சம்
சிவனை யடைந்தார்க்குச் சிவமுத்தி யுண்டாம்
அவனை யடையாதார்க் கென்? 6

### அடியார்க்குரிய அடையாளங்கள்

மார்பில் உருத்திராக்க மாலை மனத்தகத்தே
சேர்தல் சிவபெருமான் சிந்தனையே—நேர்சடையும்
நெற்றியிலே பூசும் திருநீறும் நேர்வாழ்வும்
உற்றவரே ஈசர்க் குறவு. 7

மனத்தால் இவனை மறவாமல் எண்ணி
வனத்தார் மலரைப் பறித்தே—இனத்தா
ருடன்கூடித் தூவுவா ருள்ளன் புடையா
ருடன்கூடி வாழ்வா யுவந்து. 8

### நெஞ்சிற்கறிவுரை

நெஞ்சே!நீ ஆண்டானை நீள நினையாமல்
தஞ்ச மடைந்தாய் தரணிசுகம்—விஞ்சும்
புகழ்சேர்க்கும் ஈசன் பொதுமை யுணரா
திகழ்சேர வாழ்கின்றாய் என்? 9

வஞ்சகரைச் சார்ந்தேன் வகையறியா தேவாழ்ந்தேன்
தஞ்சமெனக் கூறித் தலைவணங்கேன்—நெஞ்சே!
சிவனை நினையாமல் சீரழிந்து போவார்க்(கு)
அவனே துணையன்றோ? ஆம். 10

வழுத்தாது வாழும் மடநெஞ்சே! அன்பு
பழுத்தாலும் பாடுமடி யார்க்கே—கழுத்தில்

கறுப்புடையான் என்றும் கருணை பா லிப்பான்
பொறுப்புடையான் ஈசனென்றே பேசு. 11

## அவனிடத்துள்ள அன்பு வினையைச்சுடும்

அழுகின்றேன் உன்னை அகமுருகப் பாடித்
தொழுகின்றேன் என்னைத் தொடரும்—பழுதெல்லாம்
தீயிட்ட பஞ்சாகத் தீரும் சிவனேயுன்
மேலிட்ட அன்பால் மெலிந்து 12

## பிழை பொறுக்கும் பெரியோன்

எண்ணி மகிழ்வார்க் கிதயங் களிக்குமுக்
கண்ணன் பெருமை கணித்திடவோ—மண்ணில்
பிறந்தமுதல் செய்த பிழைகள் அனைத்தும்
இறந்திடச் செய்வா னிவன். 13

நான்செய் பிழையை நலியச்செய் வானைநிதம்
நான்செய் கரும நலமுணர்த்தி—நான்செய்
வினைப்பயனால் என்னை விரும்பியாட் கொண்டான்
தனைப்புகழும் வாழ்வே தகும். 14

## சிவபெருமானிடம் வேண்டுதல்

சிந்திப் பவர்குறையைத் தீர்க்கத்தெய் வானையுடன்
செந்திற் பதிவாழும் சீர்முருகன்—தந்தையே
நான்செய் பிழைபோக்கும் நாதன் நடேசன்தாள்
தானுறையும் என்னுளத்தில் தான். 15

உன்னிடத்திற் கூறி யிரப்பதற் கொன்றுண்டாம்
நன்னிடத்தை யேநாடும் நாயகனே—என்னிடத்தில்
உண்டான தீமை ஒருகோடி மேலாகும் 16
கண்டா யவைபோற்றிக் கா.

## உண்மையறியாது உயர்விழந்தேன்

நில்லாத செல்வம் நிலைத்த சுகமென்றே
பொல்லா உலகில் பொலிவிழந்தேன்—நல்லாய்
படைத்தவனை நெஞ்சா லும் பாடா தொழிந்தேன்
துடைத்திடநான் பட்ட துயர். 17

நாடினுர்க்கின்பம் நயந்தருளால் நல்குவான்
கூடினுர்க் கென்றும் குறைவில்லை—தேடி
வருவார்க்கும் வாரார்க்கும் வள்ளல் வழங்கும்
ஒருநோக் குடையா னுளன். 18

அறிவூட்டும் நூலை அறியா தொருவன்
வெறியூட்டும் நூலை விரும்பி—நெறிகெட்
டலைதலைப் போலானேன்; அந்தோ! சிவனே!
நிலைகாணேன் உன்னை நினைந்து. 19

வானகத்தில் மாமலையில் மண்மீது நீகாணும்
ஊனகத்தில் எல்லாம் உளனன்றி—நீயகத்தும்
காணலாங் கண்பெறத்தான் வேண்டும் பெறவே
வீணவா நீக்கி விடு. 20

மனக்கவலையோட்டும் வழி

கொண்ட கவலையெல்லாம் கூட்டோடே ஒட்டிடக்
கண்ட ஒருவனை நான் கண்டுகொண்டேன்—தொண்டன்
அவனுக்கே ஆகி அகமும் புறமும் 21
சிவனுக்கே யாக்கி விடல்.

சிவபெருமானின் திருவடிச் சிறப்பு

செஞ்சடையான் திக்கரத்தான் சோரும் நிலாகங்கை
அஞ்சலென ஏற்ற அருளுடையான்—தஞ்சம்
எனக்கூறி வந்தவரை ஏற்கும் இவன்தாள்
மனத்தூறு மின்பச் சுவை. 22

திருவடி பெற்றவர் பெறும் பேறு

வாலறிவும் செல்வமுடன் வாழுளும் பேறுண்டாம்;
காலனவன் துன்பம் கடுகாது; -மேலவனும்
கங்கை சடைகொண்டான் கன்னி யிடங்கொண்டான்
எங்களிறை சார்ந்தா ரிவர்க்கு. 23

எண்ணுகின்ற இன்பங்கள் எல்லாம் பெறச்செய்வான்
கண்ணுதலான் எந்தை கருணையுளான்—பண்ணிறைந்த
செந்தமிழாற் பாடின் சிரந்தாழ்த்திக் கைகூப்பி
நொந்தழுவார்க் கில்லை நொடி. 24

### இரக்கும் இழிவில்லையாம்

இல்லை யெனச்சொல்லி ஈயாதான் முன்னின்று
பல்லை இளிக்கும்உன் பாவம்போம்—தொல்லை
வினைபோம்; தொடரும் வினைபோம்; சிவனே
எனையாளும் ஈசனென்றக் கால். 25

### மறவாமல் அவனையே நம்பியிருத்தல்

அன்புடையான் யார்க்கும் அருளுடையான் ஆனதவம்
முன்புடையார்க் கென்றுமே முன்னிற்பான்—என்னுடை
தாய்
பாகமே கொண்ட பசுபதியை நான்மறக்க
ஆகுமோ ஆகா திது. 29

எத்தனைதான் துன்பம் எனைநோக்கி வந்தாலும்
பித்தனையே நம்பிப் பிழைத்திடுவன்—அத்தனையும்
ஏற்றென் இடர்களைவான் என்னுளத்தே தானுறைவான்
போற்றிப் பொறுத்திடுவா னால். 27

### சிவபெருமானின் திருவடிகளை உள்ளத்தில் எழுந்தருளவித்தல்

நெஞ்சக் கருங்கல்லை நெக்குவிடச் செய்தாங்கே
கொஞ்சங் கரிசலும்நீர் கூட்டுவித்தால்—விஞ்சுமனப்
போதும் மலர்ந்தவன்றன் பொன்னடிகள் தோன்றுவோ?
ஓதுவதும் பூஜை யுணர்வு. 28

### திருவடியே கதி

குன்றுதோ றுடிக் குறையிரந்து கும்பிடுவார்
என்றுமே இன்பம் பெறச்செய்வான்—குன்றுருவ
வேல்வாங்கி நின்றவன் வேத முதல்வனப்பன்
கால்தாங்கி வாழ்வாய் கதி. 29

சிவபெருமான் சீரடிகள் வாழ்க!! சிறந்த
அவனடியார் வாழ்க! அனைத்தும்—அவனும்
புகழ்சேர் திருமுறைகள் வாழ்க புவியில்
இகழ்நீங்க எல்லா மினிது. 30

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

# மத்ஸ்யபுராணக் கதைகள்

Dr. ந. கங்காதரன், M. A., M. litt., Ph. D.,
ஸம்ஸ்க்ருத விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக்கழகம்

## முன்னுரை

பதினெட்டு மஹாபுராணங்களில் ஒன்ருனதும் மிகப் பழமையானதுமான மத்ஸ்யபுராணம் 290 அத்தியாயங்கள் கொண்டது. திருமாலைக் குறித்துத் தவமியற்றிய மனுவின் தவத்தினுல் மகிழ்ந்த திருமால் அவனை வரம் யாதுவேண்டும் என்று வினவ அவனும் பிரளயகாலம் வந்துற்றபொழுது உலகமனைத்தையும் காத்திடும் ஆற்றலைத் தான் பெற்றிட வேண்டினுன். அவ்வாறே அருளிய திருமால் முன்னோர் களுக்கு அஞ்ஜலி செய்ய நீர் ஏந்திய மனுவின் கையளவு நீரில் ஒரு மீன் வடிவில் தோன்றித் தன்னைக் காத்தருள வேண்டினுர். பின்னர் படிப்படியாக அதன் உருவம்பெரி தாவதைக் கண்டு வியந்த மனுவும் அதை முறையே பெரும் நீர்த்தேக்கங்களில் இட்டு காத்துவர, மீனும் 'என்னை இம்மாதிரி காக்குங்கால் பிரளயகாலம் வந்துற்ற பொழுது உன்னையும் உலகினையும் காப்பேன்'' என்று கூறியது. பின்னர் பிரளயம் வந்தபொழுது உலகின் உயிரினங் களனைத்தையும் மனுவுடன் ஒரு படகில் ஏறும்படிச் செய்து அதை நீரில் மூழ்காமல் காத்தருளல் முதல் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. பின்னர் மனுவிற்கு மீன் வடிவில் தோன் றிய திருமால் கதைகளைக் கூறுவதாகக் கொண்டு அமைந் திருப்பதால் இப்புராணம் மத்ஸ்யபுராணம் (மத்ஸ்யம் என்ருல் மீன் என்று பொருள்) என அழைக்கப்படுகிறது.

மிகப் பழமையான புராணமானபடியால் புராணங்களுக்கு இருக்க வேண்டிய ஐம்பெரும் அம்சங்கள் பெருமளவு காணப்படுகின்றது என்று சொல்லலாம். உலகின் படைப்பைப் பற்றியும், மனுவின் வழி தோன்றியவர்களின் விவரமும், சந்திர சூரிய வமிச மன்னர்களின் பரம்பரையும், மற்றும் பல்வேறு நோன்புகள், தானங்கள், புண்ணிய தல வரலாறுகள் முதலியனவும், விண்ணவர் தானவர் இவ்விருவருக்குமிடையே நடைபெற்ற கடும் போரைப் பற்றியும், தாரகன் என்னும் அரக்கனின் வரலாறும், திரிபுரம் எரித்த வரலாறும் இங்கு விவரித்து கூறப்பட்டுள்ளன. மேலும் புண்ணிய பூமியான காசியின் மேன்மையை விளக்கி விரிவாகவும், சிவ வழிபாட்டு முறைகளை விளக்கும் பல்வேறு அம்சங்களையும் கொண்டுள்து இப்புராணம். இப்புராணத்திலும் யயாதி முதலானவர்களின் வரலாறு போன்ற பல கதைகள் இருப்பினும் சிவபரமாக உள்ள கதைகளை மட்டும் இங்கே காண்போம்.

## மயன் என்னும் அரக்கனின் வரலாறு:

முன்னொரு ஸமயம் மயன் என்றொரு அரக்கனிருந்தான். விண்ணவரால் போரில் தோல்வியுற்ற அவன் கடுந்தவம் புரிந்தான். அவனுடன் வித்யுந்மாலீ, தாரகன் என்னும் இரு அரக்கர்களும் தவம் செய்தனர். அவர்கள் மூவரும் தவம் செய்யுங்கால் மூன்று எரியும் நெருப்பு ஜ்வாலைகள் போல் காட்சி அளித்தனர். குளிர் காலத்தில் நீரில் நின்றும் கோடைக்காலத்தில் நாற்புறமும் நெருப்பு சூழவும் மேலே சூரியனின் கடும் கதிர்கள் எரிக்கவும், மழைக்காலத்தில் வானிலிருந்தும் தவமியற்றினர். அவர்கள் தவத்தினால் உலகமனைத்தும் அல்லலுற்றது. அவர்கள் தவத்தினால் மகிழ்ந்த நான்முகன் அவர்கள் முன் தோன்றி அவர்களைக் கேட்டார்.

நான்முகன்: நான் வரமளிக்க உங்கள் முன் தோன்றி உள்ளேன். நீங்கள் வேண்டுவது என்ன?

மயன்: 'தாரகாமயம்' என்னும் போரில் நாங்கள் முன்னர் தேவர்களால் வெல்லப்பட்டோம். அதனுல் யாது செய்வது என்றறியாது தவம் செய்யத் துவங்கினோம். இப்பொழுது தேவர்களாலும், மற்றும் முனிவர்களின் சாபத்தினுலும் வேறு எந்தவிதமாகவும் அழிக்க முடியாத மூன்று கோட்டைகளை எங்களுக்கு அருள வேண்டும்.

நான்முகன்: யாதொன்ருலும் அழிவற்றது என்பது இயலாத காரியம்.

மயன்: அப்படியாயின் சிவனுர் ஒரே ஸமயம் ஒரு அம்பினுலேயே எங்கள் கோட்டைகளை எரிக்கட்டும். மற்ற எந்த காரணத்தின் மூலமாகவும் எங்களுக்கு அழிவு ஏற்படக்கூடாது.

நான்முகன்: அப்படியேயாகட்டும்.

இவ்விதம் அருளி நான்முகன் மறைந்த பின்னர் மயன் மிகவும் ஆலோசனை செய்து பொன், வெள்ளி, இரும்பு இவைகளால் தனித்தனியாக ஆன மூன்று மாபெரும் அளவுகளுள்ள கோட்டைகளை உருவாக்கினுன், இவைகள் முறையே வானத்திற்கு மேல்புறமும், வானிலும், புவியிலும் அவ்வரக்கர்கள் விருப்பின்படி சென்று மற்றவரை அச்சுறுத்துமாறு இயக்கினுன். தங்கள் இருக்கைக்கு உகந்தமாதிரி அவைகளில் நீர்நிலைகள், நந்தனங்கள் முதலியன ஏற்படுத்தி அரக்கர்கள் அனைவரும் தம் சுற்றம் சூழ அக்கோட்டைகளில் அந்தி வேளையில் நுழைந்தனர். பின்னர் ஒரு ஸமயம் மயன் அரக்கர்களைக் கூட்டி தான் கண்ட கெட்ட கனவைக் கூறி அவர்களை அறவழியில் தளராது செல்ல வேண்டினுன். முன்னர் நல்வழியின் பயனுக பெரும் பேற்றுடன் வாழ்ந்து வந்த அவர்கள் தமக்கு இன்னல் வரும் என்றறிந்த உடனேயே அறவழியைத் துறந்து தீயவழியில் செல்லத் தலைப்பட்டனர். மயனுல் உரைக்கப்பட்ட அறிவுரைகளை

அவர்கள் புறக்கணித்து தேவர்களின் நந்தவனம், வசிக்குமிடம் முதலியனவற்றை அழிக்க முற்பட்டனர்.

இதனல் அல்லலுற்ற ஆதித்யர்களி, வஸுக்கள், ஸாத்யர்கள், பித்ருக்கள், மருத்கணங்கள் முதலியவர்கள் நான்முகனிடம் முறையிட்டனர். தேவர்களின் முறையீட்டைக் கேட்ட நான்முகன் தான் மயனுக்களித்த வரன் செயல் படுங்காலம் நெருங்கிவிட்டது என்று கூறி அவர்களின் முப்புரங்களையும் ஒரே பாணத்தால் அழிக்க வல்லவர் சிவனுரே என்று கூறி அவர்களனைவருடன் கைலாயம் சென்று அன்னை உமையுடனும் நந்திகேசுவரருடன் கூடிய சிவனுரைப் பின்வருமாறு புகழ்ந்து பாடினர்.

நமோ பகவதேசாய ருத்ராய வரதாய ச |
பசூனும் பதயே நித்யம உக்ராய ச கபர்தினே ||

மஹாதேவாய பீமாய த்ரயம்பகாய ச சாந்தயே |
ஈசானுய பயக்னுய நமஸ்த்வந்தக காதினே ||

நீலக்ரீவாய பீமாய வேதஸே வேதஸாஸ்துதே |
குமாரசத்ரு நிக்னுய குமாரஜனகாய ச ||

விலோஹிதாய தூம்ராய வராய க்ரதனுய ச |
நித்ய நீலசிகண்டாய சூலினே திவ்யசாயினே ||

உரகாய த்ரிநேத்ராய ஹிரண்யவஸுரேதஸே |
அசிந்த்யாயாம்பிகாபர்த்ரே ஸர்வதேவஸ்துதாய ச ||

வ்ருஷத்வஜாய முண்டாய ஜடினே ப்ரஹ்மசாரிணே |
தப்யமானுய ஸலிலே ப்ரஹ்மண்யாயாஜிதாய ச ||

விச்வாத்மனே விச்வஸ்ருஜே விச்வமாவ்ருத்ய திஷ்டதே |
நமோ(அ)ஸ்து திவ்யரூபாய ப்ரபவே திவ்யசம்பவே ||

அபிகம்யாய காம்யாய ஸ்துத்யாயார்ச்யாய ஸர்வதா |
பகதானுகம்பினே நித்யம் திசதே யன்மனோகதம் ||

இவ்விதம் அவர்களால் புகழ்ந்து பாடப்பெற்ற சிவனார் அவர்களது துயர் யாது என வினவினார்.

சிவனார்—தேவர்களே! உங்களுக்கு என்ன தீங்கு நேர்ந்தது?

தேவர்கள் –பிரபோ! மயன் என்னும் அரக்கன் முப்புரத்தை நிருமாணித்துள்ளான். அதில் வாழும் அரக்கர்கள் அச்சமற்றவர்களாக எங்களைத் தாக்கி எங்கள் நந்தவனம் முதலியவற்றை அழித்து, தேவ மடந்தையரையும் தூக்கிச் சென்றுள்ளனர். மேலும் இந்திரனின் ஐராவதம் முதலான யானைகளையும் கவர்ந்து சென்றுள்ளனர்.

சிவனார்—நீங்கள் யாவரும் அரக்கர்களினின்றும் அச்சம் தவிர்த்து இருங்கள். முப்புரத்தை நான் அழிக்கின்றேன். அதற்காக நீங்கள் செய்ய வேண்டியதை கவனமாகக் கேளுங்கள். வெற்றி வாகை சூடி வர எனக்கொரு இரதம் ஏற்பாடு செய்யுங்கள்,

சிவனார் கூறியபடியே இரதம் ஒன்றை தேவர்கள் ஏற்பாடு செய்தனர். புவி, மேரு, மந்தர மலைகள், சூரியன், சந்திரன், தேய்பிறை, வளர்பிறை, புதன், அங்காரகன், சனி முதலான கோள்களும், கங்கை, யமுனை, ஸிந்து முதலான ஆறுகளும், மற்றும் அரவங்கள் முதலியனவும் இரதத்தின் பல்வேறு பகுதிகளாகவும் மற்றும் கதை முதலான ஆயுதங்களாகவும் அமைந்தன. இரதத்தைக் கண்டு மெச்சிய சிவனார் அதற்குகந்த தேர்ப்பாகனையும்; ஏற்பாடு செய்யுமாறு கூறினார். இதைக் கேட்ட தேவர்கள் செய்வதறியாது குழம்பி நின்றனர் முன்பே திருமால், ஸோமன், அக்னி, இம்மூவரும் அம்புகள் ஆகிவிட்டபடியால் இப்பொழுது தேர்ப்பாகனாக யார் உகந்தவர் என்ற சிந்தனையிலாழ்ந்தனர். அப்பொழுது அனைவரும் போற்ற நான்முகன் தானே தேரை ஓட்ட முன் வந்தார். பின்னர் நான்முகன் தேரைச் செலுத்தத் துவங்கினார். இரதத்தின் போக்கை புராணம் பின்வருமாறு விவரிக்கின்றது.

ப்ருகுர் பரத்வாஜவஸிஷ்டகௌதமா: க்ரது: புலஸ்த்ய:
புலஹஸ்தபோதனு: |
மரீசிரத்ரிர்பகவானதாங்கிரா: பராசராகஸ்த்யமுகா
மஹர்ஷய: ||
ஹரமஜிதமஜம் ப்ரதுஷ்டுவுர்வசனவிஸைர் விசித்ரபூஷணை: |
ரதஸ்த்ரிபுரே ஸகாஞ்சனசலோ வ்ரஜதி ஸபக்ஷ இவாத்ரி-
ரம்பரே ||
கரிகிரிரவிமேகஸங்நிபா: ஸஜல பயோத நிநாத நாதின: |
ப்ரமத கணு: பரிவார்ய தேவ குப்தம் ரதமமராபி யயு: ஸ்ம
தர்பயுக்தா: =

இதற்கிடையில் முப்புரத்தை அடைந்த நாரத மாமுனி வரை தானவர் யாவரும் வரவேற்று மரியாதை செய்தனர். தகுந்த இருக்கையில் அமர்ந்த மாமுனிவரிடம் மயன் தான் கண்ட கனவை எடுத்துரைத்து தன் ஐயம் தீர்க்கக் கோரினுன்.

நாரதர்:—மயனே! வரும் கெடுதலைக் குறிக்கும் நிகழ்ச்சிகள் எப்படி ஏற்படுகின்றன என்று கூறுகிறேன் கேள். தாரணம் (தாங்குதல்) என்ற பொருளுடைத்த வினைச் சொல்லினின்று 'தர்மம்' என்ற சொல் தோன்றியது. நமக்கு நன்மை பயத்தலால் அதற்கு 'தருமம்' என்று பெயர். இவ்விதமே சான்றோர்கள் கூறியுள்ளனர். அவர்கள் நமக்கு நன்மை பயக்காததை நமக்கு எடுத்துரைப்பதில்லை. நல்வழியினின்றும் பிசகிச் சென்ருல் அவனுக்கு அழிவு ஏற்படும் என்று மறையறிந்தவர் கூறுகின்றனர். தேவர்களுக்கு தீங்கு இழைக்கும் அரக்கர்களுடன் கூடி அவர்களுக்கு உதவி செய்கின்ருய். இதனுல் சினந்த பரமன் உலகமயமான இரதத்தில் ஏறி உன்னை அழிக்க வந்து கொண்டிருக்கின்ருர். அதனுல் இப்பொழுதே அவரைச் சரணடைந்து வழி படுவாயாக.

நாரதமுனிவர் புறப்பட்டுச் சென்றபின்னர், தேவர்களை ஒழித்து தேவலோகத்தையும் தான் நுகர விரும்பிய மயன்

தன் படைவீரர்களை போருக்கு ஆயத்தம் செய்தான். தான் முப்புரத்தின் உட்புறம் அடைந்து மனத்தால் சிவனாரை போற்றிப் பணிந்தான். இதற்கிடையில் முப்புரம் சென்று திரும்பிய நாரதர் இலாவ்ருதவர்ஷம் என்னும் இடத்தில் தேவர்களைக் கண்டு முப்புரத்தில் தான் கண்டதை விவரித்தார். தேவர்களை ஊக்குவித்த பரமன் இந்திரன் முதலானவருடன் போருக்குப் புறப்பட்டார். அவர்களின் படை செல்லும் பொழுது எழுந்த ஒலியினால் கவரப்பட்ட அரக்கர்கள் அவர்களை வியப்புடன் நோக்கி பலவிதமான ஒலிகளையும் எழுப்பிக் கொண்டு தாக்க முற்பட்டனர். அவர்களிடையே கடும்போர் மூளவும், நந்தி, பரமன் கொடுத்த வஜ்ராயுதத்தால் வித்யுந்மாலியை அடிக்க அவன் வேரற்ற மரம்போல கீழே விழுந்தான். இந்தத் துயர்மிக்க செய்தியைக் கேட்ட தாரகாக்ஷன் மிகவும் உக்கிரமாகத் தாக்கி பல கணங்களை வீழ்த்தினான். மயனும் பலவிதமாக சிந்தனை செய்தான்:—"காலமே மிகவும் பலமுள்ளது. காலம் நல்லபடி இருந்தால் எல்லாம் நன்கு கை கூடி வரும்."

ன் மாயையின் பலத்தினால் ஒரு மாபெரும் கிணற்றைத் தோற்றுவித்து அதன் நீரை வித்யுந்மாலியின் மீது தெளிக்க அவனும் கட்டைகளினால் வளர்ந்து கொழுந்து விட்டெரியும் நெருப்பைப் போன்று எழுந்து வந்தான். மிக்க மகிழ்ச்சி அடைந்த மயனும் அவனை அணைத்துக்கொண்டு கொண்டாடினான். மிக்க உற்சாகத்துடன் பேரி முதலானவை முழங்கவும் அரக்கர்களும் போருக்குக் கிளம்பினர். நந்திகேசுவரன் அடித்து வீழ்த்திய அரக்கர் மயன் ஏற்படுத்திய கிணற்று நீரினால் புத்துயிர் பெற்று எழுந்து போரிட்டனர். அப்பொழுது அரக்கருடன் போராடி உள்ளே நுழைந்த திருமால் அந்த கிணற்று நீர் அனைத்தையும் குடித்து விட்டார். தோல்வியடைந்த அரக்கர்கள் செய்வதறியாது திகைத்து நின்றனர். அந்த மாயக்கிணற்று நீர் குடிக்கப்பட்டு கிணறு வற்றிவிட்ட செய்தியை அறிந்த மயன் தான் தோல்வியடையும் அறிகுறி அது என்று உணர்ந்து

தன் வீரர்களை ஊக்குவித்து பிரமத கணங்களின் உறைவிடமான ஸாகரத்தை நோக்கி தன் முப்புரங்களையும் செலுத்தினான். அப்பொழுது அரக்கர் படைக்கும் தேவர்களுக்கு மிடையே கடும்போர் மூண்டது. அப்பொழுது சிவனார் அம்பு எய்து முப்புரத்தையும் ஒரே ஸமயத்தில் தாக்கினார். அந்த நெருப்பினால் தாக்கப்பட்ட மாளிகைகள், கட்டிடங்கள் முதலான அனைத்தும் கொழுந்துவிட்டு எரிந்தன.

## தாரகனின் பிறப்பும் அவன் அழிந்த வரலாறும்:—

நான்முகனின் மனத்தால் படைக்கப்பட்டவன் தக்ஷபிரஜாபதி என்பவன். அவனுக்குத் தன் மனைவியான வைரிணியின் மூலம் அறுபது பெண் குழந்தைகள் பிறந்தன. அவர்களில் முறையே பத்து பேர்களை தருமனுக்கும், பதின்மூன்றை கச்யபருக்கும், இருபத்தேழு பேரை ஸோமனுக்கும், நால்வரை அரிஷ்டநேமிக்கும். இருவரை பாஹுகபுத்திரனுக்கும் (பஹுபுத்திரனுக்கும்) இருவரை ஆங்கிரஸ்ஸுக்கும். இருவரை கிருசாச்வருக்கும் மணம் செய்வித்தான். இவர்களில் கச்யபரின் மனைவியான அதிதிக்குப் பிறந்தவர்கள் இந்திரன் உபேந்திரன் முதலான தேவர்கள். திதிக்குப் பிறந்தவர்கள் ஹிரண்யகசிபு முதலான அரக்கர்கள்.

மக்களைத் துன்புறுத்திய ஹிரண்யகசிபுவை திருமாலும் மற்ற அரக்கர்களை இந்திரனும் கொல்லவே, திதியும் தன் கணவனிடம் இந்திரனை வெல்லும் வலிமையுடைய ஒரு மகவுக்காக வேண்டினாள். அவரும் அவளை நியமங்களுடன் இருக்கக் கூறி ஒரு மகவு பிறக்கும் என்றருளினார். அவளும் இந்திரனைக் கொல்ல பிறக்கப் போகும் மகவை நினைத்து மிகவும் கவனத்துடன் நியமங்களை கடைப்பிடித்து வந்தாள். அவளை அண்டிய இந்திரன் செய்து வந்த பணிவிடைகளை ஏற்றாள். விரதம் முடிய இன்னும் பத்து ஆண்டுகள் உள்ள போது தனக்குப் பிறக்கப் போகும் மகவுடன் தன் செல்வச் சிறப்பு அனைத்தையும் பகிர்ந்து நுகருமாறு இந்திரனை வேண்டிபின் துயிலுற்றாள். அப்பொழுது அவள் கால்கள் சுத்தம்

செய்யாது துயிலுற்றதினுல் இதற்காகவே காத்திருந்த இந்திரன் அவள் கர்ப்பத்தில் புகுந்து அந்த கர்ப்பத்தை நாற்பத்தொன்பது துண்டுகளாகச் செய்தான். அப்பொழுது அவள் விழித்தெழ, மிகவும் பணிவுடன் அவள் முன் நின்று தான் அவள் கர்ப்பத்திற்கிழைத்த தீங்கை எடுத்துக் கூறி அதற்கு மாற்ருக நாற்பத்தொன்பது பேருக்கும் தேவ லோகத்தில் உகந்த இடம் தருவதாகக்கூறவும் அவளும் அதற் கிசைந்தாள். மீண்டும் தன் கணவனை அழைத்து அஸ்திர சஸ்திரங்களால் அழிக்க முடியாத மகனை வேண்டினுள். அவரும் பத்தாயிரம் ஆண்டு தவமியற்றி ஒரு மகனை பெறு வாள் என்றும் அவன் பிளக்க முடியாத வஜ்ரம் போன்ற உடலைப் பெற்று அதனுல் வஜ்ராங்கன் என்ற பெயருடன் விளங்குவான் என்றும் கூறினுர். அவ்வாறே அவள் தவமியற்ற அனைத்து அஸ்திரங்களிலும் தேர்ச்சிபெற்றவனுகவும் மிகவும் வலிமை உடைய உடலுடன் கூடியவனுகவும் வஜ்ராங்கன் பிறந்தான். பிறந்த உடனேயே தான் என்ன செய்ய வேண்டுமென அன்னையை வினவ அவளும் தன் மகவு அனைத் தையும் கொன்ற இந்திரனைப் பழிவாங்க அவனைக் கொல்ல வேண்டுமெனக் கூறினுள். அன்னை சொற்படி புறப்பட்ட வஜ்ராங்கனும் விண்ணுலகை அடைந்து இந்திரனைக்கட்டி தன் தாயின் முன்னர் கொணர்ந்து நிறுத்தினுன். இதற்கிடை யில் நடந்ததை அறிந்த நான்முகனும் கச்யபரும் அவ் விடத்தை அடைந்தனர். நான்முகன் வஜ்ராங்கனிடம் ஒருவனுக்கு அவமானமே அவனைக் கொன்றது போன்ருகும். அதனுல் இந்திரனை விட்டுவிடு என்று கூறினுர். அவனும் தன் தாயின் சொற்படி தான் நடந்ததாகவும், இப்பொழுது தன் பாட்டனுர் சொற்படி இந்திரனை விட்டுவிடுவதாகவும் கூறினுன். நான்முகன் வராங்கனை என்னும் பெண்ணைப் படைத்து அவனுக்களித்தார். அவளுடன் வனம் சென்ற வஜ்ராங்கன் பஞ்சாக்னியின் மத்தியில் உயர்த்திய கை களுடன் நின்று உணவின்றி ஆயிரம் ஆண்டுகள் கடுந்தவ மியற்றினுன். பின்னர் ஆயிரம் ஆண்டுகள் நீரில் நின்று கடுந்தவமியற்றினுன். அவன் தவத்தைக் கலைக்க இந்திரன்

செய்த முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. கடைசியில் நான்முகன் அவன் முன் தோன்றி அவன் வேண்டும் வரமனைத்தும் கொடுக்க சித்தமாய் நின்றார். அவனும் தனக்கு அஸுரத்தன்மை ஒருபொழுதும் வேண்டாமென் றும், தவத்திலேயே ஈடுபாடு இருக்க வேண்டும் என்றும் வேண்டினான். நான்முகனும் அவ்வாறே ஆகட்டும் என்று கூறி மறைந்தார். உணவு அருந்த தன் மனைவியைத்தேடவும் அவளைக் காணாது கடைசியில் மலைக்குகையில் அழுது கொண்டிருக்கும் அவளைக் கண்டான். பின்னர் தேவேந்திரன் அவளை அடித்துத் துன்புறுத்தினான் என்றறிந்தான். தன்னு யிர் துறக்க எண்ணிய அவள் தன்னைக் காக்க தனக்கொரு மகனைக் கொடுக்குமாறு அவனை வேண்டினாள். அதன் பொருட்டு மீண்டும் தவமியற்ற எண்ணின வஜ்ராங்கனைத் தடுத்த நான்முகன் தவமியற்றாமலேயே அவன் எண்ணம் கைகூடும் என்றும், தாரகன் என்னும் மகன் பிறப்பான் என்றும் கூறி அருளினார். (தாரக என்னும் சொல்லிற்கு காப்பவன் என்று பொருளாகும்). அவ்வண்ணமே ஆயிரம் ஆண்டுகள் கர்ப்பம் தரித்து வராங்கனை ஒரு மகனை ஈன்றெடுத்தாள். அவன் பிறந்த உடன் உலகமே ஆட்ட முற்றது. அவனை அஸுரர் தம் தலைவனாக்கினர்.

அரக்கரனை வரையும் கூப்பிட்ட அவன் தேவர்களுக்கும் தமக்குமிருக்கும் திராப்பகையை எடுத்துரைத்து தேவர் களை தவத்தின் வலிமையின் பயனால் தான் வெல்ல வேண்டுமென்று கூறி, பாரியாத்ர மலைத் தொடரை அடைந்து, உணவின்றி பஞ்சாக்னியின் மத்தியில் கடுந்தவம் இயற்றி தன் உடலினின்று தினமும் மாம்ஸத்தை எடுத்து அக்னிக்கு அளித்து வந்தான். அவன் தவத்தினால் உலக மனைத்தும் தஹிக்கப்படவும் அவன் முன் தோன்றிய நான் முகன் தன் மனமகிழ்ச்சியைத் தெரிவித்து அவன் வேண்டும் வரம் தர சித்தமாய் நின்றார். அவன் தனக்கு எவ்வுயிரி னின்றும் எந்த ஆயுதத்தாலும் மரணம் ஏற்படக்கூடா தென்று வரம் கேட்டான். ஆனால் நான்முகன் உலகில்

பிறந்த யாவரும் இறக்க வேண்டியவரே என்றும் அதனல் இறப்பில்லா வரம் தர இயலாதெனக் கூறினர். பின்னர் தாரகன் பிறந்து ஏழு நாட்களே ஆன பாலகனல் தனக்கு மரணம் ஏற்படவேண்டுமென்று வேண்டினன். நான் முகனும் அவ்வாறே ஆகட்டும் என்று வரமருளினர்.

அனைவரும் அவனுக்குப் பணி செய்ய அவன் தன் குறிக் கோள் தன் தாயின் துயர் துடைப்பதே என்று கூறி, இந்திரனை வெல்ல எண்ணி போருக்கு ஆயத்தம் செய்தான். பெரும் தானவர் படை தம்மைத்தாக்க வருவதை வாயு வின் மூலம் அறிந்த இந்திரன் தேவகுருவுடன் ஆலோசனை செய்து அவர்களுடன் போர் செய்வதற்கு ஏற்பாடுசெய்யு மாறு கட்டளை இட்டான். இருவர் படைகளுக்குமிடையே கடும்போர் மூண்டது. போரின் முடிவில் தோல்வியுற்ற தேவர்கள் நான்முகனை அடைய அவரும் தாரகன் தவத் தால் பெற்றுள்ள வரத்தை எடுத்துரைத்து அவனைக் கொல்ல பாலகன் சிவனர் மூலம் பிறக்கவேண்டுமென்று கூறினர். சிவன் பார்வதி இவ்விருவரிடையே பிணக்கம் ஏற்பட தன்னினின்றும் முன்னர் தோன்றிய 'நிசை'யை பணித்தார் நான்முகன். பின்னர் இந்திரன் கூற்றுப்படி நாரதமுனிவர் இமவானை அடைந்தார். இமவானும் அவரை வரவேற்ற பின்னர் தன் மகளை அவரை வணங்கச் செய்தான். மேனை அவளுக்கு எவ்விதமான கணவன் வாய்ப்பான் என்றறிய ஆவல் கொண்டாள். நாரதமுனி வரும் அவளுக்குக் கணவன் பிறக்கவில்லை என்றும் லக்ஷணங் களும் அற்றவன் என்றும் கூறும்பொழுதே கணவன் மனைவி இருவருமே பெரிதும் வருந்தினர். அப்பொழுது நாரதர் அந்தப் பரமன் பிறப்பற்றவர் என்றும், நான்முகன் முதலான மற்றவர் பிறப்பு, இறப்பு, மூப்பு முதலியன உடையவர் என்றும் கூறி பார்வதியின் சிறப்பான லக்ஷணங்களின் வரப் போகும் மேன்மையான பலன்களை எடுத்துரைத்தார். பின்னர் இந்திரனை அடைந்தார். இந்திரனும் காமனை வர வழைத்து தவம் செய்யும் சிவனரின் மனத்தில் கிளர்ச்சி

உண்டாக்கி பணிவிடை செய்யும் பார்வதிமீது மனம் லயிக்குமாறு செய்ய ஊக்குவித்தான். தக்க காரணமின்றி தன் மனம் சஞ்சலம் அடைவதற்குக் காரணம் காமனே என்று அறிந்த சிவனுர் சினம் கொள்ள அவர் நெற்றிக்கண்ணினின்றும் எழுந்த பொறி காமனைச் சாம்பலாக்கியது. நடந்ததை அறிந்த ரதியும் மிக்க துயரத்துடன் கண்ணீர் விட்டுக் கதறினள். பின்னர் வசந்தனல் தேற்றப்பட்டு சிவனுரைப் பணிந்து பின்வருமாறு அவரை துதித்தாள்:

நம: சிவாயாஸ்து நிராமயாய நம: சிவாயாஸ்து மனோமயாய |
நம: சிவாயாஸ்து ஸுரார்ச்சிதாய துப்யம் ஸதா பக்தக்ருபா
பராய ||

நமோ பவாயாஸ்து பவோத்பவாய நமோ(அ)ஸ்து தே த்வஸ்த
மனோபவாய |
நமோ(அ)ஸ்து தே கூடமஹாவ்ரதாய நமோ(அ)ஸ்து மாயா-
கஹனுச்ரயாய ||

நமோ(அ)ஸ்து சர்வாய நம: சிவாய நமோ(அ)ஸ்து ஸித்தாய
புராதனுய |
நமோ(அ)ஸ்து காலாய நம: கலாய நமோ(அ)ஸ்து தே ஞான-
வரப்ரதாய ||

நமோ(அ)ஸ்து தே காலகலாதிகாய நமோ நிஸர்காமல
பூஷணுய |
நமோ(அ)ஸ்த்வமேயாந்தகமர்தகாய நம: சரண்யாய நமோ
(அ)குணுய ||

நமோ(அ)ஸ்து தே பீமகணுனுகாய நமோ(அ)ஸ்து நாநா
புவனுதிகர்த்ரே |
நமோ(அ)ஸ்து நாநாஜகதாம் விதாத்ரே நமோ(அ)ஸ்து தே
சித்ரபலப்ரயோக்த்ரே ||

ஸர்வாவஸானே ஹ்யவிநாசநேத்ரே நமோ(அ)ஸ்து சித்ராத்வர
பாக போக்த்ரே |
நமோ(அ)ஸ்து பக்தாபிமதப்ரதாத்ரே நம: ஸதா தே பவஸங்க-
ஹர்த்ரே ||

அனந்தரூபாய ஸதைவ துப்யமஸஹ்ய கோபாய நமோ(அ)ஸ்து
துப்யம் |
சசாங்கசிஹ்னுய ஸதைவ துப்யமமேயமாஞய நம: ஸ்துதாய ॥
வ்ருஷேந்த்ரயானுய புராந்தகாய நம: ப்ரஸித்தாய
மஹௌஷதாய |
நமோ(அ)ஸ்து பக்த்யாபிமதப்ரதாய நமோ(அ,ஸ்து
ஸர்வார்த்திஹராய துப்யம் =

இவ்வாறு துதித்த ரதியின்பால் கருணை கொண்ட பரமன் அவளுடைய கணவன் உலகில் 'அனங்கன்' என்ற பெயருடன் விளங்குவான் என்று கூறி மறைந்தார். பெரும் துயரத்துடன் கூடிநின்ற ரதியைக்கண்டு தேற்றிய இமவான் அவளைத் தன் இருப்பிடம் அழைத்துச் செல்ல நினைத்த பொழுது இமவானின் மகள் தன்னுடைய நற்பேறற்ற உடலினுல் என்ன இன்பம் என்று கருதி தவத்தினுல் உடலை வற்றச் செய்தாலும் மேலானது எனத் துணிவு கொண்டாள். உ மா (ஓ! பெண்ணே வேண்டாம்) என்று அன்னை கூறிய இரு எழுத்துக்கள் 'உமா' என்று அவளுடைய பெயராகவே அமைந்துவிட்டன. தன் எண்ணப்படியே அவள் மிக்க உறுதியுடன் பரமனை அடையக் கடுந்தவம் மேற் கொண்டாள். உலகில் அனைத்து உயிரினங்களும் அத்தவத்தினுல் அல்லல் படவே இந்திரன் ஏழு மாமுனிவர்களையும் (ஸப்தரிஷிகள்) அழைத்து அவளது நோக்கம் அறிந்து வர வேண்டினுன். அவர்களும் உமையுடன் பேசி அவளது நோக்கத்தை அறிந்து பரமனை அடைந்து உமையின் மேன்மையை எடுத்துக் கூறிப் பின்னர் இமவானை அடைந்து பரமன் அவரது மகளை மணம் புரிய விரும்புகிருர் என்று கூறினர். பின்னர் முனிவர்கள் உமையை அடைந்து மறுநாள் சிவனுருடன் அவளுக்குத் திருமணம் நடக்கப் போகிறதென்று கூறி அவளை வீட்டிற்குச் செல்லுமாறு பணித்தனர். பின்னர் அவ்விருவருக்கும் முறைப்படி திருமணம் நடந்தது.

ஒரு ஸமயம் பார்வதி வாசனை எண்ணெ தேய்த்துக் குளிக்கும் போழுது அந்த நீரினின்றும் தோன்றினுன் ஒரு

பாலகன். விளையாடிக் கொண்டிருந்த அந்த பாலகனை தேவி நீரில் தள்ளிவிட அந்தப் பாலகன் நல்ல வலிமையுடன் கூடிய பருத்த உடலைப் பெற்றான். அவனை 'காங்கேய' என்றும் பின்னர் 'கஜாநநர்' என்றும் தேவர்கள் போற்றினர்.

பின்னர் கணங்களைக் குறித்து சிவ பார்வதி இவ்விரு வரிடையே பிணக்கம் ஏற்பட அதை வீரகன் என்றும் கணம் தீர்த்து வைத்தான். பின்னர் தன் இல்லத்தில் நுழைந்த பார்வதியுடன் சிவனார் பலகாலம் இன்பமாகக் காலம் கழித் தனர். ஓராயிரம் ஆண்டுகள் கழிந்தபின் என்ன நடந்தது என் றறிய ஆவல் கொண்ட தேவர்கள் 'அக்னிதேவனை' அனுப்பி னர். அவனும் ஒரு கிளிவடிவாகச் சென்று பரமன் தேவியுடன் இன்புற்றிருப்பதைக் கண்டான். இம்மாதிரி தன் இச்சையில் இடையூறு செய்ததின் பலனாக தனது வீர்யம் உடனேயே அக்னிதேவனை அடையும் என்று சபித்தார். அக்னிதேவனும் அதை பணிவுடன் ஏற்றுக் குடித்தான். இது மற்ற தேவர் களிடமும் அவரவர் உடலுக்கேற்ப பரவி நின்று பின்னர் வெளியேறி பொன்நிறத்தில் ஒரு பெரும் குளமாக மாறியது. பின்னர்அதைக் கேள்வியுற்ற பார்வதியும் அந்நீரில் விளை யாடி அதன் கரை மீதமர்ந்து அந்நீரைப் பருக நினைக்கையில் அவள் அந்நீரில் நீராடி வரும் ஆறு கிருத்திகை பெண்டிரை யும் கண்டாள். அப்பொழுது அவர்கள் பார்வதியிடம் தாங்கள் தாமரை இலையில் கொணரும் நீரைப் பருக ஏற்படும் மகவுக்கு தாமும் தாயாவோம் என்று கூறி அந்தக் குழந்தைக்கு தம்முடைய பெயரும் இடப்படட்டும் என்று கேட்டுக் கொண்டனர். அவ்வண்ணமே அந்நீரைப் பார்வதி பருகவும் அவள் வயிற்றினின்றும் சித்திரைமாதம் அமா வாசையில் பாலகன் பிறந்தான். அவன் கதிரவனின் ஒளியுடனும், ஆறு தலைகளுடன் கூடியவனாகவும் இருந்தான். அவனுக்கு சாகன், விசாகன், ஆறுமுகத்தோன், ஸ்கந்தன் (பிளந்து கொண்டு வந்ததினால்,) கார்த்திகேயன் என்ற பெயர்கள் ஏற்பட்டன. சித்திரை மாதம் வளர்பிறை

ஷஷ்டி திதியில் இந்திரன் அவனை தேவர் படைத்தலைவனுக்கினன், இந்திரன் தேவஸேனை என்னும் தன் மகளை ஸ்கந்தனுக்கு மணம் செய்வித்தான். தேவர்கள் ஒவ்வொருவரும் தம் சிறப்பான ஆயுதங்களையும் சக்திகளையும் கொடுத்து பின்வருமாறு போற்றினர்.

நம: குமாராய மஹாப்ரபாய ஸ்கந்தாய ச ஸ்கந்திததானவாய
நவார்க்க வித்யுத் த்யுதயே நமோ(அ)ஸ்து தே ஷண்முக காமரூப ||

பிநத்த நாநாபரணாய பர்த்ரே நமோ ரணேதாருணதாருணாய |
நமோ(அ)ஸ்து தே(அ)ர்க்கப்ரதிமப்ரபாய நமோ(அ)ஸ்து குஹ்யாய குஹாய துப்யம் ||

நமோ(அ)ஸ்து த்ரைலோக்யபயாபஹாய நமோ(அ)ஸ்து தே பாலக்ருபாபராய |
நமோ விசாலாமலலோசனாய நமோ விசாகாய மஹாவ்ரதாய ||

நமோ நமஸ்தே(அ)ஸ்து மனோஹராய நமோ நமஸ்தே(அ)ஸ்து ரணோத்கடாய |
நமோ மயூரோஜ்ஜ்வல வாஹனாய நமோ(அ)ஸ்து கேயூரசராய துப்யம ||

நமோ த்ருதோதக்ர பதாகினே நமோ நம: ப்ரபாவப்ரணதாய தே(அ)ஸ்து |
நமோ நமஸ்தே வரவீர்ய சாலினே க்ரியாபராணாம் பவபவ்யமூர்த்தயே ||

அவர்கள் துதியைக் கேட்ட குமரன் தான் அவர்களுக்கு என்ன செய்ய வேண்டுமென்று கேட்க அவர்களும் தாரகன் என்னும் அரக்கனால் தாம் அனைவரும் அல்லல் படுவதை எடுத்துரைத்து அவனைக் கொல்லுமாறு வேண்டினர். குமரனும் அவனைக் கொல்வதாக வாக்களித்தான். இந்திரனும் தூதன் ஒருவனை அனுப்பி தாரகன் ஆளும் உலகம் முழுவதும் தனது ஆட்சிமைக்குட்பட்டது என்று கூறச் செய்யவும் அதனால் வெகுண்டபோதிலும் தாரகன் பன்முறை தம்மிடம் தோற்ற இந்திரன் இப்பொழுது தம்மை துணிவுடன்

எதிர்ப்பதற்குக் காரணம் புதிய உதவி ஏதோ கிடைக்கப் பெற்றிருப்பதே என்று எண்ணும் பொழுதே தேவபாடகர்கள் பாடிய பின்வரும் காதையைக் கேட்டான்.

ஜய அதுலசக்திதிதி பிஞ்ஜர!
புஜதண்ட சண்டரபஸ! ஸுகத! குமுதகாளன விகாஸ-
நேந்தோ! குமார! ஜய திதிஜகுல மஹோததி வடவாநல!
ஷண்முக! மதுரரவமயூரரத! ஸுரமுகுடகோடி கட்டித-
சரண நவாங்குர மஹாஸன! ஜய லலிதசூடாகலாப நவவிமல
தல! கமலகாந்த! தைத்யவம்ச துஸ்ஸஹதாவாநல!
ஜய விசாக! விபோ! ஜய ஸகலலோகதாரக! ஸ்கந்த!
ஜய கௌரீநந்தன! கண்டாப்ரியப்ரிய! விசாக! விபோ!
த்ருத பதாகப்ரகீர்ணபடல! கனகபூஷணபாஸுரதினகரச்சாய!
ஜய ஜனித ஸம்ப்ரம லீலாஹுஞகிலாராதே!
ஜய ஸகலலோகதாரக! திதிஜாஸுரவரதாரகாந்தக!
ஸ்கந்த! ஜய பால! ஸப்தவாஸர! ஜய புவனுவலிசோக விநாசந!

இதைக் கேட்ட தாரகன் முன்னர் பாலகன் ஒருவனுல் அவனுக்கு மரணம் ஏற்படும் என்று நான்முகன் கூறியது நினைவுக்கு வந்தவனுய் மனம் வருந்தினும் தன் படைவீரர்களை போருக்கு ஆயத்தம் செய்தான். பாலகன் என்று தாரகன் இளப்பமாகப் பேசக் குமரனும் தக்க பதில் அளித்தான். சில காலம் கடும்போர் நடந்த பின்னர் முடிவில் குமரன் தன் சக்த்யாயுதத்தை எறிந்து தாரகனின் மார்பைப் பிளந்தான்.

[குறிப்பு : இவ்வரலாறு பிரசித்தமான ஸ்காந்த புராணத்துடன் மாறுபடுகிறது. இது கல்ப பேதங்களினுல் ஏற்பட்ட மாறுபாடு போலும்!]

## பாணனின் முப்புரத்தை பரமன் எரித்த வரலாறு

நர்மதை ஆற்றின் கரையில் ஜ்வாலேச்வரம் என்னும் ஒரு மேன்மையான தீர்த்தம் உள்ளது. அதன் மேன்மையைப் பின்வரும் கதை விவரிக்கின்றது.

பாணன் என்னும் கொடிய அரக்கன் முப்புரத்தில் நின்று வானில் விரைந்து சென்று தேவர் முதலானவரைத் துன்புறுத்தி வந்தான். முனிவர்கள் சிவனாரைப் பணிந்து தம் துயர் துடைக்க வேண்டினர். சிவனாரும் அவர்களைத் தேற்றி நாரதமுனிவரை வரவழைத்து பாணனின் நகரத்தை அடைந்து அங்குள்ள பெண்டிரை தரும வழியி னின்றும் வழுவும் வண்ணம் செய்து பாண பட்டிணத்தில் நுழைவதற்கு வழிசெய்தார். நர்மதை ஆற்றின் கரையை அடைந்த பரமன் முப்புரத்தை அழிக்க மனம் கொண்டார். மந்தரமலையை காண்டீவமாகவும், வாஸுகியை நாணாகவும், விசாகமென்னும் விண்மீனை தன் இருக்கையாகவும், திருமாலைச் சிறந்த அம்பாகவும், அம்பின் நுனியில் நெருப் பையும், முகத்தில் வாயுவையும், நான்கு மறைகளையும் நான்கு குதிரைகளாகவும் அச்வினீ குமாரர்களை கடிவாளங் களாகவும், இந்திரனையே அச்சாகவும், தோரணத்தில் குபேரனையும், வலது இடது புஜங்களில் யமனையும், காலனை யும், சக்கரத்தில் அமரர்களையும், நான்முகனைத் தேர்ப் பாகனாகவும் உடைய தெய்வமயமான தேரின் மீதேறி மலை போன்று மூன்றுபுரங்களும் ஒருங்கே வர ஒரே அம்பினால் முப்புரங்களையும் பிளந்தார். அப்பொழுது அக்னிதேவன் அப்பட்டணத்தின் மாளிகைகள், நந்தனம் முதலிய அனைத் தையும் எரிக்க, பாணன் தான் வழிபட்டுவந்த லிங்கத்திற்கு ஊறு நேரக்கூடாதென வேண்டி பரமனைப் பின்வருமாறு தோடகவிருத்தத்தில் துதித்தான்.

சிவ சங்கர சர்வஹராய நமோ பவ பீம மஹேச்வர சர்வ
நமோ |
குஸுமாயுத தேஹவிநாசகர த்ரிபுராந்தக அந்தகசூலதர ||
ப்ரமதாப்ரிய காந்த விபக்த நம: ஸஸுராஸுர ஸித்த
கணார்நமித |
ஹயவானரஸித்த கஜேந்த்ர முகாததி பாஸ்வததீர்க்க-
விசாலமுக ||

உபலப்துமசக்யதலைரரமரைரஸுரை: ப்ரதிதோ(அ)ஸ்மி ச
பாஹுசதை: |
ப்ரணதோ(அ)ஸ்மி பவம் பவபக்திரதோ சலசந்த்ரகலாகுல-
தேவ நம: ||

ந ச புத்ரகலத்ரஹயாதி தனம் மம து த்வதனுஸ்மரணம்
சரணம் |
வ்யதிதோ(அ)ஸ்மி து பாஹுசதைர்பஹுபிர்கமிதா ச மஹா-
நரகஸ்ய கதி: ||

ந நிவர்த்ததி ஜன்ம ந பாபமதி: சுசிகர்மநிபத்தமபி த்யஜதி |
அனுகம்பதி விப்ரமதி ஸதி மம சைவ குகர்ம நிவாரயதி ||

அவனுக்கு ஆறுதல் கூறி அவன் இறப்பற்று என்றுமே பொன் கோளத்தில் உலவட்டும் என்று வரமளித்தார். முப்புரம் எரிந்த பொழுது ஒரு பகுதி ஸ்ரீ சைலத்தில் (இது ஆந்திர நாட்டில் உள்ள ஸ்ரீசைலமல்ல. இது நர்மதை ஆறு பாயும் வழியில் உள்ள மலைப்பகுதியாகும்) திரிபுராந்தகத்திலும் இரண்டாம் பகுதி அதே மலையில் அமரகண்டகத்திலும் விழுந்தன. எரிந்து விழுந்ததினால் ஜ்வாலேச்வரம் என்றழைக்கப்பட்டது.

குறிப்பு: இந்த வரலாறு தாரகாக்ஷன் முதலான மூவரின் முப்புரத்தை பரமன் எரித்த வரலாற்றைப் போலவே உள்ளது.

## நர்மதை நதிக்கரையில் ப்ருகுதீர்த்தத்தின் மேன்மை

ப்ருகு என்றொரு மாமுனிவர் இருந்தார். அவரொரு ஸமயம் சிவனாரைக் குறித்துத் தவமியற்றினார். தன் கணவர் வாயிலாக அறிந்த அன்னையும் நகைத்து அம்முனிவரின் சிகை புகை போன்று ஆயினும் அவருக்கு மனநிறைவு ஏற்படவில்லை என்று கூறினாள். அப்பொழுது சிவனார் அவருடைய சினத்தை தேவி அறியமாட்டாள் என்று கூறி ஒரு காளையைப் படைத்து அதன் மூலம் ஒரு புத்தைத்தோண்டச்

செய்து அதில் அம்முனிவரைத் தள்ளச் செய்தார். அப்பொழுது யோகநிலையில் இருந்த அவர் அந்தக் காளை மாட்டை சபிக்க எண்ணினர். அப்பொழுது அந்தக் காளை மாடு விண்ணை அடைந்து பின்னர் சிவனாராகக் காட்சி தந்த பொழுது ப்ருகுமுனிவர் மரம்போல் விழுந்து வணங்கி பின்வருமாறு துதித்தார்:

பவாதீதோ புவனபதே ப்ரபோ! து விஜ்ஞாபயே கிஞ்சித் ॥

த்வத்குண நிகரான் வக்தும் க: சக்தோ பவதி மானுஷோ நாம
வாஸுகிரபி ஹி கதாசித்வதனஸஹஸ்ரம் பவேத்யஸ்ய ॥

பக்த்யா ததாபி சங்கர புவனபதே! த்வத்ஸுதோ முகர: ।
வதத: க்ஷமஸ்வ பகவன்! ப்ரஸீத மே தவ சரணபதிதஸ்ய ॥

ஸத்வம் ரஜஸ் தமஸ்த்வம் ஸ்தித்யுத்பத்யோர்விநாசனே தேவ
த்வாம் முக்த்வா புவனபதே! புவனேச்வர நைவ தைவதம் கிஞ்சித் ॥

யமநியம யஜ்ஞ தான வேதாப்யாஸாச்ச தாரணு யோக: ।
த்வத்பக்தே: ஸர்வமிதம் நார்ஹதி ஹி கலாஸஹஸ்ராம்சம் ॥

உச்சிஷ்ட ரஸரஸாயன கட்காஞ்ஜன பாதுகா விவர-ஸித்திர்வா ।
சிஹ்னம் பவவ்ரதானும் த்ருச்யதி சேஹ ஜன்மனி ப்ரகடம் ॥

சாட்யேன நமதி யத்யபி ததாஸி த்வம் பூதிமிச்சதோ தேவ! ।
பக்திர் பவ பேதகரீ மோக்ஷாய விநிர்மிதா நாத ॥

பரதார பரஸ்வரதம் பரபரிபவ துக்க சோகஸந்தப்தம் ।
பரவதனவீக்ஷணபரம் பரமேச்வர! மாம் பரித்ராஹி ॥

மித்யாபிமானதக்தம் க்ஷணபங்குர விபவ விலஸந்தம் ।
க்ரூரம் குபத்யாபிமுகம் பதிதம் மாம் பாஹி தேவேச! ॥

தீனே த்விஜகணஸார்த்தே பந்துஜனேனேவ தூஷிதா ஹ்யாசா ।
த்ருஷ்ண ததாபி சங்கர! கிம் மூடம் மாம் விடம்பயதி ॥

த்ருஷ்ணு ஹரஸ்வ சீக்ரம் லக்ஷ்மீ ப்ரதஸ்வ யாவதாஸினீம் நித்யம் |
சிந்தி மதமோஹபாசானுத்தாரய மாம் மஹாதேவ ||

கருணப்யுதயம் நாம ஸ்தோத்ரமிதம் ஸர்வஸித்திதம் திவ்யம்
ய: படதி பக்தியுக்தஸ்தஸ்ய துஷ்யேத் ப்ருகோர்யதா ச சிவ: ||

அவர் பக்தியினுல் மகிழ்ந்த சிவனுர் அவருக்கு இனி சினம் ஏற்படாது என்று அருளினுர். ப்ருகு மாமுனிவருக்கு பரமன் அருளிய அவ்விடம் ப்ருகுதீர்த்தம் என்ற பெயருடன் மிகச்சிறப்புடன் விளங்குகின்றது.

## திருப்பாற்கடல் கடைதலும் காலகூடமென்னும கொடிய நஞ்சின் தோற்றமும்

தேவர்களும் அஸுரர்களும் ஒருங்கே திருப்பாற்கடலைக் கடைய அதனின்றும் சந்திரனும், இலக்குமியும், வெள்ளைக் குதிரையும், கௌஸ்துபமணியும், பாரிஜாதமும் தோன்றிய பின்னர் ஒரு கரும் புகை மண்டலம் வானளாவி நின்றது. அதை நுகர்ந்த தேவர்கள் நினைவிழந்தனர். பின்னர் நெருப்பு மண்டலம் வெளிவந்த பின் பலவிதமான உயிரினங்களும், நஞ்சுடைய உயிரினங்களும் தோன்றின. பின்னர் தோன்றிய அச்சுறுத்தும் கொடிய உருவைக்கண்டு அனைவரும் அஞ்சினர். மேலும் அதன் மூச்சுக் காற்றினுல் திருமால், இந்திரன், தேவர்கள், அஸுரர்கள் யாவரும் தஹிக்கப்பட்டவர்களாக இருந்தனர். அப்பொழுது திருமால் பரபரப்புடன் அந்த உருவை யார் என்று வினவ, தான் காலகூடம் என்னும் நஞ்சு என்றும், ஒருவருடன் ஒருவர் சண்டை செய்யும் தேவர், அஸுரர் அனைவரையும் அழிப்பேன் என்றும் கூறியது. அதனுல் அஞ்சிய அனைவரும் சிவனுரை அண்டி பின்வருமாறு போற்றினர்.

நமஸ்துப்யம் விருபாக்ஷ! ஸர்வதோ (அ)னந்தசக்ஷுஷே |
நம: பினுகஹஸ்தாய வஜ்ரஹஸ்தாய தன்வினே ||

நமஸ்த்ரிசூலஹஸ்தாய தண்டஹஸ்தாய தூர்ஜடே |
நமஸ்த்ரைலோக்யநாதாய பூதக்ராமசரீரிணே ||

நம! ஸுராரிஹந்த்ரே ச ஸோமாக்ன்யர்காக்ர்ய சக்ஷுஷே |
ப்ரஹ்மணே சைவ ருத்ராய நமஸ்தே விஷ்ணுரூபிணே ||

ப்ரஹ்மணே வேதரூபாய நமஸ்தே தேவரூபிணே |
ஸாங்க்ய யோகாய பூதானும் நமஸ்தே சம்பவாய தே ||

மன்மதாங்கவிநாசாய நம! காலக்ஷயங்கர |
ரம்ஹஸே தேவதேவாய நமஸ்தே ச ஸுரோத்தம! ||

ஏகவீராய சர்வாய நம: பிங்ககபர்தினே |
உமாபர்த்ரே நமஸ்துப்யம் யஜ்ஞத்ரிபுரகாதினே ||

சுத்த போதப்ரபுத்தாய முக்த கைவல்யரூபிணே |
லோகத்ரய விதாத்ரே ச வருணேந்த்ராக்னிரூபிணே ||

ருக்யஜுஸ்ஸாம வேதாய புருஷாயேச்வராய ச |
அக்ர்யாய சைவ சோக்ராய விப்ராய ச்ருதிசக்ஷுஷே ||

ரஜஸே சைவ ஸத்வாய நமஸ்தே ஸ்திமிதாத்மனே |
அநித்ய நித்யபாவாய நமோ நித்யசராத்மனே ||

வ்யக்தாய சைவாவ்யக்தாய வ்யக்தாவ்யக்தாயவை நம! |
பக்தானுமார்த்திநாசாய ப்ரியநாராயணாய ச ||

உமாப்ரியாய சர்வாய நந்திவக்த்ராஞ்சிதாய ச |
ருதுமன்வந்த கல்பாய பக்ஷமாஸதினத்மனே ||

நாநா ரூபாய முண்டாய வரூதப்ருது தண்டினே |
நம: கமலஹஸ்தாய திக்வாஸாய சிகண்டினே ||

தன்வினே ரதினே சைவ யதயே ப்ரஹ்மசாரிணே |
இத்யேவமாதி சரிதை: ஸ்துதம் துப்யம் நமோ நம: ||

இவ்வாறு துதித்து அவர்கள் அந்தக் கொடிய நஞ்சு அவர்கள் அனைவரையும் விழுங்கும் பேராபத்தினின்றும்

தம்மைக் காத்தருள வேண்டினர். அந்த நச்சுப் பொருளை விழுங்கி அவர்களைக் காப்பதாக உறுதி அளித்த பரமன் அவ்விதமே திருப்பாற்கடலை அடைந்து அந்த நஞ்சை தன் இடக் கரத்தால் எடுத்து உட்கொள்ள அது அவருடைய நெஞ்சில் தங்கி ஒருஅணிகலன்போல விளங்கியது.

சிவம்

---

## மிக்காரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்

நாலம் வா பரமோபகாரக—மிதம்
 த்வேகம் பசூனும் பதே
பச்யன் குக்ஷிகதான் சராசரகணான்
 பாஹ்யஸ்திதான் ரக்ஷிதும் |
ஸர்வாமர்த்ய—பலாயநௌஷத—மதி
 ஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரலம் கலே ந கிலிதம்
 நோத்கீர்ண—மேவ த்வயா ||

—ஆதிசங்கரர்—சிவானந்த லஹரீ : 31

பசுபதியே! உமது வயிற்றை அடைந்திருக்கும் அசையும் பிராணிகளையும் அசையாத மரம் செடி கொடிகளையும் (அவ்வாறே) வெளியிலுள்ளவர்களையும் காப்பாற்றுவதற்கு நோக்கமுடையராய் மிகுதியும் தீயைக் கக்குவதும், அச்சத்தை விளைவிப்பதும் எல்லாத் தேவர்களையும் ஓடச் செய்ததுமான விஷமானது உமது கழுத்தில், உம்மால் நிறுத்தி வைக்கப்பட்டது. விழுங்கப்படவுமில்லை, உமிழப் படவுமில்லை. உயிர்களுக்கு நீர் செய்த சிறந்த உபகார மாகிய இந்த ஒன்றே போதாதா?

---

உ
சிவமயம்

# பழைய வடமொழி நூல்களில் சிவபெருமானின் முழுமுதன்மை

[தவத்திரு மறைமலை அடிகளாரின் ''மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்'' (கழக வெளியீடு) என்ற நூலின் இரண்டாம் பகுதி 19-வது அத்தியாயத்தினின்றும் தொகுக்கப்பட்டது]

வடமொழியில் பழைய நூல்களென்று அம்மொழி நூல்களை நன்காராய்ந்து உணர்ந்த மாபெரும் புலவோர் கொண்டவை பின்வருவனவேயாகும். புராணங்களுள் மிகப்பழைமையானவை 'மற்சபுராணம்' 'வாயுபுராணம்' என்பவைகளேயாம். சிவபிரான்றன் முழுமுதற்றன்மைகளை இவையிரண்டும் விரித்துரைக்கின்றன; மற்சபுராணத்தில் சிவபிரான் முப்புரங்களையும் காமவேளையும் நெற்றிக் கண்ணால் எரித்தமையும், கார்த்திகேயன் பிறப்பும், தாரகாசுரனை அழித்தமையும் பிறவுமாகிய வரலாறுகள் சொல்லப் படுகின்றன. வாயுபுராணத்தில் தக்கன் வேள்வி அழிப் புண்டமையும், யோகஞ்செய்தலால் வருஞ் சிறந்தபயனும், யோகிகள் சிவபிரான் திருவருட்பேற்றினை அடைதலும், சிவபுரத்தின் மாட்சியும் விரித்துரைக்கப்படுகின்றன. இவற்றிற்குப்பின் தோன்றிய 'அக்னி புராணம்' 'இலிங்க புராணம்', ஸ்காந்தபுராணம்', 'வாமன புராணம்', 'கூர்ம புராணம்', 'தேவீபாகவதம்', பிரம்மாண்ட புராணம்', 'மார்க்கண்டேய புராணம்', 'பவிஷ்யோத்தர புராணம்', முதலியனவும் சிவபிரானின் முழுமுதற்றன்மைகளையும் உமைப்பிராட்டியாரின் மாட்சிகளையுமே எடுத்துப் புகலு கின்றன. இவையல்லாத வைணவ புராணங்கள் எல்லாம்

கி. பி. பதினொன்ரும் நூற்ருண்டில் இயற்றப்பட்டனவாகும். வைணவபுராணங்களில் முற்பட்டதாகிய 'விஷ்ணு புராணமே' கி. பி. 1045 ஆம் ஆண்டில் இயற்றப்பட்டதாகும் என்று அதனை நன்கு ஆய்ந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த 'உவில்சன்' என்பவர் கூறியுள்ளார். (H. H. Wilson's Puranas p. 120). எனவே ஏனைய வைணவபுராணங்கள் எல்லாம் வைணவம் சைவசமயத்துக்கு மாருய்த் தோன்றி அதனைப் பழிக்கத் துவங்கியபின் வைணவப்புலவோரால் புதியவாய்ப் புனைந்து கட்டப்பட்டனவேயாதல் தெள்ளிதிற் புலனும். உதாரணமாக 'வைணவபாகவதம்' தேவகிரி அரசன் மகாதேவற்கும் அவற்குப்பின் வந்த இராமதேவற்கும் அமைச்சனுன ஹேமாத்திரியின் அவையிலிருந்த போபதேவரால் அறுநூற்றைம்பது ஆண்டுகட்குமுன் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது. இங்ஙனமே நாரதம் முதலிய மற்றைய வைணவபுராணங்களும் கி. பி. பத்தாம் நூற்ருண்டின் துவக்கத்திலிருந்தே புனைந்துவைக்கப்பட்டன. பழைய பதினெண்புராணங்களிற் சேர்ந்த சிலவற்றின் பெயர்களையே புனைந்து கட்டிவிட்டமையால் ஆராய்ந்து பார்க்கும் ஆற்றல் இல்லாதார் இவ்வைணவ புராணங்களைப் பழைய பதினெண் புராணங்களிற் சேர்ந்தனவாகப் பிறழக்கொண்டு மயங்கிப் பெரிதும் இடர்ப்படுவர். உண்மையான் நோக்குவாரெல்லாம் இவை கி. பி. பத்தாம் நூற்ருண்டுக்குப்பின் பழைமையைப் பலவாறு திரித்துப் புதுப்பொய் பல புகுத்திச் செய்யப்பட்டனவாதலை நன்கு உணராநிற்பர். (See H. H. Wilson's Puranas and R. C. Dutt's A History of Civilisation in Ancient India, Vol. II pp. 203-211).

இவ்வைணவ புராணங்களுக்கு முற்பட்டனவாக மேலெடுத்துக்காட்டிய மற்சம், வாயு, இலிங்கம். காந்தம், தேவீபாகவதம் போன்றவைகளெல்லாம் கி.பி. இரண்டாம் நூற்ருண்டு முதல் ஆரும் நூற்ருண்டு வரையில் ஆக்கப்பட்ட பழையகாலத்துப் புராணங்களாய்ச் சிவபிரான்

அருட்டிறங்களையும் அம்மையின் அருட்செயல்களையும் எடுத்துரைத்து அவரே முழுமுதற் கடவுளாதலை வலியுறுத்து கின்றன. இவைகளுள் விஷ்ணுவை முதற்கடவுளாக உயர்த்திச் சிவத்தை இழிக்கும் பகுதி ஓர் எட்டுணையும் காணப்படமாட்டாது. அதனுற் சைவசமயாசிரியர் காலத்தும் அவர்க்கு முன்னே கி. பி. முதல் நூற்றுண்டு வரையிற் சென்ற காலத்தும் சிவபிரானும் அம்மையுமே எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாக வணங்கப்பட்டமை தெளிவாக விளங்கும்.

புராணங்களுக்கு முற்பட்ட பழைமையுடையது வால்மீகி இராமயணம் ஆகும். இந்நூலின் பழைய பகுதி களில் இராமன் திருமாலின் பிறப்பாகக் கொள்ளப்படாமல் அவன் ஆண்மையிற் சிறந்த ஓர் அரசனுகவே உரைக்கப் பட்டுளன். ஆனுல் இவ்விராமாயணத்திலேயே பல இடங் களிலும் தேவர்கள் சிவபிரானையும் உமைப்பிராட்டியையும் வழிபட்டுப் பேறு பெற்ற வரலாறுகள் பல சொல்லப்படு கின்றன. பாலகாண்டம் 37 ஆம் இயலில், தேவர்கள் அனை வருஞ்சென்று சிவபிரானையும் அம்மையையும் வழிபட்டுக் கார்த்திகேயனை (முருகனை)ப்பெற்று, அவனைத் தம் படைத் தலைவனுக அமைத்துக் கொண்டமை நுவலப்பட்டிருக்கின் றது. அதன் 43 ஆம் இயலில் பகிரதன் கங்கையை வானுல கத்திலிருந்து மண்ணுலகத்துக்குக் கொணரும்பொருட்டு நான்முகனை வேண்டிப் பெருந்தவம் புரிந்தகாலையில், அக் கடவுள் அவன் முன்தோன்றிக் கங்கையின் ஆற்றலைத் தாங்கி அதனை நிலத்து உய்க்கவல்லான் சிவபிரான் ஒருவனே யாதலால் அப்பெருமானை நோக்கி அது வேண்டித் தவம் புரியக்கடவாய் என ஏவி மறைந்தமையும், 44 ஆம் இயலில் அங்ஙனமே பகீரதன் சிவபிரானை நோக்கிக் கடுந்தவம்புரிய அப்பெருமான் அவனது தவத்துக்கு இரங்கி அவன் வேண்டிய படியே கங்கையைத் தனது சடைக்கண் தாங்கி நிலத்து உய்த்தமையும் கூறப்பட்டிருக்கின்றன. இஃது இங்ஙன மாகவும், பிற்காலத்து வைணவப்புலவர்கள், விஷ்ணுவின்

அடிகளிலிருந்து விழுந்த கங்கையைச் சிவபிரான் தாங்கினர் என இராமாயணத்திற் காணப்படாததொரு செய்தியினைப் புதிது படைத்துத் தாம் புனைந்த புராணங்களில் நுழைப்பாராயினர். விஷ்ணுவே தம் அடிகளில் கங்கையைத்தாங்கிவிட வல்லுநராயின், அவரை நோக்கியே தவம்புரியுமாறு நான்முகக் கடவுள் பகீரதனை ஏவியிருக்கலாமன்றோ? அது தாங்கவல்லார் சிவபிரானே என நான்முகன் மொழிந்ததும் அம்மொழிப்படியே பகீரதன் தவம் புரிந்ததும், சிவபிரான் அவன் குறை முடித்ததும் பண்டுதொட்டு உலகம் அறிந்த உண்மைகளாகலின் இவற்றைத் தம் புனைகுரைகளால் மறைக்கமுயலும் பிற்காலத்து வைணவர் முயற்சி சிறிதும் நிறைவேறாது.

நிற்க, விஷ்ணுபாதத்தினின்று கங்கை கீழ் இழிந்தாள் என வைணவர் கதை கட்டிச் சொல்லுதற்குத்தான் யாங்ஙனம் இடம் பெற்றார் எனின், இருக்குவேத காலத்தில் 'விஷ்ணு' என்னும் சொல் பகலவனுக்கே ஒரு பெயராக வழங்கிற்று. (See Dr. A.A. Macdonell's 'A History of Sanskrit Literature' P.80). பகலவன் செல்லும் வழி வான் வெளியேயாகலின் அவ்வான்வெளி 'விஷ்ணுவின் பாதம்' எனப் பெயர் பெறுவதாயிற்று. 'பதம்' 'பாதம்' என்னும் வடசொற்கள் 'அடி' அல்லது 'அடிச்சுவடு தோய்ந்த இடம்' எனப் பொருள் தரும். நிலத்தின் கண் உள்ள நீர் ஆவியாக மாறி மேலெழுந்து வானத்தின்கண் வைகுதலால் கங்கை வானுலகத்தின்கண் உளள் என ஆன்றோர் உருவகப்படுத்திக் கூறினர். வான்வெளி விஷ்ணுபாதம் எனவும் வானத்தினின்று மழையாக இறங்கும் நீர் கங்கை எனவும் பெயர் பெற்றமையால், இயற்கையில் நிகழும் இந்நிகழ்ச்சியைக் கொண்டு 'விஷ்ணுவின் அடியிலிருந்து கங்கை கீழ் இழிந்தாள்' எனக் கதைகட்டி அம்முகத்தால் அக்கங்கை நீரைச் சடையில் ஏற்ற சிவபிரானை வைணவர் பழித்துரைத்து மகிழ்ந்தனர்.

இன்னும், பாலகாண்டம், 45 ஆம் இயலில் தேவர்களும் தைத்தியர்களும் சாவாமருந்தாகிய அமிர்தம் பெறும் பொருட்டு ஒருங்குகூடிச் சென்று திருப்பாற்கடலைக் கடைய அதன் கண் வாசுகி உகுத்த நஞ்சு பெருகி அங்கே குழுமிய தேவர்கள் முதல் அனைவரையும் அழிக்கப்புக்கமை கண்டு, அவர்களெல்லோரும் பெரிதும் நடுக்குற்றுச் சிவபிரானை அடைக்கலம் புகுந்து "எல்லாம்வல்ல பெருமானே எம்மைப் பாதுகாத்தருள்க, எம்மைப் பாதுகாத்தருள்க!" என்று குறையிரந்தமையும், அங்ஙனமே விஷ்ணுவும் சிவபிரானை நோக்கித் * "தேவரீரே எல்லாத் தேவர்கட்கும் முன் உள்ளீர், நீரே எல்லாத் தேவருள்ளும் சிறந்த தலைவராயினீர், ஆதலால், எல்லார்க்கும் வருவதில் முதற்பங்கு தேவரீரையே சாரற்பாலதாகலின், பெருமானே முதற்கண் வந்ததாகிய இந்நஞ்சினைப் பருகியருளும்" என வேண்டினமையும், அவ் விருதிறத்தார் கலக்கத்தையுங் கண்டு இரங்கிச் சிவபிரான் அந்நஞ்சினையே அமிர்தமாகப் பருகி அதனால் தான் ஏதுந் துன்புறாது தேவர் துயர் களைந்தருளினமையும் நன்கெடுத் துச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இன்னும், அதன் 66 ஆம் இயலில், தக்கன் வேட்ட வேள்விக்கண் கூடிய தேவர்களெல்லாரும் தம்மைப் பெரிய ராகக் கருதி இறுமாந்து முதலிற் சிவபிரானுக்குச் சேர்ப் பிக்கற்பாலதாகிய அவியுணவினைச் சேர்ப்பியாதுவிட, அவர்களது இறுமாப்பை ஒழித்துத் தனது முதற்கடவுள் தன்மை காட்டி அவர்க்கு நல்லறிவு கொளுத்துதல்

---

* விஷ்ணு சிவபிரானை வேண்டிய இவ்வுரை வடமொழி யிற் பின்வருமாறு உளது. "தைவதைர் மத்யமாநே து யத்பூர்வம் ஸமுபஸ்திதம், தத்த்வதீயம் ஸுரச்ரேஷ்ட ஸுராணும் அக்ரதோ ஹி யத், அக்ரபூஜாம் இஹ ஸ்தித்வா க்ருஹாணேதம் விஷம் ப்ரபோ."—வால்மீகி இராமயணம், பாலகாண்டம், 45-ஆம் சருக்கம், ச்லோகம் 23—24.

வேண்டிச் சிவபிரான் அவர்களைத் தலையறுத்தும், உடலங்களைப் பிளந்தும், உறுப்புக்களை வெட்டியும் ஒட்டித் தானே வெற்றி முதல்வனாகத் திகழ்ந்து நிற்பப், பின்னர் அத்தேவர்கள் எல்லோரும் நல்லறிவு பெற்றுத் தமது சிறுமையும் எல்லாம் வல்ல அப்பெருமானின் பெருமையும் உணர்ந்து அவனை வழுத்த, அப்பெருமான் அவர்க்கிரங்கி மீண்டும் அவர்தம் உடலங்களையும் பழுதுபட்ட உறுப்புக்களையும் சீர் திருத்திக் கொடுத்தருளினமையும் நன்கு விளக்கப்பட்டு உள்ளது.

மற்றொரு இதிஹாஸமான மாபாரதப் பழம்பகுதிகளிலும் சிவபிரானின் தன் முழுமுதற்றன்மையும் அவன் தன்னை வேண்டிக் குறையிரந்த அடியார்க்கு அக்குறை முடித்தமையும் பலவிடங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்பகுதிகளிலுங்கூட இடையிடையே விஷ்ணுவையுங் கண்ணனையும் உயர்த்து உரைக்கும் கதைகள் சிலவற்றை வைணவர்கள் நுழைத்தனராயினும், அவர் நுழைத்த அக்கதைகள் பாரதத்திற்கும் மிக முற்பட்ட பிராமணங்களிலும் வேத நூல்களிலும் காணப்படாமையானும், மற்றுச் சிவபிரானுடைய இறைமைத் தன்மையை நாட்டுங் கதைகளே மிகப்பழைய அந்நூல்களிலெல்லாம் காணப்படுதலானும் விஷ்ணுவையும்; கண்ணன் இராமனையும் உயர்த்த முனைந்த கதைகள் பிற்காலத்துப் போந்த வைணவர்களால் புதிது புனைந்து புகுத்தப்பட்டனவாதல் தேற்றமாம்.

[பதிப்பாசிரியர் குறிப்பு:— மாபாரதத்துள்ளும், மற்றும் சில உபநிடதங்கள் முதலியவற்றுள்ளும் உள்ள சிவபிரானின் முழு முதன்மை பற்றிய குறிப்புக்களை தவத்திரு மறைமலை அடிகளாரது கட்டுரையில் உள்ளபடி தொடர்ந்து அடுத்த ஆண்டு சிவஞான பூஜா மலரில் வெளியிடப்படும்.]

சிவம்

சிவமயம்

# கற்றோர் ஏத்தும் கலியில் கண்ணுதலோன் பெருமை

மதுரகவி திருமுறைச்செம்மல்
வித்துவான் தா. ம. வெள்ளைவாரணம்
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள்

**முன்னுரை:—** சைவசமயம் மிகத்தொன்மை வாய்ந்தது. கற்காலந்தொட்டே சிவ வழிபாடு தொடர்ந்து வருகிறது. இத்தகைய உயர்சமயம் சங்க காலத்தில் எங்ஙனம் விரிந்திருந்தது என்பதைச் சங்க இலக்கியங்களால் அறிய முடிகிறது. அவ்விலக்கியங்களில் ஒன்றான கலித்தொகை என்ற நூலில் கண்ணுதலோன் பெருமைகளாகக் கூறப்பட்டவற்றை ஒரு சிறிது இங்கே காண்போம்.

**கடவுள் வாழ்த்து:** ஒவ்வொரு நூலின் தொடக்கத்திலும் கடவுள் வாழ்த்துக் கூறுவது தமிழ் மரபு. அம்முறையில் கலித்தொகையின் கடவுள் வாழ்த்து சிவபெருமானுக்கு உரியதாக அமைந்திருக்கிறது.

இவ்வாழ்த்தில், "சிவபெருமான் ஆறு அங்கங்களையும் கற்ற முனிவர்களுக்கு அருமறையின் பொருளைப் பகர்ந்தவன்; கங்கை நீரைச் சடையிலே கரந்தவன்; திரிபுரத்தைத் தீ மடுத்தவன்; காளியொடு மாறுற்றுக் கூத்தாடியவன்; மணி மிடற்றையுடையவன்; எட்டுக்கைகளையுடையவன்; திருநீறணிந்தவன்; உழுவைத் தோலை உடுத்தியவன்; கொன்றைத் தார் அணிந்தவன்; பிரமனின் தலையைக் கையில் ஏந்தியவன்; கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்ற மூன்றுவகைக் கூத்துக்களை ஆடியவன்" என்று சிவபிரானது சிறப்புக்கள் குறிக்கப்பட்டுள்ளன.

**பிறைமுடியன்:** முல்லைக்கலியின் 3-ம் செய்யுளில், "சிவபெருமான் தனது தலையில் வளைந்த பிறையைச் சூடிக்

கொண்டிருப்பதுபோல், செந்நிறமான காளையின் தலையில் கொம்புகள் வளைவாக இருந்தன'' என்று கூறப்பட்டுள்ளது. மற்றும்'' அந்தக் காளையானது தன்னைத் தழுவ வந்த பொதுவனைக் குத்தி அவனுடைய குடரைக் கொம்பிலே சுற்றிக் கொண்ட தோற்றமானது சிவனது பிறையில் செந்நிறமான பூமாலை சுற்றியிருப்பது போன்றிருந்தது'' என்றும் கூறப் பட்டுள்ளது.

**நீலகண்டன்:** சிவபெருமான் உடம்பெல்லாம் சிவப்பாக இருந்தாலும் நஞ்சைப் பருகியதால் கண்டம்மட்டும் கறுப் பாக இருப்பான். ஆகவே அவனை நீலகண்டன் என்பர். முல்லைக்கலியில் 5-ம் பாடலில் ''ஏறுதழுவுதற்காகத் தொழு வத்தில் விடப்பட்ட காளைகளுள் ஒன்று உடம்பு முற்றும் குரால் (சிவப்பு) நிறமாகவும் பிணர் மட்டும் (கழுத்து மாத்தி ரம்) கறுப்பாகவும் இருந்தது; அது மணிமிடற்றோன் போல் காணப்பட்டது.'' என்று குறிக்கப்பட்டுள்ளது.

**செம்மேனியான்:** இலவமரங்கள் இலைகளை எல்லாம் உதிர்த்து விட்டு மரம்முற்றும் செந்நிறமாகப் பூத்து நிற்கின் றன. இதற்கு உவமை கூறவந்த பெருங்கடுங்கோ பாலைக் கலியின் 25-ம் செய்யுளில், ''ஆனேற்றுக் கொடியோன் போல் இலவமரம் பூத்தன'' என்று கூறியுள்ளார். இதனால் சிவன் செம்மேனியுடையவன் என்பதோடு, இடபக் கொடி யும் உடையவன் என்ற செய்தியும் புலனாகின்றது.

**காலகாலன்:** இடையர்கள் காளைகளின் கொம்புகளைச் சிவனது கணிச்சியைப் போல் (சூலத்தைப் போல்) கூர்மை யாகச் சீவித் தொழுவில் விட்டார்கள். அந்தக் காளைகளைத் தழுவும் பொருட்டு பல இடையர்கள் அவற்றின் மீது பாய்ந் தார்கள். அப்போது, வெண்மையான நெற்றிச் சுட்டியை உடைய செவ்வண்ணக்காளை ஒன்று கருவண்ணமான இடையன் ஒருவனைக் குத்திக் கீழே தள்ளி அவனது குடரை வெளியே இழுத்துப் போட்டது.

இந்தக் காட்சியை சோழன் நல்லுருத்திரனார் முல்லைக் கலியின் முதற் செய்யுளில் குறிப்பிட்டு அதற்கு ஓர் உவமை

யும் கூறினர். அதாவது “சிவபெருமான் எமனைக் குத்தி அவன் குடரை வெளிப்படுத்தினதைப் போலும்” என்று கூறினர். சிவன் காலனுக்குக் காலனான வரலாறு இங்கே குறிக்கப்பட்டிருக்கிறது.

**கயிலைமலையான்:** ஓர் யானை தான் செல்லும் வழியில் வேங்கைப் புலிபோல் பூத்திருந்த வேங்கை மரத்தைப் பார்த்தது. உடனே அந்த யானை சினங்கொண்டு வேங்கை மரத்தை புலிதான் என்று கருதிக் கொண்டு தனது இரண்டு கொம்புகளால் அடிமரத்தில் குத்தியது. கொம்புகள் ஆழமாகப் பதிந்து சிக்கிக் கொண்டன. கொம்புகளைப் பிடுங்க முடியாமல் அந்த யானை மருண்டுபோய் மலைமுற்றும் எதிரொலிக்கும்படி கத்தியது.

இந்தக்காட்சியைக் கூறவந்த கபிலர் குறிஞ்சிக் கலியின் 2-ம் செய்யுளில் இதனோடு ஒக்க ஒரு உவமையும் கூறினர்.

இமயமலையை வில்லாக வளைத்தவனும், கங்கை நீரால் ஈரம்பட்ட சடையுடையவனும் ஆகிய சிவபெருமான் கயிலை மலையில் உமாதேவியோடு வீற்றிருந்தார். அவ்விடத்திற்கு வந்த இராவணன் கயிலைமலையைக் கண்டான். அந்த மலையைப் பெயர்த்துக் கொண்டுபோய் இலங்கையில் வைத்துவிட வேண்டும் என்று விரும்பினன். ஆகவே தொடியணிந்த தனது தோள்களில் இரண்டை அம்மலைக்குக் கீழே செருகினன். ஆனல் மலையையும் பெயர்க்க முடியவில்லை. கையையும் எடுக்க முடியவில்லை. அதனல் மலைமுற்றும் எதிரொலிக்கும்படி ஓவென்று கதறி அழுதான்.— இந்த வரலாற்றைத்தான் கபிலர் உவமையாகக் காட்டியுள்ளார்.

**முடிவுரை:** சிவபெருமானைப்பற்றிக் கலித்தொகையில் கண்ட சில செய்திகளை மேலே கண்டோம். மற்றும் “அச்சிவன் முக்கண்ணன்; ஆலின் கீழ் அமர்ந்தவன்; சுடுகாட்டுச் சாம்பலில் கூத்தாடுபவன்.” என்பன போன்ற சில செய்திகளையும் இந்நூலிற் காணலாம்.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ சூரிய சிவாசாரியாராலியற்றப் பெற்ற

# சைவ சித்தாந்த பரிபாஷை

(தமிழ் மொழி பெயர்ப்பு)

## நூன்முகம்

"உலகம் தோன்றி நின்று மறைதல் கண்கூடாகக் காணப்படுதலின், இம்முத்தொழில்களைச் செய்யும் வினை முதலாகிய கடவுளும், தோன்றி நின்று மறைதலால் பயன் பெறும் உயிரும், தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் முதற் காரணமாகிய மாயையும், அந்த மாயையிலிருந்து பல வேறு விதமான காரியங்கள் தோன்றுதற்குக் காரணமான கன்மமும், அக்கன்மம் பலவேறு வகைப்படுதற்குக் காரண மான ஆணவமலமும், அந்த ஆணவமலம் பக்குவமாதற் பொருட்டு மாயா காரியங்களைத் தோற்றுவித்து, அவற் றுடன் உயிர்களைக் கூட்டுவித்து அவற்றிலழுந்தி அனுபவிக்கச் செய்யும் திருவருளாகிய திரோதான சத்தியும், அவ்வனுப வத்தால் பக்குவமடைந்த உயிர்களுக்கு மலசத்தி நீங்கும் படிக்கும் சிவனோடு பிரிப்பின்றி நிற்கும் உயிரின் உண்மை நிலை விளங்கும் படிக்குஞ் செய்யும் அனுக்கிரகமும் என்னும் இவை சைவசித்தாந்த நூல்களிற்றான் கூறப்படுகின்றன. ஏனைய சமயநூல்களில் கூறப்படவில்லை.

பிறநூல்களில் முடிவாகக் கூறப்பட்ட பொருள்களைப் பூருவபக்கமாகக் கூறி அவற்றிற் கூறப்படாத பொருளை முடிவாகக் கூறுதலானும், சைவநூல்களில் முடிவாகக் கூறப்பட்ட பொருள் பிற நூல்களில் அநுவதித்துப் பூருவ பக்கம் பண்ணப்படாமையானும், சைவ சாத்திரங்கள்

சித்தார்தம் எனப்பட்டன. இத்துணைப் பெருமை வாய்ந்த சைவ சித்தாந்த சாத்திரங்களிற் கூறப்படும் பதி-பசு-பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மையை உணர்த்தும் பிரமாணங்களையும், அந்த முப்பொருள்களையும், அவற்றின் உபயோகத்தையும் பல நூல்களின் கருத்தைத் திரட்டித் தொகுத்து மிக நுட்பமாகவும், ஆயுந்தோறும் ஆயுந்தோறும் இன்பம் பெருகுதற்கேதுவாகவும், சைவ சித்தாந்த பரிபாஷை என்னும் பெயருடன் ஒரு அருமை வாய்ந்த நூலை ஸ்ரீ சூரிய சிவாசாரியர் இயற்றி வைத்தனர்.

இந்நூல் உபோத்காத பரிச்சேதம், பிரமாண பரிச்சேதம், பதி பரிச்சேதம், பசு பரிச்சேதம், பாச பரிச்சேதம், விநியோக பரிச்சேதம் என்னும் ஆறு பரிச்சேதங்களை உடையது. ஒவ்வொரு பரிச்சேதத்திற் கூறப்படும் அருமையான விடயங்கள் விடய அட்டவணையிற் காட்டப்பட்டிருக்கின்றன. இந்நூலாசிரியர் வழுவூரை வாசத்தானமாக உடையவர் என்பது மங்கலவாழத்தால் அறியக்கிடக்கின்றது.''

மேலே கொடுத்துள்ளது தேவகோட்டைச் சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் 1928-ம் ஆண்டு (விபவ—சித்திரை) வெளியிடப்பட்ட சைவ சித்தாந்த பரிபாஷை என்ற தமிழ் மொழிபெயர்ப்பு நூலில் உள்ள முகவுரைப் பகுதியாகும். சூரிய சிவாசாரியார் வடமொழியில் இயற்றிய இந்த நூலை தேவகோட்டை சங்கத்தார் முதலில் வடமொழியிலும், பிறகு தமிழ் மொழிபெயர்ப்பும் வெளியிட்டனர். இந்த தமிழ் மொழிபெயர்ப்பு நூலின் ஒரு பிரதியினை மிகவும் சிதிலமடைந்த நிலையில், தூத்துக்குடி சித்தாந்த போதகாசிரியர் திரு. த. சி. ச. இராமச்சங்கு பாண்டியன், B.A., அவர்கள் எம்மிடமளித்து. இந்த நூலை எமது சிவஞான பூஜா மலரில் ஆண்டுதோறும் ஒவ்வொரு பகுதியாக வெளியிட்டு விட்டால் நூல் பாதுகாக்கப்பட்டதாக ஆகும் என்றும், இந்நூலை இதுகாறும் படிக்காதவர்

களும் இதனைப் படித்தறிந்து கொள்ள வாய்ப்பு கிடைக்கும் என்றும் கூறினர்கள். நூல் முழுமையும் படித்துப் பார்த்து, இது சித்தாந்தச் சார்புடைய சிறந்ததொரு நூலாகையால், சைவப் பெருமக்களுக்குப் பயன்படும் வகையில் இதனை எமது சிவஞான பூஜா மலரில் ஆண்டுதோறும் பகுதி பகுதியாக வெளியிடுவது என்று முடிவு செய்தோம்.

ஆயினும், எமக்குக் கிடைத்த பிரதி, தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் வெளியிடப் பட்டதாகலின், அவர்களது ஒப்புதல் பெற்றே இப்பணியில் முயலவேண்டும் என்ற கருத்துடன், சங்கத்தின் தலைவர், "தருமபுர ஆதீன வித்வான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி, பெரும்புலவர், பாலகவி" திரு. வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் (தத்புருஷ தேசிகர்) அவர்களுக்கு எழுதினேம். 1981-வது ஆண்டு எம்மால் வெளியிடப்பட்ட சிவஞான பூஜாமலர் பிரதியினை யும் அனுப்பினேம். அவாகளும் மனமுவந்து தமது ஒப்புதலை 'ஆசிச்செய்தி' வடிவமாக வழங்கியருளினர்கள். அவர்களது ஆசியுரையினைக் கீழே காண்க.

உ
சிவமயம்

17-11-82

பேரன்புடையீர்! நலம், நலமே தழைக.

உங்கள் 7-11-82 கடிதமும் சிவஞான பூஜாமலரும் கிடைத்தன.

சைவசித்தாந்த பரிபாஷை சித்தாந்த சைவச் சார்பு நூல்களில் ஒன்று. அதைப் பகுதி பகுதியாக நீங்கள் அச்சிட்டு வெளியிட எண்ணியிருப்பதறிந்து மகிழ்ச்சி. உங்கள் நன் முயற்சி உரிய பயனைத் தருவதாக.

அன்புள்ள
தத்புருஷ தேசிகர்

இந்நூலை வெளியிடுதற்கான முயற்சியை மிகவுங் காலந் தாழ்த்தே மேற்கொண்டமையால், இம்மலரில் இதற்கு அதிகமான பக்கங்களை ஒதுக்க இயலாதாயிற்று. எனவே, முதலாவது பரிச்சேதமான உபோத்காதபரிச்சேதம் என்னும் பகுதியைமட்டும் அதன் விடய அட்டவணையுடன் இம்மலரில் கொடுத்துள்ளோம். அடுத்து வரும் ஆண்டு மலர்களில் அதிகமான பகுதிகள் வெளியிடப்படும் என்று தெரிவித்துக் கொள்கிறோம். —பதிப்பாசிரியர்.

ஸ்ரீ சூரிய சிவாசாரியாரால் இயற்றப்பெற்ற

# சைவ சித்தாந்த பரிபாஷை

(தமிழ் மொழி பெயர்ப்பு)

## முதலாவது * உபோத்காத பரிச்சேதம்

### விடய அட்டவணை

1. மங்கலஞ் செய்தல்.
2. நூலாசிரியரின் பிரதிஞ்ஞை.
3. காமிகாகமத்தின் முதற் சூத்திரத்துக்குப்பொருள் கூறல்.
4. மலத்தின் பரிபாகத்திற்காகவே, பரமசிவன் படைத்தல் முதலிய தொழில்களைச் செய்கின்றான்.
5. பரமசிவனே வழிபடத்தக்கவன்.
6. தீக்ஷையுடையோரே பரமசிவனை வழிபடுதற்குரியர்.
7. ஆசிரியத்தன்மை சித்தாந்த சாத்திரங்களாலுண்டாம் ஞானத்தால் சித்திக்கத் தக்கது.
8. பதி, பசு, பாசங்கள் என்னும் பொருள்கள் சித்தாந்த சாத்திரங்களைத் தவிர வேறு சாத்திரங்களில் சொல்லப் படாமையும், அதற்குக் காரணமும்.

---

* உபோத்காதம்—முன்னுரை. பரிச்சேதம்—பிரிவு.

9. வேதங்கள், ஈசுவரனால் இயற்றப் பெற்றமை பற்றியே எல்லாப் பொருள்களையும் அறிவிக்கின்றன. நித்திய மாயிருக்கின்றமை பற்றி அறிவிக்குமென்றல் பொருந்தாது.

10. வேதங்கள் மாறுபட்ட பல சமயிகளின் ஐயத்துக் கிடமாய் இருப்பன.

11. சிவாகமங்கள் ஐயத்தை நீக்கித் தெளிவித்து வேத சாரமாய் விளங்குவன.

12. ஆசிரியத் தன்மைக்கு அதிகாரமிருத்தல் பற்றிப் பந்தத் தன்மை நிகழுமே என்னும் வினவிற்கு விடை.

13. ஆசிரியனுக்குப் பதியோடு சமத்தன்மை உண் டென்பதை விளக்கல்.

14. பதியுடன் சமத்தன்மையிருத்தலால் ஆசிரியன் ஈசுவ ரனால் ஏன் ஏவப்படுகிறானென்னும் வினவுக்கு விடை

15. ஆசிரியத்தன்மை அபரமோக்ஷம்.

16. நிருவாண தீக்ஷையுடையவனே சாதகன். அவன் சித்தாந்த சாத்திரங்களை அறிதற்குரியவன்.

17. சமயதீக்ஷை பெறுதற்குரியார் இவரெனல்.

18. விசேடதீக்ஷை பெறுதற்குரியார் இவரெனல்.

19. நிருவாணதீக்ஷை பெறுதற்குரியார் இவரெனல்.

20. சமயதீக்ஷை பெற்றவனுக்குப் பசுத்தன்மை நீங்கவில்லை யாயினும், விசேட தீக்ஷை பெற்றவனுக்குப் பசுத் தன்மை நீங்கினமையால், சித்தாந்த சாத்திரத்தைக் கேட்பதற்கு உரிமையில்லை என்பது எவ்வாறு கூடு மென்னும் வினவிற்கு விடை.

21. நிருவாண தீக்ஷையினாலேயே பாசமனைத்தும் நீங்கின மையால் ஆசாரியாபிஷேகம் வேண்டாமே என்னும் வினவிற்கு விடை.

# நூல்

## முதலாவது உபோத்காத பரிச்சேதம்

வழுவூரையும், அவ்வூரின்கண் விளங்கும் நின்மலமான பொற்றாமரையையும், அவ்வூரின்கண் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிக்கும் இளங்கொம்பனையாளம்மையையும் திருவீரட்டநாதரையும் வணங்குகின்றேன்.

எந்தத் திருவீரட்டநாதருடைய சந்நிதியானது, எல்லாவுயிர்களுக்கும் எவ்விடத்தும் எக்காலத்தும் எல்லாப் புருடார்த்தங்களையும் கொடுத்தருளுகின்றதோ, அந்தப் பரஞ்சோதி ரூபமான திருவீரட்டநாதருக்கு வணக்கஞ் செய்கின்றேன்.

எந்தப் புருடன் சமயம் விசேடம் முதலிய தீக்ஷைகளைப் பெற்றுச் சைவசாத்திரங்களைச் சிரமமின்றிப் படிக்க விரும்புகின்றானோ, அந்தப் புருடனுக்கு உபகாரமாக என்னால் இந்தச் சைவ சித்தாந்தப் பரிபாஷையானது யுத்தியுடன் சுருக்கிக் கூறப்படுகின்றது. (பரிபாஷை — குழூஉக்குறி. அஃதாவது ஒவ்வொரு கூட்டத்தார் வழங்குஞ் சொல்.)

அநாதியே மலமில்லாதவனும் எல்லாவற்றையும் அறிபவனும் எல்லாவற்றையுஞ் செய்பவனுமிருக்கிற பரமசிவன், ஆணவமலம் கன்மமலம் மாயா மலங்களால் அநாதியே எல்லாவற்றையும் அறியுந்தன்மையும், எல்லாவற்றையுஞ் செய்யுந்தன்மையும் தடுக்கப்பட்டுள்ள உயிர் வர்க்கங்களுக்கு, அந்தப் பாசங்களின் சேர்க்கையை நீக்குகின்றானென்பது ஸ்ரீ காமிக ஆகமத்தின் முதற்சூத்திரத்தின் பொருளாகும்.

இதன் கருத்தாவது, எல்லாப் பொருள்களையும் தடையின்றி இயல்பாகவே அறிகின்ற ஞானக்கிரியா சத்திகளை உடையவனாயிருத்தலால் பதியென நின்ற பரமசிவன்,

அநாதியே (இயல்பாகவே) பாசத்தின் சேர்க்கையால் தன்னைப்போலாகாது வேறுபாட்டையடைந்து (அஃதாவது எல்லாப் பொருள்களையும் அறியமுடியாத தன்மையை அடைந்து) பசுரூபர்களான ஆன்மாக்களிடத்துக் கருணையுடையனாய், அவ்வான்மாக்களுக்கு ஞானக்கிரியைகளைத் தடுத்தலால் பாசங்களென்று வழங்கப்படும் ஆணவமலம் கன்மமலம் மாயா மலங்களை நீக்கித் தன்னுடைய *தர்மம் போன்ற முற்றுணர்வு முதலிய குணங்கள் விளங்கித் தோன்றச் செய்தலென்னும் அனுக்கிரகத்தைச் செய்கின்றான் என்பதாம்.

ஆன்மாக்களுடைய ஞானக்கிரியைகளை மறைக்கும் அநாதியாயுள்ள மலத்தின் அதிகாரமானது எதுவரையும் நிவிர்த்தி அடையவில்லையோ, அதுவரையும் பதியினுடைய அனுக்கிரக ரூபமான முத்தி பசுக்களுக்கு நிகழ்கிறதில்லை

மிருகேந்திரத்திலும் இவ்வாறே மலத்தினுடைய அதிகாரமும், திரோதான சத்தியினுடைய அதிகாரமும் நீங்குங் காலத்தில் அவற்றின் சத்திகளும் நீங்குதலால், உயிர்களுக்கெல்லாம் உறவினனாய் விளங்கும் பரமசிவன், அவ்வாறு சத்தி நீங்கப்பெற்ற ஆன்மாவிற்கு முற்றுணர்வு முதலிய குணங்கள் விளங்கித் தோன்றச் செய்கின்றான் என்று கூறப்பட்டிருத்தல் காண்க.

கண்ணினிடத்துள்ள படல முதலியனபோல் மலம் திரவியமாதலால் வைத்தியனுடைய தொழிலால் படலம் நீங்குமாறுபோலப் பரமசிவனுடைய தொழிலால் மலம் நீங்கவேண்டுமாதலால், படலத்தின் நீக்கம் அதன் பக்குவத்தை எதிர்பார்ப்பது போல், மல சத்தி திரோதான சத்திகளின் நீக்கமானது ஒருவிதமான பரிணாமமென்னும் மல

---

*சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடைய உயிர்கள் எக்காலத்தும் சிவனோடு பிரிப்பின்றி நிற்றல்பற்றித் தன்னுடைய தருமத்தையுடையது உயிரெனக் கூறப்பட்டது.

பரிபாகத்தை எதிர்பார்க்கின்றது. மலத்தின் பரிபாகத்தைச் செய்வதற்காகவே பிரபுவான சிவபெருமான், ஆன்மாக்களறியாத வண்ணம் மறைந்து நின்றுகொண்டு * "கலப்பில்லாதது பரிணமிக்காது" என்னும் நியாயத்தால் மாயா காரியமான தனுகரணபுவனபோகங்களின் சேர்க்கையைக் காரணமாகக் கொண்ட அநாதி கன்மானுபவ ரூபமான சம்சாரத்தை ஆன்மாக்களுக்குக் கூட்டுவிக்கின்றான். (இக் கூட்டத்தால் மலம் பரிபாகமடைகின்றது.) இவ்வாறு சம்சாரத்தை ஆன்மாக்களுக்குக் கூட்டுவிப்பதே படைத்தல் காத்தல், அழித்தலென்னும் தொழில்களை அனுசரித்த திரோதானம் என்னுந் தொழிலாகப் பரமசிவனுக்குக் கூறப் படுகின்றது. ஆகவே, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரகித்தல் என்னும் ஐந்தொழில் புரியுங் கருணைக்கடலான பரமசிவனே கருணைக்கடலாயிருத்தலால் வழிபடத் தகுந்தவனென்பது பரமாசிரியர்களுடைய உபதேசக் கிரமமென்க.

அந்தப் பரமசிவனை வழிபடுகின்றவனாயிருக்குந் தன்மை யாதெனில், தீக்ஷையினால் சுத்திபெற்ற ஆன்மாக்கள் அந்த வழிபாடு என்னுந் தொழிலுக்குப் பற்றுக்கோடாயிருத்தலேயாம். (அஃதாவது தீக்ஷையினால் சுத்தி பெற்றிருத்தலே பரமசிவனை வழிபடுதற்கு உரிய தன்மை என்பதாம்.)

எதனாலெனின், தீக்ஷையால் சுத்திபெற்ற ஆன்மாவிடத்திற்றான் சமத்தன்மை நிகழ்தலாலென்க. இது பற்றியே நிருவாண தீக்ஷை பெற்ற சாதகர்கள் ஆசிரியத் தன்மை சித்தித்தற்பொருட்டுச் சித்தாந்த சாத்திரங்களையே ஆசிரியன் முகமாய் அறிகின்றனர். ஆசிரியத்தன்மை என்னும் அதிகாரம் ஞானம் ஒன்றினால் மாத்திரம் சித்திக்கத் தகுந்தது. ஞானமும் உபயோகத்தோடு கூடிய மூன்று பொருள்களை விடயமாகக்கொண்டு உபயோகப்படுகின்றது. அந்த மூன்று

---

*மோரின் கலப்பின்றி, பால் தயிராகப் பரிணமித்தல் இல்லை.

பொருள்கள், பதி, பசு, பாசங்களென்று அறியத்தகுந்தன. (ஆகவே, பதிஞானம், பசுஞானம், பாசஞானமென ஞானம் மூவகையாமாறு காண்க.) அந்தப்பதி பசு பாசங்கள், சரியை கிரியை முதலியவற்றில் * உபயோகப்படுவனவாக காமிக முதலிய சித்தாந்த சாத்திரங்களிற் கூறப்படுகின்றன. வேறு சாத்திரங்களில் இவ்வாறு கூறப்படவில்லை. எதனு லெனின், ஏனைய சாத்திரங்களனைத்தும் முற்றுணர்வில்லாத உயிர்களால் செய்யப்பட்டிருக்கின்றமையால் எல்லாப் பொருள்களையும் விளக்கஞ் செய்யா வகையாமென்க. அஃதாவது, சித்தாந்தமென்னுஞ் சிவாகமங்களை அருளிச் செய்த பரமசிவனுக்கு முற்றுணர்வு உடைமையானது அநாதியே பாசமின்மையால் நிச்சயிக்கப்படுகிறது. ஏனைய சாத்திரங்களைச் செய்தவர்களான மகரிஷிகள் பாசத்தால் தடுக்கப்பட்ட ஞானக் கிரியைகளையுடையராயிருத்தலால் அவர்களிடத்து முற்றுணர்வுடைமை பொருந்துகிறதில்லை. அன்றி, இவர்களுடைய அறிவானது துணையை விரும்பு கின்றமைபற்றி ஏகதேசமாகப் பொருள்களையறியுந் தன்மை உடையது. இவர்களும் பதிக்குக் கூறப்பட்ட (முற்று உணர்வுத் தன்மையென்னும்) சத்தியுடன் கூடினவர்களா யிருந்தால் பதி சம்பந்தமான சைவ சமயத்தையே சார்ந் திருப்பார்கள். ஆகையால் அந்தப் பதியால் சுதந்திரமாய்ச் செய்யப்பட்ட சாத்திரமானது எல்லாப் பொருள்களையும் விளக்கஞ் செய்வதுபற்றி, சாதகர்களால் ஆசாரிய அபிஷே கத்தின் பொருட்டு அவசியம் அறியத்தக்கது. இந்தச் சிவ சாத்திரங்களை அறியாதவர்களுக்கு முற்றுணர்வுத் தன்மை நிகழ்கிறதில்லையாகையால் அவர்கள் பிறருக்கு எவ்வாறு அனுக்கிரகஞ் செய்ய முடியும்? (முடியாது.)

---

* வழிபடப்படுதல், வழிபடுகல், வழிபடுதற்குக் கருவி யாதல் என்னும் இந்த முறையில் சரியை முதலியவற்றோடு பதி பசு பாசங்கட்கு உபயோகங்காண்க.

அவ்வாருயின், மறைகள் நித்தியங்களாயிருத்தலால் எல்லாப் பொருள்களையும் விளக்கஞ் செய்யும் தன்மை அந்த மறைகளுக்கே உரியதாகும்; அவ்வாறன்றி ஈசுவரனுல் செய்யப்பட்ட ஆகமங்களுக்கு எல்லாப் பொருள்களையும் விளக்குந் தன்மை உண்டென்பது எவ்வாறு கூடுமெனின், இந்தக் கேள்வி பொருந்தாது. எதனுலெனின், ஈசுவரனுல் கூறப்பட்டது பற்றியே மறைகளுக்கும் எல்லாப் பொருள் களையும் விளக்கஞ் செய்யும் தன்மை உள்ளதே ஒழிய நித்தியமாயிருக்கின்றமையால் அத்தன்மை உள்ளதென்று கூறவில்லையாதலாலென்க.

அவ்வாருயின், மறைகள் சிவாகமங்களென்னும் இவ் விரண்டில் ஒன்று பயனற்றதாகுமேயெனில், அஃதன்று. மிகவும் நுட்பமான பொருள்களையுடைய மறையானது ஒன்றோடொன்று மாறுபட்ட பல சமயிகளின் ஐயத்துக்கு இடமாயிருத்தலால் அந்த மறையின் சொற்களின் பொருள் களை விளக்கஞ் செய்விக்கும் சிவாகமங்கள் பலருக்கும் உப யோகமாகும். ஆதலால் இரண்டும் பயனுடையனவே என்று அறிந்து கொள்க. இவ்வாறே மறைகளின் சாரம் சிவாகமம் என்று நூல்களிலுங் கூறப்பட்டிருத்தல் காண்க.

அவ்வாருயின், இந்த ஆசாரியத் தன்மையானது (தீக்ஷை செய்தல் முதலிய அதிகாரமிருப்பது பற்றி) கட்டுப்படுத்து தல் என்னும் பாசமாகுமேயெனில், ஆகாது. எதனுலெனின், எல்லாப் பாசங்களுடைய நீக்கத்தின் பின்னர் உண்டா கின்ற ஆசாரியத்தன்மையில் முற்றுணர்வுடைமை என்னும் சர்வஞ்ஞத்தன்மையுடன் விரோதமில்லாத அதிகார மல மாத்திரம் எஞ்சியிருத்தல்பற்றி இந்த ஆசாரியத்தன்மை யானது அபரமோக்ஷமாயறியப் படுகின்றமையாலென்க. அங்ஙனமாயினும், ஆசாரியனுக்குத் தேகமிருத்தலால் பசு வோடு சமத்தன்மை நிகழுமெனில், ஆசாரியனுடைய தேகமானது சுத்தமாயையிலிருந்து உண்டானமையால் அந்தத் தேகம் அறிவை உண்டுபண்ணுமேயன்றி மோகத்தை

உண்டுபண்ணுது: ஆதலால் பசுவோடு சமத்தன்மை நிகழா தென்க. பசுவினுடைய தேகமோவெனில், அறிவை உண்டு பண்ணுது மோகத்தையே உண்டுபண்ணும். எதனுலெனின், மோகத்தைச் செய்யும் அசுத்த மாயையிலிருந்து உண்டான மையாலென்க.

அங்ஙனமாயினும், ஆசாரியனுக்குப் பதியான பரம சிவனோடு சமத்தன்மை உண்டென்பது எவ்வாறு கூடுமெனில், கூறுகிறோம். அந்தப் பதியான பரமசிவன் தனக்கு அந்தரங் கமாயுள்ள தன்னுடைய சத்தி ரூபமான சரீரமிருப்பினும், பசுக்களுக்கு அனுக்கிரகஞ் செய்தற்பொருட்டு வெளிப் படையாயுள்ள சுத்த மாயா சம்பந்தமான வேறு சரீரத்தை விரும்புகிறான். அந்தச் சரீரம் கன்ம மற்றவனாயும், அதுபற்றி அசுத்த மாயைக்கு மேற்பட்டவனாயுமிருக்கும் சுத்த போகத் திற்குரிய ஒருவனைச் சார்ந்தே இருக்கின்றது எவனைச் சார்ந்திருக்கின்றதோ அவனே ஆசாரியனாவன். ஆதலால் பதிக்கும் ஆசாரியனுக்கும் ஒரேவிதமான சரீர சம்பந்தம் இருத்தல் பற்றியும் ஒரேவிதமான தொழிலுடைமை பற்றியும் சமத்தன்மை உண்டென்பது நன்கறியத் தகுந்த தாகும். ஆதலினாற்றான் உலகத்தில் சிவனே குரு, குருவே சிவன் என அவ்விருவருக்கும் ஒற்றுமை கூறப்படுகின்றது.

அவ்வாறாயின், ஆசாரியனுக்கும் பசுக்களுக்குக் கூறப் படுவது போல் பதியால் ஏவப்படுந் தன்மை உண்டென்று நூல்களிற் கூறப்படுவது எவ்வாறு பொருந்துமெனில், அஃதுண்மையே. ஆயினும் குருவானவன் பசுக்களைப்போல் துன்பமான போகங்களைத் தருங்காரியங்களில் ஈசுவரனால் ஏவப்படுகிறானில்லை. வேறெவ்விதமெனில், அந்த குருவான வன் பரமேசுவரனால் மிகத் தீவிரமான சத்திநிபாதத்தை அனுசரித்து நான்காவது தீக்ஷையாகிய ஆசாரியாபிஷேகத் தால் அனுக்கிரகஞ் செய்யப் பெற்றிருத்தலால் அனேக மாய்த் தனக்குச் சமானமாயிருத்தல் பற்றித் தனக்கு உரிமை யான சுத்த போகத்திற்கு மாறுபாடில்லாத பிறருக்குப்

பயன்றருந் தொழில்களிற்றுன் ஏவப்படுகின்முன் என்றறிந்து கொள்க. இவ்விதமான ஏவப்படுந் தன்மையானது பர மோக்ஷத்திற்கு மாறுபாடாகாது. எகனுலெனின், ஆசாரியத் தன்மையானது அதிகாரத்தினிறுதியில் சரீர நாசத்திற்குப் பின்னரே பூரணமான பரமோக்ஷத்தை அடையச் செய்கிற படியாலென்க. இதுபற்றியே, ஆசாரியத்தன்மை அபர மோக்ஷமென்பது சித்தாந்தம்.

எந்தச் சாதகத்தன்மையால் புருடர்கள் சித்தாந்த சாத்திரங்களைக் கேட்க அதிகாரமடைகின்றனரோ அந்தச் சாதகத்தன்மை எதுவெனில், கூறுகின்றேம். எந்தப் புருடனுக்கு மிகுதியான சத்திநிபாதம் நிகழ்ந்து அத்து வாக்களாறையும் சுத்தி செய்கலுடன் கூடிய மூன்ருவதான நிருவாண தீக்ஷை நிகழ்கின்றதோ அந்தப் புருடனே சாதகனுவன். அவனுற்றுன் சித்தாந்த சாத்திரங்கள் அறியத்தகுந்தனவாகும்.

அந்தச் சாதகத்தன்மை எவ்வாறுண்டாகுமெனில், யாதாவதொரு காலத்தில் பல பிறப்புக்களில் நிகழ்ந்த வாசனுவயத்தால் புண்ணிய காரியங்களைச் செய்கின்ற வனும், யாதாவதொரு ஆச்சிரமத்தில் வசிப்பவனுயு மிருக்கும் யாதாவதொரு ஆன்மாவுக்கு யாதாவதொரு புண்ணிய நிகழ்ச்சியால் அநாதியாகவே அறிவை மறைத் திருக்கும் மலம் சிறிது பரிபாகமடையும் அடையவே மிகச் சிறிதான சத்திநிபாதம் நிகழும். நிகழவே, அந்தச் சத்தி நிபாதத்தை அனுசரித்ததாயும் சிவபெருமானிடத்துப் பத்தி சிரத்தை முதலியவற்றின் விளக்கத்தை உடையதாயும் சஞ்சித கன்மத்திற்குப் பரிபாகத்தை உண்டுபண்ணுவ தாயும், சாஸ்திர விதிப்பிரகாரம் சிரஸில் சிவஹஸ்தத்தை வைத்தல் ரூபமாயுமுள்ள சமயமென்னும் யாதொரு தீக்ஷை யானது, குருவழிபாடு கணபதி பூஜை சூரியபூஜை முதலியவை சித்திப்பதின் பொருட்டுச் செய்யப்படு கின்றதோ, அது, முதலாவதான தீக்ஷையாகும்.

பின்னர், சமயதீக்ஷை பெற்ற ஆன்மாவுக்குச் சிறிது மல பரிபாகம் உண்டாகும். உண்டாகவே, சிறிது (மந்த) சத்திநிபாதம் நிகழும். அந்தச் சத்திநிபாதத்தை அனுசரித்ததாயும், பத்தி முதிர்ச்சியுடன் கூடினதாயும் கன்ம முதலிய பாசங்களின் நாசத்தைச் செய்கிறதாயும், பிறப்பினுலுண்டான ஜாதி நசித்து வாகீசுவரி கர்ப்பத்தில் பிறத்தல் ரூபமாயும் உள்ள யாதொரு தீக்ஷையானது, மந்திரோபதேசத்தைப் பெறுதல் சிவலிங்க பூஜை செய்தல் முதலியவற்றில் உரிமை சித்திப்பதன் பொருட்டுச் செய்யப் படுகின்றதோ, அந்தத் தீக்ஷை இரண்டாவதான விசேட தீக்ஷையாகும்.

பின்னர், தீவிர மலபரிபாகம் உண்டாகும். உண்டாகவே, தீவிரமான சத்திநிபாதம் நிகழும். அந்தச் சத்திநிபாதத்தை அனுசரித்ததாயும், முற்றுணர்வுத்தன்மை முதலிய ஆறு குணங்களும் விளங்கும்படிச் செய்வதாயும், கலை முதலிய ஆறத்துவாக்களின் சுத்தியால் மலம், மாயை, கன்மமென்னும் மூன்று பாசங்களுக்கும் நாசத்தைச் செய்வதாயுமுள்ள யாதொரு நிருவாண தீக்ஷையானது, நித்திய முதலிய சகல சிவதருமங்களையும் அனுட்டிப்பதின் பொருட்டுச் செய்யப்படுகின்றதோ, அது மூன்ருவதான தீக்ஷையாகும்.

இந்த நிருவாணதீக்ஷையுடையவனே சித்தாந்த சாத்திரப்பொருள்களை அறியச் சமர்த்தனுகின்ருன். எதனுலெனின், அவனே பசுத்தன்மை நீங்கினவனுய் சிவத்தன்மையின் விளக்கத்திற்கு உரியவனுகின்ருனுதலாலென்க. முதலாவதும் இரண்டாவதுமான சமய விசேட தீக்ஷைகளைப் பெற்றவர் சித்தாந்த சாத்திரப் பொருள்களின் அறிவிற்கு உரியராகின்றனரில்லை. எதனுலெனின், அந்தத் தீக்ஷைகளை உடையார்க்குப் பசுத்தன்மை நீங்காமையாலென்க.

அவ்வாருயின், சமயதீக்ஷை பெற்றவனுக்கு முன்பிறப்பு ரூபமான சாதிச் சேர்க்கையிருத்தலால் பசுத்தன்மை

நீங்காமை பற்றிச் சித்தாந்த சாத்திரங்களைக் கேட்பதில் அதிகாரமில்லை என்பது கூடும். விசேட தீக்ஷைபெற்ற புத்திரனுக்கு வாகீசுவரீ கர்ப்பத்திலிருந்து பிறப்புண்டான மையின் சித்தாந்த சாத்திரங்களைக் கேட்பதில் அதிகார மில்லை என்பது எவ்வாறு கூடுமெனின், அஃதுண்மையே. வாகீசுவரீ கர்ப்பத்திலிருந்து உண்டாகும் பிறப்பு ரூபமான பிறவி மாத்திரம் சிவத்தன்மையை விளக்குகிறதில்லை. வேறு என்னையோவெனில், பசுத்தன்மை என்னும் மலத்தின் பரிபாக விசேடத்தால் சாதிக்கத் தகுந்ததாயும், வேறு காலத்தில் நிகழக்கூடியதாயுமுள்ள சம்ஸ்கார விசேடமும் சேர்ந்துதான் சிவத்தன்மையை விளக்குவதாகும். எதுபோலுமெனின், அந்தணப்பெண் வயிற்றுப் பிறந்த அந்தணனொருவனுக்கு அப்பெண்ணினிடத்துண்டான பிறப்பு மாத்திரத்தால் மறைகளோதுதற்குத் தகுதியான அந்தணத்தன்மை சித்திக்காமல் வயதின் முதிர்ச்சியால் அடையத்தகுந்த உபநயன முதலிய சம்ஸ்காரங்களுஞ் சேர்ந்து மறைகளோதுதற்குத் தகுதியான அந்தணத் தன்மை சித்திப்பதுபோலுமென்க. இவ்வாறே விசேட தீக்ஷையால் வாகீசுவரீ கர்ப்பத்தில் பிறப்படைந்த புருடனிடத்தில் நீண்டகாலமாய்ச் சிவத்தன்மை விளங்கவொட்டாது செய்யும் மலத்தின் தன்மையை விலக்கிச் செய்யப்படும் நிருவாண தீக்ஷையானது, சித்தாந்த சாத்திர ஞானத்துக்கு உரிமையான சாதகத்தன்மையைத் தருமென அறிந்து கொள்க.

அவ்வாறாயின், இத்தன்மையினையுடைய சாதகனுக்கு மலம் மாயை முதலிய எல்லாப் பாசங்களும் நிருவாண தீக்ஷையினாலேயே ஒழிவடைகிறபடியால் ஆசாரியத்தன்மை பயனற்றதாகுமேயெனில், ஆகாது. தீக்ஷைபெற்ற ஆன்மா அந்தந்தச் சமயத்தில் பாசமற்றவனாயிருப்பினும், தீக்ஷைக்குப்பின் செய்யக்கூடிய அபிஷேகத்தினாற்றான் அந்த ஆன்மாவிற்குச் சிவத்தன்மையின் விளக்கம் நிகழ்கின்றது. அந்த அபிஷேகமும் சிவபூஜையோடு இடையறாத சித்தாந்த

சாத்திரங்களின் பயிற்சியினாற்றான் முடிவையடைகிறது. எது போலுமெனில், உலகத்தில் ஒருவனுடைய நோயானது வைத்திய சாத்திரங்களின் பயிற்சிமாத்திரத்தால் நிவிருத்தியடையாமல் அச்சாத்திரப் பயிற்சியோடு பத்தியத்துடன் கூடிய மருந்தை உட்கொண்டே நிவிருத்தியடைகிறது போலுமென்க இவ்வாறே சாதகனாலடையத்தகுந்த பரமோக்ஷத்திற்கு வழியாயுள்ள அபரமோக்ஷரூபமான அபிஷேகமானது ஆசாரியத்தன்மைக்கு உரியதாகும்.

ஸ்ரீ சூரிய சிவாசாரியார் இயற்றிய சைவ சித்தாந்த பரிபாஷை தமிழ் மொழி பெயர்ப்பு நூலில் முதலாவது உபோத்காத பரிச்சேதம முற்றிற்று.

[குறிப்பு: எஞ்சியுள்ள பகுதிகள் தொடர்ந்து வரும் ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப்படும்.]

சிவம்

உ

சிவமயம்

பேராசிரியர் திரு. பெ. கு. வரதராசன் அவர்கள் பாடிய

# சிவபெருமான் புகழ் மாலை* ஒரு கண்ணோட்டம்

புலவர் மு. கங்காதரன், M.A., B.T.

**பாயிரம் ;**

'சிவபெருமான் புகழ் மாலை' என்னும் இப்பக்திச் சிறு நூல் மணத்தால் சீரிய நூல். 'உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' என்பது இந்நூற்கும் பொருந்துந் தொடரே. இது வாழ்த்துப் பகுதி, நூற்பகுதி என இருபகுதியைக் கொண்டு முன்னதற்கு ஆறுபாடலும், பின்னதற்கு முப்பது பாடலுமாக முப்பத்தாறு வெண்பா மலர்களைக் கொண்டு மணம் வீசுகிறது. இந்நூல் முகப்பில் நேரிசை அகவலால் பாடப்பெற்று நூலாசிரியரின் முன்னுரை ஒன்று இணைக்கப் பெற்றுள்ளது. இதன் ஆசிரியர் "நன்னயம்சால் பண்புடையான், அன்புமிக்கான், நல்வயிரக் காவியங்கள் தோயும் நாவான், பன்னரிய தமிழ் வளர்க்கும் ஆசான், செவ்விபயில் 'வரதராசன்' எனும் கவிஞர்" ஆவார். இது நாளும் சைவ மணம் பரப்பும் பொத்தனூர் திருமுறை மன்ற வெளியீடாக வந்துள்ளது. அம்மன்றத்தின் பதினோராவது ஆண்டுவிழா நிகழ்ச்சி சைவ சமயத்தாரால் கோயில் என வழங்கப் பெறும் சிதம்பரத்தில் நடந்தபோது வெளியிடப் பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது.

---

* இந்நூல் முழுமையும் இம்மலரில் தனியாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. (பக்கங்கள் 202—208)

**ஆசிரியர் உள்ளக்கிடக்கை:**

'பருப் பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண் பொருட்டாகிய நூலினிது விளங்கும்'

என்ற முன்னேயோர் கொள்கைப்படி நூற்பொருள் உணர்தற்கு முன்னர் நூலாசிரியரே வழங்கும் முன்னுரையில் காணப்பெறும் செய்தியை உணர்ந்து கோடல் நலம் செய்யும் என்பது ஒருதலே.

'மலர்கள் மலர்ந்தால் இறைவன் முடித்தலத்தைச் சார வேண்டும். இன்றேல் வண்டு துய்த்தற்காகவேனும் மலர்தல் வேண்டும். அதுவுமின்றேல் பிறர்சூட்டிக் கொள்ளும்படியாக எண்ணத்தைத் தூண்டிச் சூட்டப்பெற்று இசைபட வாழவேண்டும். யாவராலும் காணப்படாத நிலேயில் புதரின் இடுக்குகளில் இருப்பினும் மணமேனும் பரப்புதல் வேண்டும' என ஒட்டுவகையான் மனிதவாழ்வு அமைய வேண்டிய முறையைச் சுட்டிக்காட்டிச் செல்வது பிறந்த தன் பயன் எவ்வகையிலேனும் பிறர்க்குப் பயன்பட வாழ்வதே என்பதைத் தெளிவாக்குகிறது இந்நூலின் பாயிரம்.

**நூல் : யாப்பமைதி :**

தலேமாலே கொண்ட சிவபிரானுர்க்கு அடியார்கள் பலரும் சொன்மாலே சூட்டி வழிபட்டனர். அவை எண்ணிறந்த தேவாரமாக, மும்மணிமாலேயாக, இரட்டைமணி மாலேயாக மேலும் பிறவாகப் பொலிந்தன. ஆசிரியரும் அடியார் வழி நின்று கருத்தலங்கலேச் சூட்டுவதை,

'மனத்தில் தோன்றிய மலர்ப்பறித்து அவற்றைச்
சிவபெருமான் புகழ்மாலே யான் செய்தேன்.'

என்னும் முன்னுரையாக நின்ற அகவல் அடிகளால் உணர்கின்ருேம். கருத்து மணம் மிக்க முப்பது வெண்பா மலர்களே இறையன்பு என்னும் நார்கொண்டு பிணேக்கப் பெற்றிருப்பது இம்மாலே நூல்.

வெண்பா யாப்பு பத்தினித்தன்மை வாய்ந்தது. செப்ப லோசையும் சங்கராபரணப் பண்ணும் தனக்கெனக் கொண்ட இவ்யாப்பில், சீரிய கருத்துக்களைச் செப்பவும், சங்கரன் புகழைக் கூறவும் ஆசிரியர் மேற்கொண்டது பொருத்தமானதே. வாழ்த்துப்பகுதி, நூற்பகுதி என்னும் இரண்டு பகுதிகளிலும் உள்ள வெண்பா மலர்கள் எண்ணிக்கை முப்பத்தாறு. இவற்றுள் இரண்டு வெண்பாக்களே இன எதுகையை நோக்கிப் பார்க்கும்போது ஒருவிகற்பத்தால் வந்த ஆசிடையிட்ட நேரிசைவெண்பாக்களாக அமைந்துள்ளன. ஏனைய முப்பத்து நான்கு வெண்பாக்களும் இருவிகற்பத்தான் வந்த ஆசிடையிட்ட நேரிசை வெண்பாக்களாகக் காணப்படுகின்றன. இவையனைத்தும் இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் விரவி வந்த ஒழுகிசைச் செப்பலோசையே பெற்று வருகின்றன.

'சிவாய நமவென்னும் சீர்சொல்லி வாழ்வ
துவாயமெப் போது முனகது'

எனவரும் (நூற்பகுதி—4) ஓரிடத்தில் மட்டும் எதுகை நோக்கிய விகாரத்தைக் காண்கிறோம். 'நல்' என்னும் நிலைமொழியுடன் உயிர்முதலாகிய 'இடம்' என்னும் வருமொழி இணையும் போழ்து, 'தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்' என்னும் விதிப்படி 'நல்லிடத்தை' எனப் புணர்தல் வேண்டும். ஆனல்,

'உன்னிடத்தில் கூறி யிரப்பதற் கொன்றுண்டாம்
நன்னிடத்தை யேநாடும் நாயகனே'

என்னும் ஓரிடத்தில் மட்டும் 'நீனுலகம்' என அப்பர் பெருமான் ஆண்டது போல எதுகை நோக்கிய விகாரமாக வந்துள்ளது. மேலும் இணைக்குறள் நேரிசை வெண்பாவோ, இன்னிசை வெண்பாவோ இதன்கண் இடம் பெற்றில. இந்நூலில் பலவகையான முரண்தொடைகள் அமைந்திருப்பதையுங் காணலாம். இத்தகு யாப்பமைதியோடு நடக்கின்றது இந்நூல்.

வாழ்த்துப் பகுதி:

இந்நூலின் வாழ்த்துப் பகுதி கணபதி துதி (1), அவையடக்கம் (1), மூவரது பெருமையும் நினைவும் (1), திருமுறைகளும் பயனும் (2) என்னும் ஐஞ்சிறு தலைப்புகளுடன் ஆறு பாடல்கள் கொண்டு அமைந்துள்ளது.

வாழ்த்துப் பகுதி : கணபதி துதி

'பிடியதன் உரு உமை கொளமிகு கரியது' என்னும் தேவாரத்தில் விநாயகர் பிறப்பு காணப்படுகின்றது. கணபதியைப் பற்றி வழங்கும் கதைகளில் ஒன்று, அவரை வழிபடாது சென்ற சிவனது தேர் இற்ற நிகழ்ச்சியாகும். இதனை 'அச்சிவன் உறை ரதம் அச்சது பொடிசெய்த—அதிதீரா' எனும் தொடர்களில் அருணகிரியார் குறிக்கின்றார். இலக்கண உரையாசிரியர்களுள் ஒருவரான சேனாவரையரும்,

'தன்தோள் நான்கின் ஒன்று கைம்மிகஉம்
களிறுவளர் பெருங் காடாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளிய என்நெஞ்சே'

எனக் கணபதி துதியை அமைக்கின்றார்.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளாகிய சிவனார் முதல் சங்கத்துத் தலைமைப் புலவர். களவியல் என்னும் பெயரில் அறுபது நூற்பாக்கள் யாத்தவர். 'கொங்கு தேர் வாழ்க்கை' எனும் சங்கப்பாடலை இயற்றியவர். 'மதிமலி புரிசை' எனும் சீட்டுக்கவியுந் தந்தவர். குமரக் கடவுள் சங்கப்புலவராக இருந்தவர், களவியல் உரைக்குக் காரணிகளாக நின்று மெய்யுரை கூறிய உருத்திரசன்மர். அகத்தியனுக்குத் தமிழ் உணர்த்தியவர். விநாயகரோஎனின், 'முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில் முற்பட எழுதிய முதலோன்' எனப் பெறுபவர். மூவருமே எழுதுதல், மெய்யுரை காணல் முதலியவற்றில் சிறந்தவர்கள். தமிழோடு தொடர்பு பூண்டவர்கள். இம்மூவருள், இந்நூல்

சிறக்க அருளும்படி சிவனை வேண்டியழைப்பது முறை யன்று. என்னை? சிவன் மீது பாடப்படும் தமிழுக்கு அவனே துணை நிற்றலாகாது என்பதனாலாம். குமரனோ வெனில், அவன் இளையன். முன்னுரிமை குடும்பத்தில் மூத்தவர்க்கே தரல் இயல்பு என்பது பற்றிக் கணபதியைக் காக்கும்படி புலவர் துதிபாடினர் போலும். மேலும், எழுதுதலாகிய தன்வினைக்கு ஏடும் எழுத்தாணியும் எடுத்த வனையே துணையாக அழைத்தனர் எனலுமாம். அது பற்றியே இந்நூலாசிரியரும் கணபதி துதியை அமைத்து 'அலகில் பெருமை புனையப் பிழை நலிய – வருக களிறே மகிழ்ந்து' எனவேண்டி வணங்குகின்றார்.

'ஓம்' என்ற பிரணவத்தின் இடைப்பட்ட எழுத்தாகிய உகரம் மங்கல எழுத்தாகலின் பொருத்தம் பற்றி முதற் கண் உகரத்தில் இந்நூல் தொடங்கப் பெறுகின்றது. அன்றியும், ஓங்கார வடிவினனாகக் காட்சிதரும் கணபதியின் துதியாகலின், அதனுள் ஒன்றாகிய காத்தல் பொருண்மையை உணர்த்தும் உகரத்தை முதற்கண் பெய்தமைத்தார் எனலாம். மற்றும் முன்னைப் பெரியோர்கள் எல்லோரும் 'உலகம்' எனும் சொல்லை முன்னர் வைத்துத் தங்கள் நூல் களைத் தொடங்கினார்களாதல் பற்றி இந்நூலாசிரியர் 'உலகம்' எனத்தொடங்கினர் என்பதும் பொருந்துவதே. சிறப்பாகத் தென்னாட்டார்க்கும் பொதுவாக உலகர்க்கும் உரியன் இறைவன் என்பது கருதி

'தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

என்றுரைத்த மாணிக்கவாசகரைப் பின்பற்றி 'உலக முதல் வன்' எனத் தொடங்கினர் நம் ஆசிரியர் என்பதும் ஒன்று. இங்ஙனம் கணபதி துதியைத் தொடங்கியவர் 'முதல்வன் இருதாள் நிலவும் மனத்தில் பெருமைபுனையப் பிழைகள் நலிய களிறே வருக மகிழ்ந்து நிறைக' என முடிக்கின்றார்.

வாழ்த்துப் பகுதி: அவையடக்கம்.

அவையடக்கப்பகுதி 'பூவொடு சேர்ந்த நாரும் மணம் பெறும்' என்னும் பழமொழியுடன் தொடங்குகின்றது. பொன்மலையைச் சார்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறம் பெறும் என்னும் காரிகை ஆசிரியரின் வழி நின்று 'பூவொடு சேர்ந்த நாரும் மணம் பெறும், காவொடு சேர்ந்த புன்மலரும் மேன்மையுறும், நீசன் என் பாடலும் இறைவன் புகழொடு சேர்தலால், தகுதியுறும், அவ்வழியே யானும் தகுதியுறுவேன்' என மொழிவது நினைந்து மகிழ்தற் குரியது.

வாழ்த்துப்பகுதி: சமயக் குரவர் துதி

காஞ்சிப்புராணத்தில் சைவசமயக் குரவர் நால்வர் வணக்கத்தை வைத்தாற்போல இவ்வாசிரியரும் நால்வர்க்கும் வாழ்த்தமைக்கின்றார். இவர் தம் மனத்தில் மனைவியர் இருவருடன் இல்லறவாழ்க்கையை மேற்கொண்டொழுகிய சுந்தரரே முதற்கண் நிற்கின்றார். இரண்டாவதாகத் திருமணமேற்ற திருஞானசம்பந்தரும் மூன்றாவதாகத் மணமேற்காத அப்பர் பெருமானும் நிற்கின்றனர். காரணம், 'பிறவிப்பெருங்கடல் நீந்த விரும்புவோர் துறவித்துயர் தாங்க வேண்டா, இல்லறத்தில் இருந்து வாழ்ந்து துயர் போக்குந் திருமுறைகளை ஓதினால் போதும்' என்னும் கருத்தினர் ஆதலின் என்று கொள்ளலாம். திருநாவுக்கரசரும் 'காதல் மடப்பிடியோடும் களிறு களித்து வருவன கண்டேன்' எனத் திருவையாற்றுத் திருப்பதிகத்தில் இல்லறத்தைச் சிறப்பிப்பான் போன்றே பாடியுள்ளமை உன்னத்தக்கது. மேலும்,

''காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களோடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''

(தொல்காப்பியம்)

என முன்னையோர் மொழிந்த இலக்கணம் இவ்வாசிரியரை இங்ஙனம் கருதச் செய்தது போலும். திருவள்ளுவரும் இல்லறவியலின் பின்னரே துறவியல் வைத்தமை இக் கருத்தை உட்கொண்டோ எனக் கருத வேண்டியுளது.

வான் கலந்த மாணிக்கவாசகர் தேன் கலந்த திருவாசகத்தைத் தந்து, 'அழுதால் உன்னைப் பெறலாம்' என மொழிந்த வாசகம் இறைவனை அடைவதற்குரிய எளிய சாதனத்தைக் குறிப்பதாகின்றது. 'அழுத பிள்ளை பால் குடிக்கும்' எனும் பழமொழியைப் பலகாலும் கேட்டவராகலின் கழுவாய் அறிந்த மகிழ்ச்சியில் 'உனதாள் கூட்டி விட்டேன் நெஞ்சில் குறித்து' எனக் குறிக்கின்றார்.

**வாழ்த்துப்பகுதி: திருமுறையும் பயனும்**

திருமுறை நூல்களை எண்ணு முகத்தான் அவ்வந்நூல்களுக்கு உரிய ஆசிரியர்களையும் நினைவுகூர்ந்து துதிப்பதாய்க் கருத வேண்டியுளது. காரணம், வாழ்த்துப் பகுதி என்பதால். திருமுறைகள் ஓதில் இல்லறத்தானும் பிறவிக் கடலைக் கடக்கலாம், மரணமிலாப் பெருவாழ்வு எய்தத் துறவித்துயர் தாங்க வேண்டா எனும் முகத்தால் 'அறம், பொருள், இன்பம், வீடடைதல் நூற்பயனே' என்பதைக் குறித்தாராயிற்று.

**நூற்பகுதி:**

இப்பகுதி முப்பது பாடல்களைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்றது. பதினேழு சிறுதலைப்புகளைக் கொண்டுள்ளது. (தலைப்புகளின் விவரங்களை இம்மலரில் வேறு இடத்தில் அச்சாகியிருக்கும் நூற்பகுதியில் காண்க). இப்பதினேழு தலைப்புக்களில் கழிந்ததற்கு இரங்குவதாக அமைந்துள்ள 'உண்மையறியாது உயர்விழந்தேன்' எனும் தலைப்பே நான்கு பாடல்களைப் பெறுகின்றது. இதனையடுத்து மூன்று பாடல்களைப் பெறுவது 'நெஞ்சிற்கறிவுரையே'. ஏழு தலைப்புகள் தலா ஒவ்வொரு பாடலும், எட்டுத் தலைப்புகள் இரண்டிரண்டு பாடலும் பெற்று வருகின்றன. விளக்கங்கருதி

இப்பதினேழு தலைப்புகளும் (1) சிவனார் சிறப்பும் பெயரும் (2) அவனை வணங்குக (3) அடியாரைச்சார்க (4) நெஞ்சிற் கறிவுரை (5) அடைந்தவர் பெறும் பேறு என்னும் ஐந்து அகத்தலைப்பும் (6) அணி என்னும் புறத்தலைப்பு ஒன்றுமாக ஆறு தலைப்புகள் தந்து நோக்குகிறது இக்கட்டுரை.

**நூற்பகுதி: சிவனார் சிறப்பும் பெயரும்.**

சிவன் (1) வானவர் மகளிர் தம் காதோலையும் கடிசூத்திரமும் காக்க விடம் உண்ட கண்டன், 'பித்தனே மறையோய்' என்ற மறையோனுக்கருள் புரிந்த பித்தன், அருளாளன், ஆண்டவன், ஆதி, குருநாதன், நன்றெல்லாம் ஒன்றானவன் (2) ஆண்டான், விஞ்சும் புகழ் சேர்ப்போன் (9) சீரழிந்து போவார்க்குந் துணை (10) கழுத்தில் கறுப்புடையான், கருணை பாலிப்பான், பொறுப்புடையான் (11) எண்ணி மகிழ்வோர்க்கு இதயம் களிக்கும் முக்கண்ணன், பிழைகள் அனைத்தும் இறந்திடச் செய்வான் (13) பிழையை நலியச்செய்வான், விரும்பி ஆட்கொண்டான் (14) முருகன் தந்தை, பிழை போக்கும் நாதன், நடேசன் (15) நல்லிடத்தையே நாடும் நாயகன் (16) நாடினார்க்கு இன்பந் நயந்தருளால் நல்குவான், தேடிவருவார்க்கும் வாரார்க்கும் வள்ளல் (18) வானகத்தில் மாமலையில் மண்மீது காணும் ஊனகத்துள் எல்லாமுளான் (20) கவலையெல்லாம் கூட்டோடே ஓட்டிடக்கண்ட ஒருவன் (21) செஞ்சடையான், தீக்கரத்தான், நிலா கங்கை அஞ்சல் என ஏற்ற அருளுடையான், தஞ்சம் என வந்தவரை ஏற்போன் (22) கங்கை சடை கொண்டான், கன்னி இடங்கொண்டான், எங்களிறை (23) இன்பங்கள் எல்லாம் பெறச் செய்வான், கண்ணுதலான், எந்தை, கருணை உள்ளான் (24) எனையாளும் ஈசன் (25) அன்புடையான், அருளுடையான், தவம் முன்புடையார்க்கு என்றும் முன்னிற்பான், என்னுடைய தாய் பாகமே கொண்ட பசுபதி (26) இடர்களைவான், உளத்தே தான் உறைவான் (27) வேத முதல்வன் அப்பன், என நாற்பத்தைந்து பெயர்களை இந்நூற்பகுதியில் அமைக்கப்பெற்றுச் சிறப்புகளைச் சுட்டுவ

தாகவும் விளங்குகின்றன. பல கதைகளும் இத்தொடர்களின் உள்ளமைவதால் இறைவனின் அருள் செயல்களும் புலப்படுகின்றன. அவையெல்லாம் விரிக்கின் பெருகும். வாழ்த்துப்பகுதியில் உலகமுதல்வன், ஒருவன், ஈசன் எனும் முப்பெயர்கள் காணப்பெறுகின்றன. இவற்றையும் சுட்ட நாற்பத்தெட்டாதல் காணலாம்.

**நூற்பகுதி: அவனை வணங்குக.**

சிவன் முருகனை ஈன்றவன். முருகனே தன் திறத்தால் தேவர் தளை நீக்கியவன். மூவுலகும் மகிழ்பூக்கச் செய்தவன், சிந்திப்பவர் குறையைத் தீர்க்கத் தெய்வானையுடன் செந்திற்பதி வாழ்பவன், குன்று தோறாடிக் குறையிரந்து கும்பிடுவார் என்றுமே இன்பம் பெறச் செய்பவன், குன்றுருவ வேல்வாங்கி நின்றவன், வேதமுதல்வன், இவற்றான் தந்தைக்குப் புகழ் சேர்த்தவன். இத்தகைய மகனைப் பெறுவதே பேறு. எனவே, யாவர் இவனைப் போல் புகழ் வளர்க்கும் பிள்ளையைப் பெற்றார்? எனப் பெருமிதத்துடன் கேட்டு அத்தகையானுக்கே சிரந்தாழ்த்த விரும்புவது சிறப்பாகவுள்ளது.

மேலும் முருகன் தாய் வயிற்றில் தோன்றினவனல்லன், சிவனருளால் தோன்றியவன். பிறதேவரெல்லாம் பெண் சம்பந்தமாகத் தோன்றியிருப்பர். இவனே பெண் சம்பந்தமாகப் பெறப்படாத சிவன் பிள்ளை. உண்மையில் ஆண் பிள்ளை இங்ஙனம் சிவனைப் போல் ஆண்பிள்ளை பெற்றவர் யார்? அத்தகு திறனுடையான் அனைத்திலும் வல்லான். அவனுக்கே, கண்டு, கேட்டு, உண்டு, உய்த்து, உற்றறிதல் எனும் ஐம்புலவாயில் கட்டுண்ட சிரமே தாழ்த்து என்பது நயம் பயப்பதாக உள்ளது. வள்ளுவனாரும் 'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான், தாளைவணங்காத் தலை' எனக் குறிப்பிடுகின்றார். 'தலையே நீ வணங்காய்' எனும் அப்பர் பெருமானின் வாக்கும் உணர்க. மேலும், சிரம் எனும் சினைப்பெயர் அதனையுடைய முதலுக்கு ஆகி

வந்தது என்பதும் ஒன்று. இது காயத்தால் வணங்கல் வேண்டும் என்பதைக் குறிப்பதாகும்,

'பாடும் பணியே பணியாய் அருள்வாய்' எனக் குறையிரப்பதே அடியார்களின் உள்ளம். 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ? என அவாவுகின்றது. இத்தகைய உள்ளங்களின் வழிநின்று ஆசிரியர், திருநாமங்கள் பல சொல்லுதல் வேண்டும் என்னும் வேணவாவில், நன்றெல்லாம் ஒன்றுனை,'திருநீலகண்டன், சிவபெருமான், பித்தன், அருளாளன். ஆண்டவன், ஆதி என்றெல்லாம் அழை' எனக் குறிப்பது வாக்கால் வணங்குவதாகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகளும், வழுக்கி வீழினும் திருப்பெயரல்லால் மற்று நான் அறியேன் மறுமாற்றம்' எனவே உரைத்தார். மேலும், 'நன்றெல்லாம் ஒன்றுனன் நாடு' எனக்குறிப்பது மனத்தால் வணங்குவதாகின்றது.

நூற்பகுதி: அடியாரைச் சார்க.

'என்று நீ அன்று நான்' என்னும் ஆற்றலர்கள் தொண்டர்கள். அவர்கள் தம் பெருமை சாற்றும் தரத்ததன்று. அவர்கள் பெருமையை 'இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம், தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே' எனும் ஔவையார் வாக்கின் வழி விரிந்துகிடக்கின்றது. சுந்தரமூர்த்திகளும் திருவாரூரை அடைந்தபோழ்து 'எந்தை இருப்பதும் ஆரூர் எம்மையும் ஆள்வரோ கேளீர்' எனும் அந்தப்பாடல் பாடி அடியார்வாயிலாகவே இறைவனை அடைய விரும்புகின்றார். இதனையெண்ணியே இவ்வாசிரியரும் 'அடியாரைச் சார்க' என அறிவுறுக்கின்றார் எனக்கருதலாம். மேலும், இவர்தம் உள்ளம் அடியாரினும் அடியார் கூட்டத்தில் திளைத்திருத்தலையே விரும்புவதை,

மனத்தால் சிவனை மறவாமல் எண்ணி
வனத்தார் மலரைப் பறித்தே—இனத்தார்

உடன்கூடித் தூவுவார் உள்ளன்பு உடையார்
உடன்கூடி வாழ்வாய் உவந்து.

என்னும் பாடல் அங்கைக் கனியாக்குகின்றது. இங்ஙனம் அடியாருடன் கூடி மகிழ்வதை விரும்பும் ஆசிரியர் வாழையடி வாழையென வந்த அடியார் கூட்டத்தை அடையாளங் காட்டத் தவறவில்லை.

மார்பில் உருத்திராக்க மாலை மனத்தகத்தே
சேர்தல் சிவபெருமான் சிந்தனையே—நேர்சடையும்
நெற்றியிலே பூசுந் திருநீறும் நேர்வாழ்வும்
உற்றவரோ ஈசர்க் குறவு.

என்ற பாடலால் அடியாரது திருமேனிப் பொலிவும் மனப் பொலிவும் எடுத்துரைக்கின்றார்.

எரியும் விளக்கிற்குத் தூண்டுகோல் தேவை. அது போலவே இறையன்புடையார்க்கும் குருஎனும் தூண்டுதல் வேண்டும். அதனால் தான்,

கொண்ட கவலையெல்லாம் கூட்டோடே ஓட்டிடக்
கண்ட ஒருவனை நான்கண்டு கொண்டேன்.

என இந்நூலின் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். பெற்ற குருவினுக்குத் தொண்டனாகித் தொழும்பு செய்தலும், படைத்த குருபரனுக்கு அகமும் புறமும் உரிமையாக்கலும் இவ்வாசிரியரின் மதமாக உள்ளது என்பதைத் '—தொண் டன், அவனுக்கே ஆகி அகமும் புறமும் சிவனுக்கே ஆக்கி விடல்' எனும் அடிகளில் காண்கிறோம். இங்ஙனம் அடியார், அடியார் திருக்கூட்டம், குரு, குருபரன் ஆகியோர்க்கு அடிய ராகும் திறன் பேசப்படுகின்றது.

நூற்பகுதி: நெஞ்சிற்கறிவுரை.

சிவபிரானுக்குரிய 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்து பாடிப்பரவிடப் பற்றறுக்கும் ஆற்றலது. அவ்வைந்தெழுத்து வித்து முளைத்துச் செழித்துப் பயன் கதிர் விளைவிப்பது.

அப்பயனே உபாயமாவது. வேண்டுதல் வேண்டாமை இல்லாதானை அல்லும் பகலும் நினைந்த மார்க்கண்டேயரைப் போன்ற அன்பர், கூற்றத்தின் பிடியிலிருந்து விடுபட்டுக் கொல்லும் இடும்பைகள் யாண்டும் இலராயினர். 'நமசிவாய வாழ்க' என வாழ்த்திக் கதியெனப் பாடு கிடப்பார்க்கு அதிர வரும் வினைகள் இல்லை. குறைகள் தீரும், சீவன் சிவனும், முத்தியுண்டாம். இவற்றையெல்லாம் அறியாமல், நிலையில் லாப் பொருளையெல்லாம் தேடித்திரிந்து அலைந்து தேசிழந்த நெஞ்சமே! படைத்தளித்தானை நீ நினையாமல் மனை, மனைவி, பொன் முதலிய தரும் பொய்ச்சுகத்தை மெய்ச்சுகமாக நினைந்து அவற்றிற்கே தஞ்சம் அடைந்தாய். விஞ்சும் புகழ் சேர்க்கும் இறைவனைத் தஞ்சமடைய மறந்தாய். அதன் காரணமாக இகழ் சேர்த்தாய். சிவபெருமான் எத்தகையான் என்பதை அறியாய். சீரழிந்து போவார்க்கும் துணையவன். நம்பனென ஆடும், பாடும், அடியார்க்கு அருள் பாலிப்ப வன். அவன் மேலிடும் அன்பு, பழுதெல்லாம் தீயிட்ட பஞ் சாகப் பொசுக்க வல்லது. ஆதலின் இறைப்பொழுதும் மறவாது அவனை நினை என மொழிவது இனிமை பயந்து ஊற்றின்பம் தோற்றுவிப்பதாய் உள்ளது. அங்கிங்கெனுத படி—வான், மலை, மண், காணும் ஊனகம் எனும் எப்பொரு ளிலும் நிறைந்து பிரகாசிக்கும் மெய்ப்பொருளை, அவாவு டைய நெஞ்சமே! அதனை நீங்கி அகக்கண் பெற்றால் காண லாம் எனப் பற்றில் செல்லும் நெஞ்சத்தைப் பற்றற்றவன் பற்றைப் பற்றும்படி மடைமாற்றம் செய்கின்றார்.

நூற்பகுதி : **அடைந்தவர் பேறு.**

'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச் சிவாயவே' என்றருளிய சுந்தரர் வழிநின்று இவ்வாசிரியரும் என்னுடைய தாய் பாகமே கொண்ட பசுபதியை நான் மறக்க ஆகுமோ? ஆகாது இது! என்றும், 'குன்றுருவ வேல்வாங்கி நின்றவன் வேத முதல்வன் அப்பன் கால் தாங்கி வாழ்வாய் கதி' என்றும் வடிக்கின்றார். மற்றும்

இறைவனை எந்நாளும் மனத்தில் எழுந்தருளப் பண்ணும் வகையினையும் குறிப்பிடுகின்றார். இங்ஙனம் மறவாமையும், அவனடிக்கே கசிந்துருகலும் பணியாகக் கொண்ட அடியார்கள் தாம் அடையும் பயன்கள் யாவையெனின், பிழைகள் நலிதல், தீமைகள் வாராமை காத்தல், மனம் இன்பச்சுவையாக அவன் தானைப்பெறுதல், காலன் அணுகாது வாழ்தல், எண்ணும் இன்பமெல்லாம் பெறுதல், வறுமை தவிர்தல், தொல்லை வினையும் இனித்தொடரும் வினையும் நீங்கல் என்பன போன்றவைகளாம் என ஆசிரியர் ஆங்காங்கு விரித்துக் கூறுகின்றார்.

**புறப்பகுதி: அணி**

இதுகாறும் நூலினகத்து இடம் பெற்ற செய்திகள் நோக்கப்பெற்றன. இனி நூலின்கண் அமையப்பெற்றுள்ள அணிகளைக் காண்போம்.

1. 'பூவொடு நாரும் மணம் பெறும்' எனத் தொடங்கும் பாடலில் எடுத்துக்காட்டுவமை அணியும், ஏதுவணியும் அமைந்துள்ளன.

2. 'மார்பில் உருத்திராக்க மாலை' எனத் தொடங்கும் பாடலில் தன்மை அணி அமைந்துள்ளது.

3. 'அறிவூட்டும் நூலை அறியாது ஒருவன், வெறியூட்டும் நூலை விரும்பி—நெறிகெட்டு அலைதலைப் போல் ஆனேன்' என்ற அடிகளில் உவமையணி பொருந்தி வருகின்றது.

4. 'நெஞ்சக் கருங்கல்லை நெக்குவிடச் செய்தாங்கே, கொஞ்சம் கரிசில் நீர் கூட்டுவித்தால்' எனும் பாடலடிகளில் உருவக அணியைக் காணலாம்.

**முடிவுரை.**

பண்டைச் சான்றோர் வழிநின்று படைக்கப்பெற்ற இச்சிறிய நூல் பன்னலங்களும் தன்னகத்தே கொண்டு இலங்குவதை நோக்கத் தொடக்கத்தில் கூறியாங்கு மணத்தால் சீரிய நூலே என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளலாம். சிவம்

# பேராசிரியர் வித்துவான்
# மறை. திருநாவுக்கரசு அவர்களது
# அரிய ஆய்வுநூல்கள்

(கைவசம் உள்ளவை)

1. பெரியபுராண ஆய்வுரை
முதல் தொகுதி — சுந்தரர் ... ரூ. 10-00
2. பெரியபுராண ஆய்வுரை
இரண்டாம் தொகுதி — சம்பந்தர் ... ரூ. 10-00
3. பெரியபுராண ஆய்வுரை
மூன்றும் தொகுதி — அப்பர் ... ரூ. 10-00

மேற்படி நூல்கள் மூன்றுக்கும் தபால் செலவு தனி.

[இவ்வாசிரியர் எழுதிய மறைமலையடிகளார் வரலாறு, பெரியபுராண ஆய்வுரை – 4ம் தொகுதி 60 அடியார்கள், சைவ சித்தாந்த வினாவிடை ஆகிய நூல்கள் பிரதிகள் இல்லை. விரைவில் மறுபதிப்பு அச்சிடப்படலாம். மாணிக்க வாசகர் வரலாறு ஆய்வுரை அச்சில் உள்ளது]

கிடைக்குமிடம் :

1. பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு
43, மூன்றும் பிரதான சாலை
சவகர் நகர், அகரம்
சென்னை—600082

2. ஆங்கிரஸ சு. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு
மேல மாம்பலம், சென்னை – 600033

உ
சிவமயம்

# கட்டுரையாசிரியர்கள் பற்றிய சிறு குறிப்புகள்

**தொகுப்பு: பதிப்பாசிரியர்**

## முன்னுரை

இவ்வருடம் சிவஞான பூஜா மலருக்குக் கட்டுரைகள் உதவியருளிய அறிஞர் பெருமக்களைப் பற்றிய சிறு குறிப்புகளை இப்பகுதியிலே காண்போம். இவர்களுள் திருவாளர்கள் வித்துவான் பெ. கு. வரதராசன், வித்துவான் பொன். முருகையன், த. சி. ச. இராமச்சங்கு பாண்டியன்; பேராசிரியர் க. வடிவேலாயுதனுர், ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை, வித்துவான் ச. இரத்னவேலன், டாக்டர். ந. கங்காதரன், பிரம்மஸ்ரீ P.N. நாராயண சாஸ்திரிகள், மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள் ஆகியோர்களைப் பற்றிய குறிப்புகள் சென்ற ஆண்டு மலரில் பிரசுரிக்கப்பட்டுள்ளபடியால், இவ்வருடம் புதிதாகக் கட்டுரை வழங்கியவர்கள் பற்றிய சிறு குறிப்புகளை மட்டும் கீழே கொடுத்துள்ளோம்.

### 1. முப்மொழிக்கொண்டல்
### திரு. பெ. திருஞானசம்பந்தன், எம். ஏ., எல் டி.

காச்மீரசைவம் என்பதுபற்றி அரிய கட்டுரை வழங்கிய திரு. பெ. திருஞானசம்பந்தன் அவர்கள் சிதம்பரம் தாலுக்கா குணமங்கலம் கிராமத்தில் திருவாளர் ச. பெரிய பெருமாள் பிள்ளைக்கும் திருமதி கல்யாணி அம்மையாருக்கும் இரண்டாவது மகனுக 1915 ஜனவரியில் பிறந்தவர். பிறந்த ஊரின் பெயருக்கு ஏற்ப நற்குணங்கள் நிரம்பியவர்.

1936-ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எம். ஏ. (ஸம்ஸ்க்ருதம்) பட்டம் பெற்று 1938 வரை மஹா மஹோபாத்தியாயர் ஸ்ரீ S. குப்புசாமி சாஸ்திரியாரிடம் ஆராய்ச்சி மாணவராக இருந்தார். 1939-ல் எல்.டி. பட்டம் பெற்று 1949 வரை பத்து ஆண்டுகள் சென்னை மாநிலக் கல்லூரியில் ஸம்ஸ்க்ருத துணைப் பேராசிரியராகவும், 1949 முதல் 1954 வரை திருவையாறு 'தமிழ் ஸம்ஸ்க்ருத கீழ்த் திசை அரசர் கல்லூரி' முதல்வராகவும் பணியாற்றினர். 1954 முதல் 1956 வரை கீழ்த்திசை மொழிப் பள்ளிகள் கல்லூரிகள் மாநிலக் கண்காணிப்பாளர் பதவியை வகித் தார. 1957 — 1966, 1969 — 1971 இக்காலங்களில் சென்னை மாநிலக்கல்லூரி ஸமஸ்க்ருதத் தலைமைப் பேரா சிரியராகச் சிறப்புடன் பணியாற்றினர். இடையில் 1966— 1969 இககாலத்தில் தமிழ் நாடு கல்லூரிக்கல்வித் துணை இயககுனராகவும, 1971 முதல் 1974 வரை சென்னைப் பல் கலைக்கழகப் பதிவாளராகவும் பதவி வகித்தார். 1975 முதல் 1978 வரை சென்னை தமிழ் ஸம்ஸ்க்ருத பிற இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஸம்ஸ்க்ருதப்பிரிவின் இயக்குனராகவும் 1979 முதல் 1980 வரை திருவனந்தபுரம் உலக திராவிட-மொழியியல் ஆராய்ச்சி நிறுவனத்தில் முது ஆய்வாளராகவும பணியாற்றிய பின் 1982 ஜனவரி முதல் சென்னை மரபுவழிப் பண்பாட்டு நிலையத்தின் இயக்குனராகப் பணி புரிநது வருகிருர். சென்னை சைவசித்தாந்த மஹா சமாஜத்தின் தலைவராகவும் சிறந்த சமயத்தொண்டு செய்து வருகிருர்.

இவர் ஆக்கிய நூல்கள் பின்வருமாறு:

1. வடமொழி இலக்கியச் சோலை (சில வானெலிப் பேச்சுக்களின் தொகுப்பு) 1966.
2. மாதவாசாரியாரின் 'சைவ தரிசனம்' —ஆங்கிலமொழி பெயர்ப்பு, சென்னைப் பல்கலைக்கழக கலைப்பிரிவு இதழ் வெளியீடு, 1973.

3. உமாபதி சிவாசாரியாரின் 'சதரத்ன சங்கிரகம்'— ஆங்கில மொழியாக்கம், சென்னைப் பல்கலைக்கழக தத்துவத்துறை வெளியீடு, 1973.

4. 'இந்திய எழிற்கலை' (தமிழ்) — சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத்துறை பொன்விழா வெளியீடு 1977.

5. க்ஷேமராஜரின் 'பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயம்' — தமிழ் மொழியாக்கம், சென்னைப் பல்கலைக்கழகத் தத்துவத் துறை பொன்விழா வெளியீடு 1978.

6. 'காச்மீர சைவம்' (தமிழ்) சென்னைப் பல்கலைக்கழகத் தத்துவத்துறை பொன்விழா வெளியீடு, 1978.

அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்:

1. சென்னைப் பல்கலைக்கழகத்தில் 'பக்திக் கோட்பாடு' பற்றி பேராசிரியர் வெங்கடரத்தினம் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் (ஆங்கிலத்தில்). 'The Concept of Bhakti' சென்னைப் பல்கலைக்கழகம் வெளியீடு (1967).

2. காசி, அலஹாபாத் ஸர்வகலாசாலைகளில் 'சைவ சித்தாந்தம்' பற்றி காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் சிவஞான சித்தியார் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் (ஆங்கிலம்) 1973 — அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு (1978) சைவசித்தாந்தத் தொகுப்புப் பேருரைகள் (1963—73).

3. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 'பகவத் கீதை' பற்றி துர்க்கமணி சுந்தரேச அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் 1976. சென்னை மரபுவழிப் பண்பாட்டு நிலையத்தின் 1978 அரையாண்டு இதழில் 1981ல் அச்சிடப்பட்டது. ஆங்கிலம்.

4. மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 'மனித வரலாற்றின் உள்ளீடாகத் தொடர்ந்து வரும் ஒரு கோட்பாடு'

பற்றிய பேராசிரியர் தனக்கோடி பிறந்த நாள் அறக் கட்டளை சொற்பொழிவு, 1977.

**அருளாசி பெற்றமை :**

1. 1972 ல் திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுரம் ஆதீன ஸ்ரீலஸ்ரீ குரு மஹாசந்நிதானம் அவர்கள் ஆவணி மூலத்தன்று 'மும்மொழிக்கொண்டல்' என்ற பட்டமளித்து இவரைச் சிறப்பித்தார்கள்.

2. 1975 ல் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராரிய சுவாமிகள் ஆசியுடன் கூடிய பொன்னுடை சென்னை இந்துதர்ம மன்றத்தாரால் அணிவிக்கப் பட்டார்.

வித்தையும், விநயமும் ஒருங்கே கூடிய இப்பேராசிரியப் பெருந்தகை இன்னும் பல்விதமான சிறப்புகள் பெற்றும், சைவ சமயத் தொண்டுகள் செய்தும் பல்லாண்டு வாழ்க என தில்லைக்கூத்தன் தன் திருவடிகளில் பிரார்த்திக்கின் ளேம்.

## 2. சித்தாந்தசிகாமணி

### க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., காஞ்சீபுரம்.

**அந்தம் ஆதி** என்ற தலைப்பில் சிவஞான போதம் முதற் சூத்திரக் கருத்தை விளக்கிக் கட்டுரை எழுதிய திரு. க. வச்சிரவேல முதலியார் அவர்கள் 24-4-1906ல் பிறந்தவர். 1929 ம் ஆண்டு சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பி.ஏ. பரீட்சையில் தேர்வு பெற்று 1932 ஏப்ரல் சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியில் கணிதத்தைத் தேர்வுப் பொருளாகக் கொண்டு எல்.டி என்ற ஆசிரியத் தொழிற்பட்டப் பரீட்சையில் தேர்வு பெற்ளுர். 1930 மார்ச்சு முதல் 1966 ஆண்டு வரை அதாவது 36 ஆண்டுகள் காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர் நிலைப்பள்ளியில் முதல் 30 ஆண்டுகள் துணையாசிரியராகவும் 1960 ஜூன் முதல் அப்பள்ளியிலேயே தலைமையாசிரியராக

வும் திறம்படப் பணியாற்றி 1966-ல் ஓய்வுபெற்றார். 1964-ல் நல்லாசிரியர் என ஜனாதிபதி விருதும் பெற்றார். இடையில் 12-12-1944 முதல் 19-6-1946 வரை திருவாவடுதுறை, தருமபுரம் ஆகிய இரு ஆதீனங்கள் சார்பில் மாயூரத்தில் நடந்த 'தம்பிரான் கல்லூரி'யின் (மெய்கண்டார் கல்லூரி) முதல்வராகப் பணி ஆற்றினார். எல்லா ஆதீனங்களோடும் சைவ சித்தாந்த மகா சமாசத்தோடும் நெருங்கிய தொடர்புடையவர். நவம்பர் 1951-ல் நான்கு நாட்கள் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துச் சார்பில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் வழி வாரணாசி, அலஹாபாத்து பல்கலைக் கழகங்களில் சைவசித்தாந்தம் பற்றிய ஆங்கிலச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியிருக்கிறார். 1968 முதல் 1974 வரை திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக இருந்து சிறந்த சேவை புரிந்துள்ளார். அக்டோபர் 1974 முதல் டிசம்பர் 1981 வரை மதுரை பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தத் துறையில் சிறப்பு அலுவலராகப் பணியாற்றியுள்ளார்.

**ஆக்கிய நூல்கள்:**

1. 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே'— இதன் முதல் பதிப்பு 1953-ல் மதுரை ஆதீனத்திலும், இரண்டாம் பதிப்பு சர்வோதய இலக்கியப்பண்ணை மதுரையிலும் வெளிவந்தன.

2. 'திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி' டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா நினைவுச் சொற்பொழிவு — 1969 - 70.

3. 'சைவம்' இந்து அறநிலைய ஆட்சித்துறையின் வெளியீடு,

4. 'திருக்குற்றாலத் தலபுராணம் பொழிப்புரை' திருவாவடுதுறை ஆதீன வெளியீடு.

5. 'சிவஞான பாடியத்திறவு' சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு 1977.

6. 1951 நவம்பரில் காசி, அலஹாபாத் சர்வகலா சாலைகளில் நிகழ்த்திய சைவசித்தாந்தம் பற்றிய ஆங்கிலப் பேருரைகள் Collected Lectures On Saiva Siddhanta 1946–1954 என்ற அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீட்டில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.

தூத்துக்குடி சைவசித்தாந்தசபை, மதுரை ஆதீனம், திருத்தருமை ஆதீனங்களால் முறையே "சித்தாந்த சிகாமணி" "சைவ சித்தாந்த ஞானபானு" "சைவ சித்தாந்தத் தமிழ்ப் புலவர்" என்னும் பட்டங்கள் அளிக்கப்பட்டு சிறப்பிக்கப்பட்டார். கச்சியேகம்பன் திருவருளால் சைவ சித்தாந்தம் செழித்து ஓங்க இன்னும் பல்லாண்டு வாழ்ந்து சேவை புரிய வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றோம்.

## 3. சிவபாதசேகரன் திரு. வே. சேகர்

செயலாளர், திருவாதிரையான் திருவருட்சபை, சென்னை-34

**'சிவநாமஜபம்'** என்ற கட்டுரை எழுதிய திரு. V. சேகர் மயிலாடுதுறையில் 31-8-1951 ல் ஸ்ரீ வெங்கடராமையர்—ஞானம்பாள் தம்பதிகளுக்குப் பிறந்தார். B Sc. பட்டம் பெற்று சென்னைக்கருகே ஒரு தொழிற்சாலையில் பணி புரிந்து வருகிறார். இவரது இயற்பெயர் V. பாலசுப்பிரமணியன். 'சேகர்' என்று வீட்டில் அழைக்கப்படும் பெயரை திருக்கோயில் ஆசிரியர் திரு. ந.ரா. முருகவேள் அவர்கள் **'சிவபாத சேகரன்'** என்று மாற்றி அமைத்தார்கள். இப்பெயரிலேயே ஸ்ரீ காசி மடத்துத் திங்களிதழான 'ஸ்ரீ குமர குருபரர்', 'திருக்கோயில்; ஆகிய பத்திரிகைகளிலும், நமது மற்றொரு பிரசுரமான ஸ்ரீ சங்கர ஜயந்தி மலரிலும் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. சிவாலயத் திருப்பணியையே முதன்மையாகக் கொண்டு கடந்த ஆறு ஆண்டுகளாகப் பணியாற்றி வரும் **'திருவாதிரையான் திருவருட்சபை'** யின் செயலாளர். இச்சபையின் மூலம் இதுகாறும் மூன்று நூல்களை வெளியிட்டுள்ளார். தருமபுரம், திருப்பனந்தாள் மடாதிபர்களின்

அருளாசியாலும், பெரியோர்களது நல்லாசியாலும் சிவப் பணிகளை இயன்ற அளவு செய்து வருகிறார்.

ஸ்மார்த்தப் பிராமணர்களுக்குப் புறத்தே சிவவேடம் கொண்டாலும், சிவபக்தியும், திருமுறைப்பற்றும் கிடையாது என்று பொதுப்படையாகச் சைவவட்டாரங்களில் சொல்லப்படுவதற்கு மாறாகச் சிவபக்தியும், திருமுறைப் பற்றும் நிரம்பிய நமது சிவபாதசேகரன் அவர்கள், வயதில் இளைஞர் ஆகையால் மிக்க துடிப்புடனும் ஆர்வத்துடனும் சிவப்பணியில் ஈடுபட்டு வருகிறார். அன்னாரது சிவப்பணி சிறக்க என வாழ்த்துகின்றோம்.

## 4. புலவர் முருகு. சுவாமிநாதன், எம்., ஏ., பி.லிட்., ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்

நம்மிடம் பேரன்பும் பெருமதிப்புங் கொண்ட இளைஞர் புலவர் முருகு. சுவாமிநாதன் அவர்கள் நமது மலருக்குப் **புறநானூறு** என்ற சங்க இலக்கியத்தில் உள்ள சைவக் கருத்துக்களை ஒரு கட்டுரையாக வடித்துத் தந்துள்ளார். திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தில் ஐந்து தலைமுறைகளாகப் பணியாற்றும் குடும்பத்தில் பிறந்தவரும், திருப்பனந்தாள் மேநிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிபவருமான வித்துவான் திரு. பொன். முருகையன் அவர்களது குமாரரான திரு முருகு சுவாமிநாதன் தந்தையறிவு மகனறிவு என்ற மூதுரையை மெய்ப்படுத்திச் செந்தமிழ்ப் புலமையுடன் திகழ்ந்து வருகிறார்.

1976 ம் ஆண்டு புலவர் இரண்டாம் ஆண்டுத் தேர்வில் மாநிலத்திலேயே முதன்மையாகவும், 1978ல் புலவர் நிறைநிலைத்தேர்வில் உயர் இரண்டாம் வகுப்பிலும் தேர்ச்சி பெற்றார். 1979ல் ஆசிரியர் பயிற்சியில் முதல் வகுப்பிலும், பி. லிட் பட்டப்படிப்பில் தேர்ச்சியும் பெற்றார். 1981ல் எம். ஏ முதலாண்டுத் தேர்வில் உயர் இரண்டாம் வகுப்புப் பெற்றுள்ளார்.

டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நினைவு தமிழ்ப்பரிசு, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு தமிழ்ப்பரிசு, முந்நூல் அணியும் கலியாணப்பரிசு முதலிய பரிசுகள் பெற்றுள்ளார். ஸ்ரீ காசிமடம் அறக்கட்டளையின் கீழ் திருவிராமேச்சுவரம் யாத்திரையும் செய்துள்ளார்.

திருச்சி வானொலிவழி உரைகளாற்றியும், பட்டிமன்றங்கள் கவியரங்கம் முதலியவற்றில் கலந்துகொண்டும் பணியாற்றியுள்ளார். 1977 - 78ல் திருப்பனந்தாள் வார வழிபாட்டுக் கழகச்செயலாளராகவும் தொண்டாற்றியுள்ளார்.

1978 ஏப்ரல் முதல் ஸ்ரீகாசிமடத்தில் எழுத்தராகப் பணிபுரியும் இவ்விளைஞர் ஸ்ரீகுமரகுருபரர் திங்களிதழ்ப் பணிகளிலும் பங்கு கொண்டுள்ளார். ஸ்ரீ காசி மடத்தின் வழி வெளியிடப்பெறும் திருமுறை, சாத்திர, தோத்திர, தமிழ், ஆங்கில நூல்களில் மெய்ப்புத் (Proof) திருத்தும் பணியும், ஸ்ரீகுமரகுருபரர் அச்சக மேற்பார்வைப் பணியும் புரிந்து வருகிறார். ஸ்ரீகுமரகுருபரர் திங்களிதழிலும் அவ்வப்பொழுது சிறந்த செந்தமிழ்ச் சமய இலக்கியக் கட்டுரைகள் எழுதி வருகிறார். புலமையும் பணிவும் ஒருங்கே நிரம்பிய இவ்விளம்புலவர், ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகளின் கருணைக்கும் பாத்திரமானவர். சிறந்ததொரு எதிர்காலம் இவருக்காகக் காத்திருக்கின்றது என உறுதியாகக் கூறி, செஞ்சடையப்பர் திருவடிகளைச் சிந்திக்கின்றோம்.

## 5. திரு. சி. சு. மணி, பி. ஏ., பாளையங்கோட்டை

திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில் பாளையங்கோட்டையைச் சேர்ந்தவர் மணிமேகலையில் சைவம் என்ற தலைப்பில் கட்டுரை நமக்கு வழங்கிய திரு சி சு. மணி அவர்கள். இவரது தந்தையார் திரு. சிதம்பரம் பிள்ளை, தாயார் திருவாட்டி வள்ளியம்மையார்.

திரு சி. சு. மணி பாளையங்கோட்டைத் தூய சவேரியார் கல்லூரியில் பயின்று பி. ஏ. பட்டம் பெற்ருர். மாணவப் பருவத்திலேயே மிகுதியான இலக்கிய ஈடுபாடும், தமிழ் ஆர்வமும் கொண்டவராக இருந்து கல்லூரிகளுக்கிடையே யான பேச்சுப் போட்டிகளிலுங் கலந்து கொண்டு பல பரிசு கள் பெற்றுள்ளார்.

அஞ்சலகத்தில் பணிபுரியும் இவர் தம்பேச்சாலும் எழுத்தாலும் தமிழ்ப்பணியும் சமயப்பணியும் தொடர்ந்து ஆற்றி வருகிருர். கடந்த பதினைந்து ஆண்டுகளாக நெல்லைத் தனித்தமிழ் இலக்கியக் கழகத்தில் பொறுப்புகள் ஏற்றுத் தொண்டாற்றி வருகின்ருர்.

தமிழ் இலக்கியங்களிலும் சாத்திர தோத்திரங்களிலும் ஆழ்ந்த தோய்வு உடைய இவர் அவ்வப்போது சைவ சித்தாந்தத் தொடர் உரைகள் ஆற்றி வருகிருர். நெல்லை மாவட்டத்தில் நான்கு ஊர்களில் சிவஞானபோதத் தொடர் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ள இவரது சிவ ஞானபோதப் பற்றினை இவர் தமது மகனுக்கு மெய்கண்டார் என்று பெயரிட்டிருப்பதினின்றும் தெரிந்து கொள்ளலாம். திரு சி சு. மணி அவர்கள் நீடூழி வாழ்ந்து சைவமும் செந் தமிழும் சேர்ந்தினிது ஓங்க ஒல்லும் வகையெல்லாம் பணி செய்து **சைவச்செந்தமிழ் மணியாகச்** சிறப்புடன் விளங்க ஸ்ரீ காந்திமதியம்பாள் ஸமேத நெல்லையப்பர் திருவடிகளில் பிரார்த்தித்துக் கொள்கிறேம்.

## 6. சிவத்திரு ந. சுப்பிரமணிய சிவாசாரியார்

### சங்கரன்கோவில்

நெல்லைமாவட்டம் சங்கரன்கோவில் என்ற தலத்தைப் பற்றி அறியாதார் இருக்கமாட்டார்கள் என்றே எண்ணு கிருேம். அங்கு ஸ்ரீ கோமதியம்பாளின் ஆடித்தபசு திருவிழா மிகப் பிரபலமானது. ஸ்ரீ சங்கரலிங்க சுவாமி சந்நிதியும், அதனையடுத்து சிவபிரானது 64 மூர்த்தங்களில் ஒன்ருன

கேசவார்த்த மூர்த்தி ரூபத்தை விளக்கும் ஸ்ரீ சங்கர நாராயண சுவாமி சந்நிதியும் அதனையடுத்து ஸ்ரீ கோமதி அம்பாள் சந்நிதியும் அமைந்த இத்திருக்கோவில் இந்த ஊருக்கு அழகு செய்வதாய் அமைந்துள்ளது. இத்தகைய சைவத் திருத்தலத்தில் அறுபத்திமூவர் குருபூசைக் குழுவின் தலைவரான சிவஸ்ரீ ந. சுப்பிரமணிய சிவாசாரியார் இந்த மலருக்கு **அந்தணர்தம் சிந்தையான்** என்ற கட்டுரையை வழங்கியுள்ளார்.

இவர் திருநெல்வேலி மேலமடம் சிவஸ்ரீ நடராஜ பட்டர்—சிவகாமி அம்மாள் தம்பதியர்க்கு மூத்த மகனகப் பிறந்தவர். அம்மான் சிவஸ்ரீ K. பிச்சையா சிவாசாரியரிடம் ஆகம—சாஸ்திர பாடங்களை நன்கு தெரிந்து கொண்டார். அறநிலையத்துறையில் திருக்கோயில் நிர்வாக அதிகாரியாகப் பணிபுரிந்து பின் அப்பதவியை 'ராஜிநாமா'ச் செய்து விட்டுச் சமய சேவைக்குப் புகுந்தார். **'சிவஞான பேரிகை'** என்ற சித்தாந்த சைவ இதழ் தொடங்கிப் போதுமான ஆதரவு சைவ மக்களிடமிருந்து கிடைக்காமையால் தற் காலிகமாக நிறுத்தி வைத்துள்ளார்

சங்கரன்கோவில் அறுபத்துமூவர் குரு பூஜைக் குழுவின் தலைவராக ஆறுண்டுகளாகப் பணியாற்றி நிரந்தர வைப்பு நிதி ஆரம்பித்து காஞ்சி திரு வே. மு. பிரமீச முதலியார் அவர்களைக் கொண்டு விநாயகபுராணத் தொடர்ச் சொற் பொழிவும் (5-10-79 முதல் 31-10-79), அதனைப் பூர்த்தி செய்து 4-7-82 முதல் 28-7-82 வரை நம்மைக் கொண்டு பெரியபுராணச் சொற்பொழிவு நடத்தியும், நாயன்மார் குருபூஜை மலர் வெளியிட்டும், இன்ன பிற பணிகளும் செய்து சங்கரன்கோவிலில் சமயத் தொண்டு புரிந்து வரும் இவரது குறிக்கோள் சிவபிரானின் பரந்துபட்ட பொருள் சேர் புகழை எல்லோரும் அறியும்படிச் செய்வதும், தாம் அறிந்தும் இன்புறுவதேயாகும். இத்தகைய சமய உறைப் புடைய நமது சிவாசாரியார் நல்லனவெல்லாம் நனிபெற்றுச் சீரும் சிறப்புடன் வாழவேண்டுமென ஸ்ரீ கோமதியம்பாள்

ஸமேத ஸ்ரீ சங்கரலிங்கப்பிரபுவின் திருவடிகளில் பிரார்த்தித்துக்கொள்கிறேம்.

7. சேக்கிழார் அடிப்பொடி திரு. T. N. ராமச்சந்திரன்,
பி.காம்., பி.எல்.,
வழக்கறிஞர், தஞ்சாவூர்.

**'ஷேக்ஸ்பியரும் சைவசித்தாந்தமும்'** என்ற அரிய கட்டுரையினை நமது மலருக்கு வடித்துத்தந்த திரு T. N. ராமச்சந்திரன் அவர்கள் சைவசித்தாந்த சாத்திரங்களிலும், செந்தமிழ் இலக்கியங்களிலும் நிரம்பின புலமையுடையவர். அதே போல ஆங்கில இலக்கியத்திலும் வல்லவர். நமது மலரில் வெளிவந்துள்ள கட்டுரையே இதற்குச் சான்று பகரும்.

திருநல்லம் என்ற ஊரில் 18-8-1934ல் பிறந்தார். திருநெய்த்தானம் என்ற ஊரில் வளர்ந்தார். 1953 ல் பி.காம். பரீட்சையில் தேர்ச்சி பெற்றுர். 1955-ல் பி. எல். பரீட்சையிலும் தேர்ச்சி பெற்று 1956 ல் வழக்கறிஞராகப் பதிவு செய்து கொண்டார். 1975ம் ஆண்டு முதல் சைவ சித்தாந்தத்தில் ஈடுபாடு தொடங்கியது. மெய்கண்ட சாத்திரங்கள் 14ல் ஏழினை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். 8-5-1980 ல் சித்தாந்த சதுஷ்டயம் என்ற பெயரில் உமாபதி சிவாசாரியார் அருளிய நான்கு சாத்திரங்களின் (திருவருட்பயன், வினவெண்பா, கொடிக்கவி, உண்மை நெறி விளக்கம்) இவரது ஆங்கில மொழிபெயர்ப்பு நூல் வெளியிடப்பட்டது. செப்டம்பர் 1980 ல் விநாயகர் நான் மணி மாலையினை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். இதன் முன்னுரையில் Dr. Prema Nanda kumar அவர்கள் கூறுவதாவது: "Much care and study has preceded the translation of Vinayakar Naan Mani Maalai and the lover of Bharatiana is revealed at each turn. I am sure others will profit by reading this translation as much

as I have profited" இந்தச் சிலவரிகளில் டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்கள் நமது திரு. T. N. ராமச்சந்திரன் அவர்களது மொழிபெயர்ப்புத்திறனைப் புலப்படுத்தியுள்ளார்.

1980 அக்டோபரில் மஹாகவி பாரதியாரின் குயில் பாட்டையும், டிசம்பரில் மஹாகவியின் கண்ணன் பாட்டையும் ஆங்கிலத்தில் செய்யுள் வடிவிலேயே மொழி பெயர்த்து வெளியிட்டார். 1982 ல் மஹாகவியின் பாஞ்சாலி சபதம் மொழிபெயர்ப்பு வெளியிடப்பட்டது. திருவள்ளுவருக்குப் பரிமேலழகர் போல மஹாகவிக்கு திரு T. N. R. அவர்கள் அமைந்துள்ளார் என ஒரு அறிஞர் குறிப்பிடுவது மிகையாகாது.

தமிழ்ப் பல்கலைக்கழக உறுப்பினராக, மஹாகவி பாரதியார் நூற்றாண்டு விழா மாநிலக் குழுவின் உறுப்பினராக, இப்படிப் பலதிறப்பட்ட பணிகளில் ஈடுபட்ட திரு T. N. R. வாராந்திர வகுப்புகள் நடத்துவதற்கும் நேரத்தை ஒதுக்கிக் கொள்கிறார். வாரந்தோறும் தஞ்சைப் பெரிய கோயிலில் புதன்கிழமையிலும், வெள்ளியன்று திருவையாறு அறுபத்து மூவர் மடத்திலும் சைவசித்தாந்த பாடம் சொல்லி வருகிறார். பல திருமுறை, திருமந்திர மாநாடுகளிலும், சைவசித்தாந்த மஹா சமாஜ ஆண்டு விழாக்களிலும் சொற்பொழிவாற்றியுள்ளார். இலக்கியம், சமயம் பற்றி வானொலியிலும், தஞ்சை மாவட்டக் கல்லூரிகளிலும் பேசியுள்ளார். சிவாஜி பத்திரிகையின் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

சிறந்த அறிஞர்கள் பலர் இவருக்கு நண்பர்கள். இவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் காலஞ் சென்ற திரிலோக சீதாராம், பேராசிரியர் அ. சீநிவாசராகவன், பள்ளியகரம் நீ. கந்தசாமிப்பிள்ளை, கொத்தமங்கலம் சுப்பு, கோவை அய்யாமுத்து, ஜி. டி. நாயுடு, திருநெல்வேலி A. V. சுப்பிரமணிய அய்யர் முதலியோர். ஆந்திரப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர், Dr K. R. ஸ்ரீநிவாச ஐயங்கார், Dr. பிரேமா நந்தகுமார், பம்பாய்த் தமிழ்ச் சங்கம்,

கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கம், கோரேகான் தமிழ்ச்சங்கம் ஆகியவர்களின் பாராட்டுக்களைப் பெற்றுள்ளார். சேக்கிழார் அடிப்பொடி என்று தன்னைப் பெருமையுடன் கூறிக் கொள்ளும் திரு. T.N.R தமக்குச் சமயத்தில் உறைப்பு ஏற்படக் காரணமானவர் சுகப்பிரம்மம் பிரம்மஸ்ரீ ராம ஸ்வாமி சாஸ்திரிகள் என்னும் பெரியார் ஆவர் என்று கூறுகிறார்.

There is no department of literature in which T.N R. is not interested. He is an acknowledged cognoscent in Saiva Siddhanta and Tamil literature, steeped in Kamban and Villi, Valluvar and the Sangam Poets, a keen debator in Pattimanrams, a symposiarch of many symposia and an eagerly sought-after speaker in English associations in colleges and other literary plat forms, a discourser on the Ramayana and the Maha-Bharatha and above all a humble devotee of St. Sekkizhaar, rapturously following the Oduvars (ஓதுவார்கள்) through all the night, when the latter go round the sacred streets of holy towns, singing the Tamil Thirumuri (திருமுறைகள்). T.N.R is one of those few who prefer Milton to Shakespeare and Sekkizhar (சேக்கிழார்) to Kamban. His mentor was the great Triloka - Sitaram, the greatest meta-physical poet in Tamil after Bharathi. Sri T.N.R is indeed the spiritual son and heir of the great poet (Triloka Sitaram).

இவ்வாறு பேராசிரியர் K. G. சேஷாத்திரி அவர்கள், (Principal. Govt. Arts College, Karur) கூறியிருப்பதை விடவா நாம் இவரைப் பற்றிக் கூறிவிடமுடியும்? திரு T. N. R. நீடூழி வாழ்க! அவர் சமய இலக்கியத் தொண்டு மேலும் மேலும் வெற்றி பெறுக என வாழ்த்தி, அம்மை யப்பன் திருவருளை வேண்டுகிறோம்.

## 8. தவத்திரு மறைமலை அடிகளார்

தனித்தமிழ் இயக்கத்தந்தையும் சைவசித்தாந்தப் பெருஞ் சான்றோரும், முனைத்த நற்கொள்கை வீரரும், மும்மொழிப் புலமை வேந்தருமாக விளங்கியவர் பேராசிரியர் தவத்திரு மறைமலை அடிகளார். இவர்கள் சூளை ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயக்கரின் அரும்பெறல் மாணவர்களில் தலைசிறந்தவர். வேதாசலம் பிள்ளை என்ற இவரது திருநாமம் கல்லாடை மேற்கொண்டதும் சுவாமி வேதாசலம் என்றாகிப் பின்னர் தனித்தமிழ் இயக்கங்காரணமாக மறைமலை அடிகள் என்றாயிற்று. தமது 15-வது ஆண்டிலேயே தமிழ்ப் பயிற்சியினைத் தொடங்கி 21-ம் ஆண்டிற்குள் பெரும்பாலான தமிழ் இலக்கியங்கள், சமய நூல்கள் ஆகியவற்றில் நிகரில்லாப் புலமைப் பெற்றார். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளிடம் எல்லையிலாப் பக்தியுடன் விளங்கினார் என்பது அவரது வரலாற்றின் மூலம் அறியக்கிடக்கின்றது. தமிழ்ப் புலமைக்குச் சற்றும் குறைவில்லாத வடமொழி, ஆங்கிலப் புலமையும் பெற்றிருந்தார்.

மறைமலையடிகள் சிறப்பு வகையில் உலகிற்கு உணர்த்தியருளிய உண்மைகளுள் தமிழர் நாகரிகச் சிறப்பும், சைவ சமய மாட்சியும், சைவ—வைணவ ஒற்றுமையும், புலால் மறுத்தலும் ஆகியவை குறிப்பிடத்தக்கன. தவத்திரு ஞானியாரடிகள் திருமுன்னிலையில் 1905-ம் ஆண்டில் சைவ சித்தாந்த மகாசமாஜத்தைத் தோற்றுவித்தார். 1929-ல் சைவர் மகாநாட்டில் தலைமைதாங்கித் தூயசைவக்கொள்கையும், ஒழுகலாறும் இவையென விளக்கினார். 'சைவ சித்தாந்த ஞான போதம்' என்ற இவரது நூல் சித்தாந்தக் கருத்துக்களை சிறப்புடன் விளக்குவதாகும்.

தவத்திரு மறைமலை அடிகளாரின் வரலாறு முழுமையும் அவரது குமாரர் வித்துவான் மறை. திருநாவுக்கரசு அவர்கள் சுமார் 1000 பக்கங்கள் கொண்ட பெரியதொரு நூலில் விளக்கியுள்ளார். அவ்வரலாறு முழுமையும் இப்பகுதியில்

எங்ஙனம் தரவல்லோம்? அடிகளார் 15.9.1950 விநாயக சதுர்த்தி தினத்தன்று சிவனடி சேர்ந்தார். அன்னரது மறைவுக்குப் பிறகும் அவர் புகழுடலால் வாழ்ந்து வருகின்றூர். அவரது கட்டுரையை நேரிலே பெற்று வெளியிடும் வாய்ப்பு யாம் பெற்றிலோமாயினும், அவரது நூலினின்றும் பழைய வடமொழி நூல்களில் சிவபெருமானின் முழுமுதன்மை எனும் இக்கட்டுரையைத் தொகுத்து அளிக்கும் வாய்ப்பு கிடைத்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகின்ரேம்.

## 9. புலவர் மு. கங்காதரன் எம்.ஏ., பி.டி.,

சிவபெருமான் புகழ்மாலை என்ற வித்துவான் பெ. கு. வரதராசன் அவர்களியற்றிய நூலினைப்பற்றிய ஆய்வுக் கட்டுரையை நமக்கு வழங்கிய திருவாளர் மு. கங்காதரன் அவர்கள் வெகுதானிய ஆண்டு வைகாசித் திங்கள் 3-ம் நாள் செவ்வாய்க்கிழமை உயர்திரு பு. முனிசாமி முதலியார் அவர்களுக்கும், திருவாட்டி சுந்தரவள்ளியம்மையாருக்கும் மகவாய்த் தோன்றினர். இவரது சொந்த ஊர் வட ஆற்காடு மாவட்டம் குருவராயப்பேட்டை என்பதாம். இவர் 1956ல் எஸ். எஸ். எல். சி. தேர்வில் பள்ளியிலேயே முதல் மாணுக்கராகத் தேர்வு பெற்றூர். 1960ல் கரந்தைப் புலவர் கல்லூரியில் முதல் வகுப்பில் புலவர் பட்டம் பெற்றூர். 1966ல் பி. ஏ. பட்டத்தேர்வும், 1969ல் எம். ஏ. பட்டத்தேர்வும முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றூர். 1971ல் சென்னை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பி. டி. பட்டத் தேர்வில் மாநிலத்திலேயே முதல் மாணுக்கராகத் தேர்வு பெற்றூர். 27.6.1961 முதல் தமிழாசிரியராக உயர்நிலைப் பள்ளிகளில் பணியாற்றினர். 1972 நவம்பர் முதல்கல்லூரியில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றூர். கடந்த 8 ஆண்டுகளாக கிருஷ்ணகிரி அரசுக்கலைகல்லூரியில் பணிபுரிந்து வருகிறூர். கட்டுரைகள், கவிதைகள் புனைவதில் வல்லவர். எதனையும தம் நுண்மாண் நுழைபுலங்கொண்டு

ஆய்ந்து அறிவதில் வல்லவர். தான் மேற்கொண்ட எதனையும் செவ்வையாகச் செய்து முடிப்பதில் பேரார்வம் கொண்டவர். தொல்காப்பிய உரையாசிரியர்கள் பற்றிய ஆய்வினை மேற்கொண்டு பி. எச்டி., பட்டம் பெறமுனைந்துள்ளார். இவரது பணி சிறக்கவும், இவர் நீடுழி வாழவும் பார்வதி—பரமேச்வரனைப் பிரார்த்திக்கின்றோம்.

## 10. வித்துவான் தா. ம. வெள்ளைவாரணனர், திருப்பனந்தாள்.

'கற்றோர் ஏத்தும் கலியில் கண்ணுதலோன் பெருமை' என்ற கட்டுரையை இம்மலருக்கு வழங்கிய வித்துவான் தா. ம. வெள்ளைவாரணனர் அவர்கள், "பணிவுடைய வடிவுடையார் பணியினொடும் பனிமதியின், அணியுடைய சடை முடியார்க் காளாக்கும் பதம் பெற்ற, தணிவில்பெரும் பேறுடையார்" என்ற சேக்கிழார் பெருமானின் வாக்கிற்கு இலக்கியமாகத் திகழ்கின்றவர். 1927—ம் ஆண்டு கும்பகோணத்தில் சைவச்செட்டியார் மரபில் தோன்றியவர். இளமை தொட்டே தமிழ் நூல்களிலும், சைவ நூல்களிலும் பெருவிருப்புக் கொண்டு பயின்றவர். 1950—ல் வித்துவான் பட்டம் பெற்றது முதல் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றி வருபவர், திருப்பனந்தாள் மடத்து 20—வது அதிபர் ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் '**மதுரகவி**' என்னும் பட்டம் சூட்டப்பெற்றவர். மதுரை ஆதீனகர்த்தர் அவர்களால் '**திருமுறைச்செம்மல்**' என்ற பட்டம் வழங்கப்பெற்றவர். சைவசமயத்தில் மிக்க உறைப்பும், பற்றும் உள்ளவர். வடமொழி அறிவும் பெற்றவர். சைவசமயச் சொற்பொழிவு ஆற்றுவதில் திறமை உள்ளவர். விரைந்து கவி பாடும் ஆற்றல் உடையவர்.

திரு தா. ம. வெள்ளைவாரணனர் அவர்கள் நீடுழி வாழ்ந்து மேலும் சிறப்புகளெல்லாம் பெற செஞ்சடையப்பர் திருவடிகளில் பிரார்த்திக்கின்றோம்.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# மஹாபாரதம் கூறும் ஸ்கந்த மஹிமை

(வனபர்வாவில் உள்ளது)

தர்ம பிரவசன ரத்னம், உத்தம உபன்யாஸ சக்கரவர்த்தி
மஞ்சக்குடி K.ராஜகோபால சாஸ்திரிகள

ஸ்ரீ மஹாபாரதம் என்ற அரும்பெரும் அத்புதமான இதிஹாஸத்தில் ஸ்ரீ முருகப்பெருமானின் அளவற்ற பெருமையை மார்க்கண்டேயர் கூறுவதை வனபர்வாவில் கண்டு ஸ்கந்த பக்தியைச் செய்ய வேண்டிய அவசியத்தையும் அறிந்து பெருவாழ்வு பெறலாம். முருகப் பெருமானின் பிறப்பு மஹாபாரதத்தில் மாறுதலாக இருப்பது கந்த புராணத்தைப் படித்தவர்களுக்குப் புரியும். நன்றாக ஊன்றி கவனித்தால் மூலகிரந்தமான ஸ்காந்தமும் இதையே சொல்கிறது என்று தெளிவடையலாம். முருகப் பெருமானின் பிறப்பிலிருந்து சில அபூர்வ விஷயங்களை உலகு அறிய மஹாபாரதம் பேருதவி புரிகின்றது. குமரன் ஒருவராக இருப்பதில்லை. அவருடன் இருக்கும் தேவர்கள்,

> க்ரஹா:ஸோபக்ரஹாச்சைவ ரிஷயோ மாதரஸ்ததா |
> ஹுதாசன முகாச்சைவ த்ருப்தா: பாரிஷதாங்கணு: ||
>
> ஏதேசாந்யேச பஹவ: கோரா: த்ரிதிவவாஸிந: |
> பரிவார்யமஹாஸேநம் ஸ்திதா: மாத்ருகணேஸ்ஸஹ ||

ஸ்கந்த மூர்த்தியுடன் க்ரஹங்கள், உபக்ரஹங்கள், ரிஷிகள், தாய்மார்கள், அக்னி பகவான் முதலாக எப்போதும் இருப்பார்கள். ஸ்கந்த மூர்த்தியைச் சேவிப்பவர்கள்

இத்தனை தேவதைகளையும் சேர்த்து ஸேவித்த பலனை அடைவார்கள்.

ஒரு சமயம் இந்திரன் படை பலத்துடன் ஸ்கந்தமூர்த்தியிடம் சண்டையிட வந்தான். அப்போது பகவான் ஸ்கந்தன் தனது முகத்தினாலேயே நெருப்பைக் கக்கி தேவர்களை தகிக்கச் செய்தார். தேவர்கள் நடுங்கி

தஹ்யமானா: ப்ரபன்னாஸ்தே சரணம் பாவகாத்மஜம் |
தேவாவஜ்ரதரம் த்யக்த்வா தத: சாந்திமுபாகதா: ||

தஹிக்கப்பட்ட தேஹத்துடன் தேவர்கள் குமரனைச் சரணமடைந்தார்கள். இந்திரன் மேலும் கோபமடைந்து வஜ்ராயுதத்தை ஸ்கந்த மூர்த்தியின் வலது பார்சுவத்தில் விட்டான். அதனால் ஸ்ரீஸ்கந்த மூர்த்தியின் வலது பார்ச்வம் பிளந்தது. அந்த பாகத்திலிருந்து விசாகன் என்ற மூர்த்தி பிறந்தார்.

தத்விஸ்ருஷ்டம் ஜகாநாசு பார்ச்வம் ஸ்கந்தஸ்ய தக்ஷிணம் |
வஜ்ரப்ரஹாராத் ஸ்கந்தஸ்ய ஸஞ்ஜாத: புருஷோபர: ||

யுவா காஞ்சனஸந்நாஹ: சக்தித்ருக் திவ்யகுண்டல: |
யத்வஜ்ரவிசநாஜ்ஜாத: விசாகஸ்தேந ஸோஷ்யவத் ||

விசாகன் என்ற மூர்த்தி சக்தியை ஏந்தி பிரகாசிக்கிறார். என்றுமே ஸ்கந்தன் விசாகனை விட்டுப் பிரிய மாட்டார். மேலும், இந்திரன் ஸ்ரீஸ்கந்த மூர்த்தியின் மேல் வஜ்ராயுதத்தினால் அடித்ததினால் அந்த விசாகமூர்த்தி பிறந்ததும், அவரிடமிருந்து பெண்களும், பிள்ளைகளும், கன்யகைகளும், குமாரர்களும் பிறந்தார்கள்.

வஜ்ரப்ரஹாராத் கன்யாச்ச ஜக்ஞிரே(அ)ஸ்யமஹாபலா: |
குமாராஸ்தே விசாகம் ச பித்ருத்வே ஸமகல்பயன் ||

இவர்களுக்கு ஸ்கந்த உபக்ரஹங்கள் என்று பெயர். ஸ்ரீஸ்கந்த மூர்த்தியிடம், விசாகருடன் ஸ்கந்த உபக்ரஹங்கள் என்ற கன்யகையும்—குமாரர்களும் இருப்பதைக் கண்டு இந்திரன் விரோதமாக ஸ்ரீஸ்கந்த மூர்த்தியிடம் போர் செய்து தோல்வியடைந்து ஸ்ரீஸ்கந்த மூர்த்தியைச் சரணடைந்து நீங்களே இந்திரனாக இருங்கள் என்று விண்ணப்பித்தான். அப்போது

த்வமேவராஜா புத்ரம் தே த்ரைலோக்யஸ்ய மமைவ ச |
கரோமிகிஞ்ச தே சக்ர சாஸநம்தத் ப்ரவீமி தே ||

தாநவாநாம் விநாசாய தேவாநாம் அர்த்த ஸித்தயே |
கோப்ராஹ்மண ஹிதார்த்தாய ஸேனுபத்யேபிஷிஞ்சமாம் ||

ஸ்ரீ ஸ்கந்தன் இந்திரனிடம் நீயே ராஜாவாக இரு. உனக்கு என்ன வேண்டுமோ அதை பூரணமாக செய்து கொடுக்கிறேன். அஸுரர்களை அழிக்கவும், கோக்களையும், பிராமணர்களையும் ரக்ஷிக்கவும் ஸேனுபதியாக இருக்கிறேன். எனக்கு ஸேனுபதி பட்டாபிஷேகம் செய்யலாம், அப்படியே ஸ்கந்தனுக்கு (குமரனுக்கு) ஸேனுபதி பட்டாபிஷேகம் செய்தார் இந்திரன்.

ஏவம் ஸ்கந்தஸ்ய மஹிஷீம் தேவஸேனும் விதுர்ஜநா: |
ஷஷ்டீம் யாம் ப்ராஹ்மணு: ப்ராஹு: லக்ஷ்மீ மாசாம்ஸுக
ப்ரதாம் ||

தேவஸேனை என்ற பெண்ணையும் இந்திரன் தானம் செய்தார். அவளை ஷஷ்டீ தேவி என்றும் கூறுவர். அவள் லக்ஷ்மீ கடாக்ஷம், ஸுகம் முதலானவைகளைத் தரும தெய்வம் தேவஸேனை. ஒரு சமயம் மாத்ருகணங்கள் என்ற தேவதைகள் ஸ்கந்த மூர்த்தியைப் பார்த்து

வயம் ஸர்வஸ்ய லோகஸ்ய மாதர; கவிபிஸ்துதா: |
இச்சாம: மாதரஸ்துப்யம் பவிதும் பூஜயஸ்வன: ||

நாங்கள் இவ்வுலகுக்கு தாய்மார்கள் என்று கவிகள் கூறுகின்றூர்கள், குமர, உனக்கும் நாங்கள் தாயாராக

இருக்க ஆசைப்படுகிறோம், எங்களைப் பூஜிக்க வேணும். குமரனும் அதைக் கேட்டு கூறினர்.

மாதரோ ஹி பவத்யோமே பவதீநாமஹம்ஸுத: |
உச்யதாம் யன்மயாகார்யம் பவதீநாமதேப்ஸி ம் ||

தாய்மார்களே, நீங்கள் எனக்கு தாயார்கள். உங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும் என்றார். அப்பொழுது தாய்மார்கள்

இச்சாம: தாஸாம் மாத்ருணும் ப்ரஜாபோக்தும் ப்ரயச்சன:

இவ்வுலகில் பிறக்கும் குழந்தைகளை எங்களுக்குக் கொடுத்து விடு என்றார்கள். குமரனும், அப்படியே கொடுத்து விட்டார். மேலும் குமரன் இந்தத் தாய்மார்களை குழந்தைகளை ரக்ஷிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவர்களும் அப்படியே ஆகட்டும் என்றார்கள். அந்த சமயம் ஸ்கந்தனுடைய சரீரத்திலிருந்து நெருப்பு போன்ற ஒரு புருஷன் தோன்றினன்.

தத: சரீராத் ஸ்கந்தஸ்ய புருஷ: பாவகப்ரப: |
போக்தும் ப்ரஜாஸ்ஸமர்த்யாஞம் நிஷ்பபாத மஹாப்ரப: ||

அந்த புருஷன் "ஸ்கந்தாபஸ்மாரக்ரஹமித்யாஹு: க்ரஹம் தம் த்விஜஸத்தமா:" ஸ்கந்த அபஸ்மாரக்ரஹம் என்று பெயர்.

யேச மாத்ருகணு: ப்ரோக்தா: புருஷாச்சைவ யேக்ரஹா: |
ஸர்வே ஸ்கந்தக்ரஹாநாம க்ஞேயாநித்யம் சரீரிபி: ||

இந்த மாதிரி கணங்களையும், புருஷக்ரஹங்களையும் ஸ்கந்த கிரஹங்கள் என்று மனிதனுகப் பிறந்தவன் அறிந்து கொள்ளவேணும். இவர்கள் என்ன செய்வார்கள்? மனித ஸமுதாயத்தில் யாவத் ஷோடச வர்ஷாணி சிசூனும் ஹி அசிவா: தத:. 16 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கு

பலவித வியாதி வருவதைப் பார்த்திருக்கிறோம். அதாவது, கை - கால்களை இழுப்பது, வாய் கிட்டிப்பது, நாக்கைக் கடிப்பது, மூர்ச்சையை அடைவது, புத்தி மாந்தியம், ஸதா ஜ்வரம், வளராமல் இருப்பது, குழந்தைகள் ஸதா கோபப் படுவது, கட்டுப்படாமல் இருப்பது, முரட்டுத்தனமாக இருப்பது, கவனம் இல்லாமல் இருப்பது, நல்வழி தோன்றாமல் இருப்பது போன்ற நிலை குழந்தைகளுக்கு இருப்பதை நாம் காண்கிறோம். அவைகள் தேவக்ரஹம், பிதிருக்ரஹம், ராக்ஷஸக்ரஹம், பைசாசக்ரஹம், யக்ஷக்ரஹம் போன்றவைகள். இவைகள் குழந்தைகளை 16 வயதுக்குள் வளரவிடாமலும், வலிப்பு போன்ற வியாதிகளைத் தோன்றச் செய்கின்றன. இவைகளைப் போக்க, ஸ்கந்த மூர்த்தியையும், மாத்ருகணங்களையும் வழிபாடு செய்ய வேண்டும்.

**தேஷாம் ப்ரசமனம் கார்யம் ஸ்நாநம் தூமமதாஞ்ஜனம் |**
**பலி கர்மோபஹாரச்ச ஸ்கந்தஸ்யேஜ்யா விசேஷத: ||**

இதற்குப் பரிஹாரம் ஸ்நாநம், தூபம், அஞ்சனம், பலி போடுதல், கர்மாவான சாந்தி செய்தல், முருகனை வழிபாடு என்ற முறையில் யாகம் செய்தல் முதலியவைகளாம், ஸ்கந்த கிரஹங்கள்

**ஆஸ்திகம் ச்ரத்ததானம் ச வர்ஜயந்தி ஸதாக்ரஹா: |**
**நஸ்ப்ருசந்திக்ரஹா பக்தான் நரான் தேவம் மஹேச்வரம் ||**

ஆஸ்திகர்களையும், சிரத்தை உடையவர்களையும், பக்தர்களையும், தேவனையும் தொடமாட்டார்கள். மஹாபாரதம் என்ற அரும்பெரும் இதிஹாஸத்தில், மார்க்கண்டேய முனிவர் தர்மபுத்திரரிடம் ஸ்கந்த பக்தி பண்ணவேண்டிய அவசியத்தையும், ஸ்கந்த மூர்த்தி செய்யும் உபஹாரத்தையும் கூறியது மார்க்கண்டேய ஸமஸ்யாபர்வா என்று வனபர்வாவில் உள்ளது. அதில் ஸ்கந்த புராணத்தை விட வேறு சில தர்மங்கள் உள்ளன. அதாவது குழந்தைகளுக்கு வரும் வலிப்பு ஆகியவை மிகவும் கொடுமையானது. அது

எங்கிருந்து உண்டானது, இன்னமும் அதுபோன்ற நோய்கள் எந்த கிரஹத்தினுல் உண்டாகிறது, இதைப் போக்கும் வழி என்ன என்றும், மஹாபாரதம் நோய் ஒழிப்பைத் தெரிவிக்கவே ஸ்கந்த உபாஸனம் அவசியம் என்று கூறுகிறது. ஸ்கந்த பக்தி பலவித ஸௌபாக்கியத்தைக் கொடுக்கும் என்றும் கூறுகிறது.

ப்ரஹ்மப்ரியோ ப்ராஹ்மணஸவ்ரதீத்வம் ப்ரஹ்மக்ஞோ-
வைப்ராஹ்மணுநாம்ச நேதா |
ப்ரஹ்மண்யோவை ப்ரஹ்மஜோ ப்ரஹ்மவிச்வ ப்ரஹ்மே-
சயோ ப்ரஹ்மவதாம் வரிஷ்ட: ||

ஸ்வாஹாஸ்வதாத்வம் பரமம் பவித்ரம் மந்த்ரஸ்துதஸ்
த்வம் ப்ரதித: ஷடர்ச்சி: |
நமோஸ்து தே த்வாதச நேத்ரபாஹோ அத: பரம் வேத்மி
கதிம் நதே(அ)ஹம் ||

பரப்ரம்ம ஸ்வரூபமான ஸுப்ரஹ்மண்யத்தை ப்ரம்ம சப்தத்தால் கொண்டாடி 12 கண்கள் 12 கைகள் உடையவரைவிட வேறு கதி எனக்குக் கிடையாது என்று கூறும் அத்புதத்தை உணர்ந்து சிவஞான பூஜா மலரில் வரும் இந்த கட்டுரையை ஏற்று ஸ்கந்த மூர்த்தியின் கிருபையைப் பெற வேண்டுகின்றோம்.

சிவம்

---

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவின்

# சிவபுராண ஞான பூஜை

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே

சென்ற ஆண்டு மலரில் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவின் 62 - வது சிவஞான பூஜை வரையில் விவரங்கள் கொடுத்திருந்தோம். அதற்கு மேலுள்ள இவ்வருஷத்திய ஞான பூஜையின் விவரங்களைக் கீழே பிரசுரித்துள்ளோம்.

## 1. திருச்செந்தூரில் ஸ்கந்த ஷஷ்டி சொற்பொழிவு

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் அவர்களின் திருவருளாதரவிலும் முன்னிலையிலும் ஸ்கந்த ஷஷ்டியை முன்னிட்டு 28-10-81 முதல் 2-11-81 வரை ஆறு தினங்கள் திருச்செந்தூர் தருமையாதீனத் திருமடத்தில் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவின் கந்தபுராணப் பிரவசனம் நடைபெற்றது. ஸ்கந்த ஷஷ்டியை முன்னிட்டு திருச்செந்தூர் எழுந்தருளிய ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகளும், காஞ்சீபுரம் தொண்டைமண்டலம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குரு மஹாசந்நிதானம் அவர்களும் நாள் தோறும் விஜயம் செய்தருளி, சொற்பொழிவு முழுமையையும் கேட்டருளினார்கள். ஸ்கந்த ஷஷ்டியை முன்னிட்டு திருச்செந்தூர் விஜயம் செய்திருந்த பக்தர்களும், பிரமுகர்களும் சொற்பொழிவைக் கேட்டு மகிழ்ந்தனர். நிறைவு தினமான சூரஸம்ஹார தினத்தன்று ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள்

பட்டாடையும், புத்தாடையும், மேலும் சன்மானமும் வழங்கியருளிச் சிறப்பித்தார்கள். விழா நாட்களில் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகளுடன் திருக்கோயிலுக்குச் சென்றமை யால் செந்திலாண்டவன் விசேஷ தரிசனமும் கிடைத்தது. இது ஆசிரியரின் 63-வது சிவஞான பூசையாகும்.

## 2. ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசி வாசி எஜமான் சுவாமிகளின் திருவருளாதரவில் 28-12-81 முதல் 11-1-82 வரை 15 தினங்கள் திருப்பனந்காள் ஸ்ரீ காசிமடத்தில் ஆசிரியரின் பெரியபுராணச் சொற் பொழிவு நடைபெற்றது. காலை, மாலை இரு வேளைகளிலும் நடைபெற்ற சொற்பொழிவுகளுக்கு ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் நாடோறும் எழுந்தருளியிருந்து முழுமையையும் கேட்டருளினார்கள். நிறைவு நாளன்று ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் விலை உயர்ந்த பொன்னாடை போர்த்தியும், மற்றும் சன்மானங்கள் வழங்கியும் சிறப்புச் செய்தருளினார் கள். இது ஆசிரியரின் 64-வது ஞான பூசையாகும்.

திருப்பனந்தாளில் சொற்பொழிவுக்காகத் தங்கியிருந்த சமயம், ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகளின் ஆதரவினால் சூரியனார்கோவில், திருமங்கலக்குடி, கதிராமங்கலம், மஹா ராஜபுரம், பாஸ்கரராஜபுரம், திருக்கோடிகா, திருக்கஞ்ச னூர், திருவீழிமிழலை ஆகிய திருத்தலங்களின் தரிசனமும் கிடைத்தது.

## 3. சிதம்பரம் - திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அறக்கட்டளைப் பெரியபுராணச் சொற்பொழிவு.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் ஆதரவில் நிறுவப் பட்டுள்ள தில்லைப் பெரியபுராணப் பிரசங்க அறக்கட்டளை யின் சார்பில் இவ்வருஷம் 24.5-1982 முதல் 2-6-1982

வரை 10 தினங்கள் சேக்கிழார் பெருமானின் திருநட்சத்திரமான வைகாசிப் பூசத்தை முன்னிட்டுப் பெரியபுராணப் பிரவசனம் செய்யும் வாய்ப்பு ஆசிரியருக்குக் கிடைத்தது. தில்லைத் தமிழ் மன்றத்தினர் இப்பிரசங்கத்தை நடத்தும் பொறுப்பினை ஏற்றுச் சிறப்பான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். சிதம்பரம் கனகசபை நகரில் உள்ள திருத்தருமை ஆதீனத் திருமடத்தில் இந்த நிகழ்ச்சி நடைப்பெற்றது. தில்லைத் தமிழ் மன்றம் செயலாளர் திரு S. திருநாவுக்கரசுப் பிள்ளையவர்களும், சிதம்பரம் காசிமடம் ஏஜெண்டு திரு. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் நிகழ்ச்சி வெற்றிகரமாக நடைபெற அனைத்து ஏற்பாடும் செய்திருந்தனர். நிறைவு நாளன்று காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் அனுப்பியிருந்த சம்பாவனை வழங்கப்பட்டது.

சொற்பொழிவுக்காகச் சிதம்பரத்தில் தங்கியிருந்த 10 தினங்களிலும் ஸ்ரீ நடராஜப் பெருமானின் ஆனந்தத் திருக்கூத்து தரிசனம் கிடைத்தது ஆசிரியரின் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சியாகும். இவ்வரிய பேற்றினைப் பெறும் வாய்ப்பினை அளித்தருளிய ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகளுக்கு ஆசிரியரின் மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகுக. தில்லைச் சொற்பொழிவு ஆசிரியரின் 65-வது ஞான பூசையாகும்.

## 4. சங்கரன்கோவில் பெரியபுராணச் சொற்பொழிவு

திருநெல்வேலி மாவட்டம், சங்கரன்கோவில் என்ற சிறந்த சிவத்தலத்தில் ஸ்ரீகோமதி அம்பிகை ஸமேத ஸ்ரீ சங்கரலிங்கஸ்வாமி திருக்கோயில் முகப்பு மண்டபம் சேக்கிழார் அரங்கில் 4-7-82 முதல் 28-7-82 முடிய 25 நாட்கள் ஆசிரியர் ஆங்கிரஸ சர்மாவின் பெரியபுராணத் தொடர் சொற்பொழிவு நடைபெற்றது இந்நிகழ்ச்சி சங்கரன்கோவில் ஸ்ரீ அறுபத்துமூவர் குருபூசைக் குழுவின் நிரந்தர வைப்பு நிதி, மற்றும் 6-ம் ஆண்டுவிழாவை

முன்னிட்டு அமைக்கப்பட்டது. இந்நிகழ்ச்சியின் கடைசி 5 தினங்கள் ஸ்ரீ கோமதி அம்பாள் ஆடித்தவசுத் திருவிழா சொற்பொழிவு நிகழ்ச்சியாகவும் அமைந்தது குறிப்பிடத் தக்கது. ஸ்ரீ அறுபத்துமூவர் குருபூசைக் குழுத்தலைவர் திரு ந. சுப்பிரமணிய சிவாசாரியார் அவர்களும், செயலாளர் திரு R. ஆவுடையப்பன் அவர்களும் பெரிதும் உழைத்து இச் சொற்பொழிவினை வெற்றியுடன் நிறைவுறச் செய்தனர். இது ஆசிரியரின் 66-வது ஞானபூசையாகும்.

## ஸ்ரீசிவசுப்பிரமணிய ஸ்வாமி திருக்கோயில், நுங்கம்பாக்கம், சென்னை-34.

சென்னை நுங்கம்பாக்கம் இராமநாயக்கன் தெருவில் உள்ள ஸ்ரீ சிவசுப்பிரமணிய ஸ்வாமி கோயிலில் 16-8-82 திங்கட்கிழமை முதல் 29-8-82 வரை (22-8-82 விநாயக சதுர்த்தி நாள் நீங்கலாக) 13 தினங்கள் ஆவணி மூல நன்னாளை முன்னிட்டு திருவாதிரையான் திருவருட்சபையின் ஆதரவில் ஆசிரியரின் திருவிளையாடற் புராணத் தொடர் சொற்பொழிவு நடைபெற்றது. சபை செயலாளர் திரு. V. சேகர், ஆதரவாளர் திரு K சிவசங்கரன் செட்டியார் ஆகியோரது நன்முயற்சியால் நிகழ்ச்சி சிறப்பாக நிறை வுற்றது இது ஆசிரியரின் 67-வது ஞான பூசையாகும்.

சிவம்

---

### வாழ்க்கைப் பயனை எய்தியவன்

எது பரமசிவனைப் பேசுகின்றதோ அதுவே நாக்கு. எவை அவனைக் காண்கின்றனவோ அவையே கண்கள். எவை அவனைப் பூஜிக்கின்றனவோ அவைகளே கைகள். எவன் அப்பெருமானை எப்பொழுதும் தியானிக்கின்றானோ அவனே வாழ்க்கைப் பயனை எய்தியவனாவான்.

— ஆதிசங்கரர்: சிவானந்த லஹரீ— 94

உ

சிவமயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை

(பதிப்பாசிரியர் அறிக்கை)

தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாள்முக்கட்
செங்கரும்பே மொழிக்கு மொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்கும் திருச்செவிக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்றுமோதான்.

—தாயுமான சுவாமிகள்.

மேலே கொடுத்துள்ள தாயுமான சுவாமிகள் பாடலி லுள்ள "மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந்தமிழ்" என்ற சொற்றொடரை அடியொற்றி "மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை" வெளியீடு பற்றிய விவரங் களைச் சென்ற ஆண்டு மலரில் விரிவாகக் கொடுத்துள்ளேன். திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கட்கு அவர்கள் யாத்திரை செய்த முறையினைப் பின்பற்றிப் பதிக அமைப்பு, பொழிப் புரை, விசேடவுரை, பதிகவரலாறு, தலவரலாறு, புராண வரலாறு ஆகியவற்றுடன் பதிப்பிக்க உறுதி கொண்டு இதுவரை 12 தமிழ்மாலைகள் வெளிவந்துள்ளன. முதலில் திருஞானசம்பந்தர் தேவாரவுரை வெளியிடப்பட்டு வரு கிறது. ஆதரவுக் குறைவினால் தாமதப்பட்டு மாலைகள் வெளிவருகின்றன. சிவஞான பூஜா மலர் வெளியீட்டின் நோக்கங்களுள் இத்தமிழ் மாலைப் பதிப்புக்கு உதவுவதே முக்கியமானதாகும். மேலும் மேலும் சந்தா சேர்ந்து சைவமெய்யன்பர்கள் உதவிசெய்தால் விரைவாகத் தமிழ் மாலைகள் வெளிவர உதவியாக இருக்கும்.

## மூவர் தமிழ் மாலை சந்தா விகிதங்கள்

முதல் ஆறு தமிழ் மாலைகள் :

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி | ரூ. | 2-00 |
| 1 முதல் 6 வரை தமிழ் மாலைகள் சேர்த்து | ரூ. | 10-00 |

ஏழாவது தமிழ் மாலை முதல் :

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி | ரூ. | 3-00 |
| ஒவ்வொரு 6 தமிழ் மாலைகள் தொகுதி | ரூ. | 15-00 |
| 1 முதல் 108 தமிழ்மாலைகளுக்கும் முன்பண உதவிச் சலுகை விலை | ரூ. | 158-00 |

சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். ஒரு ஆண்டுக்குள் தவணைகளாகவும் செலுத்தலாம். முன் பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ்மாலை கள் உடனடியாக அனுப்பப்பட்டு, மற்றவை பிரசுரமான தும் உடனுக்குடன் அனுப்பிவைக்கப்படும்.

சென்ற மலரில் முன்பண உதவிச்சலுகை விலை அளித்த வர்கள் 74 பெயர்களை பிரசுரித்திருந்தேன். அதற்குப்பின் உள்ள சந்தாதாரர்களின் பெயர்களைக் கீழே கொடுத் துள்ளேன்.

1. K. அம்பிகேச்வர ஐயர், வனவாசி P.O., சேலம் ஜில்லா.
2. H. கைலாஸம், C/o டுபாக்கோ போர்டு, சென்னை-6.
3. A. சாம்பசிவம் ஐயர், மேலமாம்பலம், சென்னை-33
4. லிட்டில் ப்ளவர் கம்பெனி (லிப்கோ) சென்னை-17.
5. புலவர் M கமலசேகரன், திருநெல்வேலி,
6. E. அமராவதி நாடார், கமிஷன்மெர்ச்சன்ட், சங்கரன் கோவில் P.O.
7. N. சந்திரசேகரன், செயின்ட் ஜோசப் கல்லூரி, திருச்சி-2.
8. T. K. நடராஜ சர்மா, பாட்டைபுலியூர், தருமபுரி Dt

9. B. V. கந்தசாமி மணியகாரர், பாரூர், தருமபுரி ஜில்லா.
10. N. சுந்திரமூர்த்தி நயினார், அரசம்பட்டி P.O, தருமபுரி
11. V. சண்முகம், பாரூர், தருமபுரி ஜில்லா.
12. R. பாலசுப்பிரமணிய செட்டியார், நடராஜவிலாஸ் ஜீவெல்லரி ஹால், சிதம்பரம்.
13. அறச்சுடர், K. முத்துலிங்கா ரெட்டியார், சென்னை-31.
14. P. S. கிருஷ்ணமூர்த்தி, சேலம் கேம்ப், சேலம்—636456
15. N. S. சுந்தரராமன், மதுரை—1
16. S. P. லக்ஷ்மணன் செட்டியார், சென்னை—17.

மற்றும் சிலர் ஆறு புத்தகங்கட்குரிய தொகை செலுத்தியும், சிலர் தனிப்பிரதிகள் அவ்வப்பொழுது பணம் செலுத்தியும் பெற்றுக் கொள்கிறார்கள். மற்றும் சிலர் தவணைகளாகச் சந்தா செலுத்தவும் ஒப்புக் கொண்டுள்ளனர். ஆதரவு நல்கும் அனைவருக்கும் அடியேனது மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகுக.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

## 1981 சிவஞான பூஜா மலர்-
## நன்கொடைப் பட்டியல்

சென்ற ஆண்டு மலர் வெளியீடு ஆகிப் புத்தகங்கள் பெற்றுக் கொண்ட அன்பர்களில் சிலர் புத்தகவிலைக்கும் மேலாகவே பணம் அனுப்பி ஆதரித்தனர். புத்தகவிலை உள்பட ரூ. 10/-ம் அதற்கு மேலும் அனுப்பியவர்களின் பெயர்களை மட்டும் கீழே கொடுத்துள்ளோம்.

